# புலவர் அகராதி

(சுருக்கம்)

[பிற்சேர்க்கையுடன் கூடியது]

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.


தொகுப்பாசிரியர்:

வித்துவான். பா. வே. கோபாலன்

தமிழாசிரியர்.





வெளியீட்டாளர்:

M. துரைசாமி முதலியார் & கம்பெனி,

*1-1, மலையபெருமாள் தெரு, சென்னை-1.*





*1957.*

[விலை ரூ. 3.

# பதிப்புரை

—:o:—

இப்பாரில் வழங்கும் செம்மை சான்ற மொழிகளுள் நம் தமிழ்மொழி தலை சிறந்தது என்பதை அனைவரும் அறிவர். கன்னித் தமிழன்னையின் தவப் புதல்வர்களாய் விளங்கிய டாக்டர். உ. வே. சாமிநாதய்யர், அமரகவி, சுப்பிரமணிய பாரதியார், பண்டிதமணி. மு. கதிரேசஞ் செட்டியார், தேசிகவிநாயகம் பிள்ளை, திரு. வி. கலியாண சுந்தரனார் உள்ளிட்ட பலர் தத்தம் பேருழைப்பால் துச்சலிற் கிடந்த தமிழன்னையை அரியணையில் ஏற்றி, புத்தம்புதிய போர்வையால் அணி செய்து அருந்தொண்டாற்றினார்கள் என்பது வெள்ளிடைமலை. அவர்களின் சீரிய வாழ்க்கை வரலாற்றை நாம் அறிய வேண்டுமன்றோ?

அறிவுக் களஞ்சியமாகத் திகழும் புலவர் பெருமக்களின் வரலாற்றைச் சுருக்கமாக பாமர மக்கள் அனைவரும் படித்து இன்புறும் வண்ணம் செவ்விய முறையில் தொகுத்துப் "**புலவர் அகராதி**" என்னும் பெயருடன் இந்நூலை வெளியிட்டுள்ளோம்.

இவ்வகராதியில், புலவர் குறிப்பு, இலக்கிய வரலாறு, பொதுப் பிழைக் களைவு முதலியன இடம்பெற்றுள்ளன. இந்நூல் உயர்நிலைப்பள்ளி மாணவர்கட்கேயன்றி, தமிழாசிரியர்கட்கும், தமிழன்பர்கட்கும் உறுதுணையாய் விளங்கும் என்பது ஒருதலை. ஆசிரியர் வரலாற்றைத் தேர்வில் எழுத இடர்படும் மாணவர்கட்கு இது கலங்கரை விளக்கம் போன்றது.

ஒவ்வொருவரும் இச்சிறிய அகராதியை வாங்கிப் படித்துப் பயனடைய வேண்டுமென்பதையே குறிக்கோளாகக்கொண்டு மிகக் குறைந்த விலையில் நிறைந்த பக்கங்களுடனும், பிற்சேர்க்கையுடனும் வெளியிடத் துணிந்தோம்.

இவ்வகராதியிற் கண்டுள்ள புலவர் பெருமக்களின் வாழ்க்கை வரலாறுகளைத் துருவித் துருவி ஆய்ந்து, பன்னெடு ஆண்டுகளாக உழைத்து, எமக்குத் தொகுத்துத் தந்துதவிய வித்துவான் பா. வே. கோபாலன் அவர்கட்கு எமது நன்றி உரித்தாகுக.

இந்நூலின் திருத்தம் பற்றிய பொன் மொழிகளை எவரேனும் எடுத்துரைப்பின் அவைகளை நன்றியறிவுடன் அடுத்த பதிப்பிற் பயன்படுத்திக் கொள்வோம். வணக்கம்.

வாழ்க தமிழ்!

சென்னை - 1.
நாள்: 1–4–'57.

பதிப்பகத்தார்.

# மதிப்புரை

நம் அருமைத் தமிழ்மொழி இலக்கிய வளம் நிரம்பிய மொழிகளுள் ஒன்றாகும். தொன்று தொட்டு இன்றுவரை இலக்கியத்தின் எல்லாப் பிரிவுகளிலும் வளர்ச்சியடைந்து வந்திருக்கிறது. காவியங்கள் தனிப்பாடல்கள், புராணங்கள், உரைநடை, சிறுகதை, நாவல் முதலிய எல்லாத் துறைகளிலும் இந்நாட்டு மொழிகள் அனைத்தைக் காட்டிலும், பெருவளர்ச்சியைப் பெற்றிருப்பது நமது தமிழ் மொழி. அத்தகைய வளர்ச்சிக்குக் காரணமாயிருந்த கவிஞர்கள், உரையாசிரியர்கள், நாவலாசிரியர்கள், சிறுகதை எழுத்தாளர்கள் முதலியோரைப்பற்றித் தெரிந்துகொள்வது அவசியமாகும். தமிழ் இலக்கிய வரலாற்றில் தோன்றிய எல்லா முக்கியமான புலவர்களைப்பற்றியும் சிறிதாவது தெரிந்துகொள்ள வாய்ப்பளிக்கிறது, கிருஷ்ணகிரி கழக உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் திரு. பா. வே. கோபாலன் அவர்கள் எழுதிய இந் நூல். தமிழ்ப்புலவர் அகராதி என்ற இத்தொகுப்பு "புலமை" என்ற அடிப்படையில் இலக்கிய வளர்ச்சிக்கு உதவிய எல்லாத் தமிழறிஞர்களைப் பற்றியும் கூறுகிறது. இந்நூல் தமிழ்ப் புலவர்களைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் உள்ள அனைவர்க்கும், குறிப்பாக மாணவருக்கும் பேருதவி புரியும் என்று எண்ணுகிறேன். இன்றைய அறிஞர்களைப்பற்றிய குறிப்புகள் கொடுத்திருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது. பிற்சேர்க்கையில் காணப்படும் இலக்கியச் சுருக்கம் தமிழில் தோன்றிய பண்டைய இலக்கிய நூல்களைப்பற்றி அறிந்துகொள்வதற்கு இடமளிக்கின்றது. அவ்வகையில் நூலாசிரியர் மாணவருலகத்திற்குப் பெருந்துணையளித்துள்ளார் என்று கூறலாம். இந்நூல் மாணவர்களுக்குத் தமிழிலக்கியத்தைப் பற்றியும், தமிழறிஞர்களைப்பற்றியும் இன்னும் விரிவாக அறிந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்தை எழுப்புதல் மூலம், நமது மொழியின் வருங்கால வளர்ச்சிக்குப் பெருஞ் சேவை செய்கின்றது என்று சொல்லலாம்.

கிருட்டினகிரி
1–4–'57.

**பு. ரா. பக்கிரிசங்கர்.**
மாவட்ட முறைமன்றத் தலைவர்.

# உள்ளுறை



---

## பிழை—திருத்தம்

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 8. | அமாவாசி | அமாவாசை |
| 10. | ஊராம | ஊராம் |
| 32. | இற்றியவர் | இயற்றியவர் |
| 33. | அகநா நூறு | அகநா னூறு |
| 41. | அதிகமான் | அதியமான் |
| 51. | மேற்கொண்டுள்ள | மேற்கொண்டிருந்த |
| 53. | பாடபுத்தகம் | பாடப்புத்தகம் |
| 79. | தருமபுரி | தருமபுர |
| 80. | பஞுச | பஞ்ச |
| 82. | திருமுணைப்பாடி | திருமுனைப்பாடி |
| 84. | ஆங்கிலக | ஆங்கிலக் |
| 86. | கலைசை | கலை |
| 91. | பேராசிரியர் | தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் |
| 94. | தூய | தாய |
| 123. | முதலிய | ஆகிய |
| 142. | அதிகமான் | அதியமான் |
| 144. | சமயதலைவர் | சமயத்தலைவர் |
| 153. | சொற்பொழிவாளராகப் | பேராசிரியராகப் |
| 180. | | பத்துப் பாட்டு |

# அட்டவணை

—:o:—

| எண் | பெயர் | பக்கம் |
|---|---|---|

# தமிழ்ப் புலவர் அகராதி

—:*:—

## அகத்தியர்

இவர் பாண்டி நாட்டின் தென் பகுதியில் உள்ள பொதிய மலையில் வாழ்ந்தனர்; தமிழ் அறிஞர்களில் முந்தியவர்; குறுமுனி, குடமுனி எனப்படுபவர்; மதுரையில் தமிழ்ச் சங்கத்தை நிறுவியவர்; "பேரகத்தியம்" என்னும் சீரிய நூலை இயற்றியவர்; இவருடைய மாணவர்களில் சிறந்தவர் தொல்காப்பியர். அகத்தியரைப்பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன; காவேரி கொணர்ந்தார் என்றும், விந்தம் அடக்கினரென்றும், கடல் குடித்தார் என்றுங் கூறுகின்றனர். இவர் வட நாட்டிலிருந்து வந்ததாகவே, தொல்காப்பிய உரையிலும், புராணக் கதைகள் பலவற்றிலும் காணலாம். அகத்தியர் முதற் சங்கப் புலவராய் இருந்தார் என்றுங் கூறுவர்; தொல்காப்பியர்க்கு அகத்தியர் ஆசிரியராய் இருந்தது உண்மையாகில், இருவரும் ஒரே காலத்தவர் என்று கூறுவதில் ஐயமின்று; சுருங்கக் கூறுமிடத்து, இவர் பாணினி காலத்தவர் என்று துணிந்து கூறலாம். சிவபெருமானின் கட்டளைப்படி அகத்தியர் நக்கீரனர்க்குத் தமிழ் இலக்கணம் அறிவுறுத்தருளினர் என்று திருவிளையாடற் புராணத்தால் அறியலாம். இவர் இன்னும்

"பொதிய மலையில்" வசிக்கின்றனர் என்று தமிழ் அறிஞர் பலர் கூறுகின்றனர்.

இவர் இயற்றிய "பேரகத்தியம்" எனும் நூல் 12,000 பாக்களை உடையது; முத்தமிழ் இலக்கணமும் அடங்கியது. இவர் சிவநெறி யாளர் என்ப.



## அடியார்க்கு நல்லார்

அடியார்க்கு நல்லார் என்னும் பெயர் "அடியார்க்கு நல்லவர்" என்று பொருள்படும்.

**நாடு :—**கொங்கு நாடு.

**ஊர் :—**† நிரம்பை. "குருவை யுணர்ந்த இளங்கோ வடிகளுட் கொண்டு சொன்ன" என்ற பாடலே இதற்குப் போதிய சான்றும்.

**சமயம் :—**சைவம்.

**ஆதரித்த வள்ளல் :—**பொப்பண்ண காங்கேயர்கோன்.

### வாழ்க்கை வரலாறு

† "நிரம்பையர் காவலன்" என்பதனல், இவர் ஒரு சிற்றரசராக இருக்கலாம். இவர் சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதியவர். இவர் பண்டைக் காலத்து உரை ஆசிரியர்களுள் ஒருவர். இவர் தம்முடைய உரையிலே பல நூல்களை மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார். இவர் எடுத்துக் காட்டியுள்ள மேற்கோள்கள் இன்னின்ன நூலின்கண் உள்ளனவென்று குறிப்பிட்டுள்ளார்.

## அதிமதுர கவி

இவர் திருமலைராயன் அவையின்கண் வீற்றிருந்த புலவர்களில் தலையாயவர்; இனிமை பயக்கும் கவி பாடுந் திறத்தால் இப் பெயர் பெற்றார் என்ப; காளமேகப் புலவர் திருமலைராயன் அவையில் கவி பாடி வந்து வீரங் கூறிய போழ்து, தமது வீரத்தையும் ஒரு கவியாற் கூறினவர். "காராமணி" என்பதற்குப் பிரதியாகக் 'கார்' – மேகம்; 'ஆ' – பசு; 'மணி' – இரத்தினம்; எனக் கொண்டு, காளமேகப் புலவர் வாசஞ் செய்த கடைச் சாலையிலே, "மேகமும்-பசுவும்-இரத்தினமும் விலைக்கு வாங்கி வருக" என, ஒருவனைக் கடைக்கு அனுப்பினார். கடை வியாபாரி காளமேகப் புலவராற் காராமணிப் பயிறு என்று தெரிந்து, அதை அனுப்பி வைத்தான் என்று ஒரு கதை வழங்குகிறது. இதனால் அவர் இரட்டுறமொழிதலில் வல்லவரென்றும் சிறந்த கவிவாணர் என்றும் தெரிகிறது.



## அதிவீரராம பாண்டியர்

இவர் பல தமிழ் நூல்களை இயற்றிய பாவலர்; இற்றைக்கு 300 ஆண்டுகட்கு முன், நாற்பது ஆண்டுகள் தென் காசியில் அரசு புரிந்தவர்; இவருடைய தந்தை "நெல்வேலிப் பாண்டியர்" என்ற குலசேகரர்.

"தந்தையினும் சத மடங்கு தனயன்" என்னும் பழமொழிக்கிணங்க, இவர் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினர். இவர் இளமையிலேயே சங்க இலக்கிய இலக்கணங் களையும், இதிகாச புராணங்களையும் ஐயந் திரிபறக் கற்றவர்; தக்க பருவமடைந்ததும், விரைவில் கவிகளைப் புனையும் திறமை பெற்றார்; இக்காவலர் தன்மையை அறிந்த பாவலர் பலர், அவர்பால் வந்தனர்; அங்ஙனம் வந்தவரில் பரணி பாடுவோர்க்குத் தரணியும், மும்மணிக் கோவை மொழிவோர்க்கு மும் மணிக் கோவையும், நான்மணி மாலை பாடு வோர்க்கு நான்மணி மாலையும் பரிசிலாகத் தந்தார்; நாடு முழுதும் பாவலர் நிரம்பி யிருந்தனர்; சுருங்கக்கூறின், காவலரும் பாவல ராயினர் என்று கூறலாம். அவர் எப் புலவ ரிடமாவது தோல்வியுற்றால், அவர் கையால் குட்டுண்டார்; மேலும் தமக்குத் தோற்ற புலவரைத் தாமும் 'குட்டி' வந்தார். ஆதலின், இவரைப் பலர் 'பிள்ளைப் பாண்டியன்' என்பர். "குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டிய னிங்கில்லை" என்னும் தொடரே இதற்குப் போதிய சான்றாகும். இவர் சித்திரக் கவி பாடுவதிலும் சிறந்தவர். இவர் நளனுடைய சரிதையை விருத்தப் பாக்களில் எழுதி முடித் தார். இது ஒரு கற்பனைக் களஞ்சியமென்றும், பஞ்ச காவியத்திலும் சிறந்ததென்றும் புகழ்ந் துரைத்தனர்.

**இவர் இயற்றிய நூல்கள்:**

1. காசி காண்டம்.
2. கூர்ம புராணம்.
3. நைடதம்.
4. நறுந்தொகை என்ற வெற்றி வேற்கை.



## அந்தகக்கவி வீரராகவர்

**பிள்ளைத் திருநாமம்:**—வீரராகவர். குருடரும் புலவருமாதல்பற்றி இங்ஙனம் அழைக்கப்பெற்றார்.

**நாடு:**—தொண்டை மண்டலம்.

**ஊர்:**—செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள பொன் விளைந்த களத்தூர்.

**தந்தை:**—வடுகநாத முதலியார்.

**சமயம்:**—சைவம்.

**குலம்:**—வேளாளர்.

**வரலாறு**

இவர் "ஏடாயிரங் கோடி யெழுதாது தன் மனத்தெழுதிப் படித்த விரகர்"; சீட்டுக் கவிகள் பாடுவதில் வல்லவர். இவர், பிறவிக் குருடர்; இளமையிலேயே கல்வி, கேள்வி களிற் சிறந்து விளங்கியவர்; நாற்கவிகளையும் எளிதில் பாடும் புலமை பெற்றவர். இவர் ஒரு நாள், தேச யாத்திரை செய்யப் புறப்பட்டார். அச் செய்தியைப் பணியாளன் மூலம் தன் மனைவிக்குத் தெரிவித்தார். அவ்வம்மையார்

பரிகாசமாக, "முதலியார் யானைக் கன்றும், வள நாடும், பொற் குவியலும் கொண்டு வருவரோ" என்று வினவ, அவ் விழி சொல் அவர் மனத்தைப் புண்படுத்தியது; அன்றே, (மீண்டும்) தேச யாத்திரையின் பொருட்டுப் பற்பல நாடுகளுக்குஞ் சென்று, பல வள்ளல் களை நாடிப் பரிசு பெற்றுத் திரும்பினர். இவரது பாடல்கள் படிக்கப் படிக்கப் பேரின்பத்தைத் தருவன.

**இயற்றிய நூல்கள்:**

1. சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்.
2. சந்திரவாணன் கோவை.
3. திருவாரூருலா.
4. திருக்கழுக்குன்றப் புராணம்.
5. திருக்கழுக்குன்ற மாலை.
6. சேயூர்க் கலம்பகம்.
7. கயத்தாற்றரசனுலா.
8. சீட்டுக் கவிகள் பல.



## அப்பர்

இவருக்குத் 'திருநாவுக்கரசர்', 'வாகீசர்' என்னும் மறு பெயர்களும் உண்டு.

**நாடு:**—நடுநாடு (திருமுனைப்பாடி).
**ஊர்:**—திருவாமூர்.
**குலம்:**—வேளாளர்.
**காலம்:**—மகேந்திரவர்மனுடைய காலம்.
**பிள்ளைத் திருநாமம்:**—மருணீக்கியார்.
**பெற்றோர்:**—புகழனர்-மாதினியார்.

வரலாறு

இவர் உலக நிலையாமையை யுணர்ந்து, அறமுணர்ந்து, ஆருகதமே உண்மை நெறியெனக் கருதி, அம்மதத்தைத் தழுவி ஒழுகலாயினர்; சமண நூல்களை ஐயந் திரிபறக் கற்றவர்; பலருக்கும் கற்பித்தவர்; "தருமசேனர்" என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றவர். இவர் சூலை நோயால் வருந்தினர்; பின்னர், ஆருகதத்தை விட்டுச் சைவத்தைக் கடைப் பிடித்தார். இவரை மகேந்திரவர்மன் பலவாறு துன்புறுத்தினன். இவர் பாடிய பதிகங்களின் தொகை 49,000. இப்பொழுது உள்ளன 311.

இவர் சைனராயிருந்தபொழுது, பௌத்தரோடு வாதஞ் செய்து வென்றனர். இவர் பல்லவ அரசனாகிய மகேந்திர வர்மனைச் சைவனாக்கினர்.



## அபிராமி பட்டர்

நாடு:—சோழ மண்டலம்.
ஊர்:—திருக்கடவூர்.
குலம்:—வேதியர்.
சமயம்:—சைவம்.

வரலாறு

இவர் தேவி வழி பாட்டிற் சிறந்தவர்; ஒருகால் தஞ்சைச் சரபோசி மகாராசாவுக்கு

அமாவாசியைப் பௌர்ணமி என்று கூறி விட்டார். அதை மெய்ப்படுத்த உமாதேவி யைக் குறித்து விண்ணப்பித்தாராம். கீழே ஒரு குழியை வெட்டி நெருப்பெரிய விட்டு, மேலே தூக்கிய உரி யொன்றிலே ஏறியிருந்து, பின் வருமாறு விண்ணப்பித்தாராம். "தேவி! நீ அருளாதொழியின் நான் நெருப்பிலே வீழ் வேன்" என்று வஞ்சினங் கூறினராம். ஓர் அந்தாதி பாடினராம். "விழிக்கே யருளுண்டு" என்ற ஒரு பாடலைப் பாடி முடியவும், தேவி தோன்றி, தன் காதுத் தோடுகளுள் ஒன்றைக் கழற்றி வானத்தில் வீசி பௌர்ணமி காட்டப் பெற்றவர். பின்னர், தான் பாட நினைத்த அந்தாதியைப் பாடி முடித்தார். இவ்வந்தாதி "அபிராமியந்தாதி" எனப்படும். அதில், ஒரு பாடல் ஈண்டு எடுத்துக்காட்டாகக் காட்டப் பட்டுள்ளது.

**"விழிக்கே யருளுண் டபிராம வல்லிக்கு வேதஞ் சொன்ன**
**வழிக்கே வழிபட நெஞ் சுண் டெமக்கவ் வழிகிடக்கப்**
**பழிக்கே சுழன்று வெம் பாவங்களே செய்து பாழ்நரகக்**
**குழிக்கே யழுந்துங் கயவர் தம் மோடென்ன கூட்டினியே"**



## அமுதசாகர முனிவர்

இவர் ஜைன முனிவர்; "யாப்பருங்கலம்" "காரிகை" என்ற செய்யுள், இலக்கண நூல் இரண்டையும் எழுதியவர்; குணசாகரர் என்ற

பெரியாரின் மாணாக்கரென்பதை "யாப்பருங் கலப்பாயிரத்தால்" அறியலாம். "அமித சாகர னெடுந் தமிழ்த் தொகுத்த காரிகைக் குளத் தூர்" என்று சாசனத்தில் கூறப்படுவதால், இவர் காரிகையைக் குளத்தூரில் செய்தனர் என்று தெரிகிறது.

யாப்பருங்கலத்தின் சிறப்புப் பாயிரத்தில் "அளப்பருங் கடற்பெய ரருந்தவத் தோனே" என்று கூறியிருப்பதால், "அமித"மென்னுஞ் சொல் அளப்பரும் என்று பொருள்படும். அருங்கலான் வயத்தைச் சேர்ந்தவராதலால், "யாப்பருங்கலம்" என நூலுக்குப் பெயர் இட்டனர். இவருடைய காலம் பத்தாம் நூற்றுண்டாயிருக்கலாம்; அல்லது பதினேரும் நூற்றுண்டின் துவக்கமாயிருக்கலாம்.



## அரங்கநாத முதலியார், எம். ஏ., (பூண்டி)

**நாடு :**—தொண்டை நாடு.

**ஊர் :**—திருவள்ளூர் என வழங்கும் திருவெவ்வுளூரை யடுத்த பூண்டி என்னும் சிற்றூர்.

**தந்தை :**—பூண்டி—சுப்பராய முதலியார்.

**காலம் :**—1844.

**வரலாறு**

இவர், சென்னை-பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் பயின்று, தமது பதினெட்டாம்

வயதில் பள்ளி இறுதித்தேர்வில் முதல்வராகத் தேறினர்; பின்னர், அரசியலார் கல்லூரியிற் சேர்ந்து பயின்று, இரு கல்லூரித் தேர்வுகளிலும் முதல்வராகத் தேறினர். இவர் கணிதத்தில் வல்லுநர்; இவர் எம். ஏ., தேர்வில் தேர்ச்சி பெற்றார். சென்னை அரசியலார் கல்லூரியில் கணிதப் பேராசிரியர் பணியேற்று நடத்தி வந்தார். இவர் கணிதத்திலே யன்றி, பல்வகைத் துறைகளிலும், தனித் தனியே சிறந்தவர் என்று புகழுமாறு விளங்கினர். டாக்டர் - டங்கனும், இவரைப் புகழ்ந்து போற்றியுள்ளார். இவர் "கச்சிக் கலம்பகம்" என்னும் அரிய நூலை இயற்றியுள்ளார். இவர் **1893**-ம் ஆண்டில் புகழுடம்பு எய்தினர்.



## அரிசில் கிழார்

இப்பெயர், இவர் பிறந்த ஊர்ப் பெயராக இருக்கலாம். "அரிசில்" என்பது, அரிசிலாற்றங்கரையில் விளங்கிய ஓர் ஊராம. இக்கிழார், வேளாண் குடித் தோன்றல்; இவ்வூர், இக்காலை "அரியிலூர்" என்னும் பெயரால் வழங்குகிறது. "கிழார்" என்ற பட்டம், வேளாளர்க்கே உரியது. அதுபற்றி இவர் வேளாளராகவே இருக்க வேண்டும். இவர் பாக்களை அழகுறப் புனைவதில் வல்லுநர். பேகன் என்னும் வள்ளல், தம் மனைவியைத் துறந்து ஒழுகும் செய்தியை அறிந்து, அற

நெறிக்கு மாருக அவன் அது செய்தலாகாது என்பதை அவனுக்கு வலியுறுத்திக் கூறிய புலவர்களில் இவரும் ஒருவராவர். இவர், தகடூரெறிந்த பெருஞ் சேரலிரும் பொறை என்னும் அரசன்மீது எட்டாம்பத்தைப் பாடி (பதிற்றுப் பத்து) ஒன்பது நூருயிரம் பொற் காசு பரிசில் பெற்றதன்றி, அவன் கொடுத்த சிங்காதனத்தை அவனுக்கே மீட்டும் இரந்து கொடுத்து அவன்பால் அமைச்சுரிமை பூண்டு விளங்கினுர்.

**இவர் பாடிய பாடல்களாவன:**

பதிற்றுப் பத்தில் ஒன்று (எட்டாம் பத்து).

குறுந்தொகையில் ஒன்று.

புறநானூற்றில் ஏழு.

திருவள்ளுவ மாலையில் ஒன்று.

தகடூர் யாத்திரையில் ஒன்று. (ஆக — 20.)



## அருணகிரிநாதர்

இவர் பதினைந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்த புலவர். இவர், தமிழ் நாட்டில் முருகக் கடவுள் கோயில் கொண்டுள்ள இடங்களையெல்லாம் தன் திருப்புகழ்க் கவி மணிகளால் இழைத்து அலங்கரித்த பெரியாராவர். திருப்புகழ்ப் பதிப்பில் இவருடைய வரலாற்றை அறியலாம். அருணகிரிநாதர்,

பாரதம் பாடிய வில்லிபுத்தூரர் காலத்தவர் என்பது பெருவழக்கு. இவர் அவதரித்ததும், அருள் பெற்றதும், திருப்புகழ்களை மிகுதியும் ஓதியதுமான இடம், திருவண்ணுமலைப் பதியே யாகும். இவர்க்கு அண்ணுமலை நாதர் என்ற பெயர் வழக்கும் உண்டு என்பர். இவரது ஊர் முல்லண்டிரம்.



## அருணந்தி சிவாச்சாரியர்

**ஊர்** :—நடுநாட்டிலுள்ள திருத்துறையூர்.

**குலம்** :—ஆதி சைவ வேதியர் குலம்.

**காலம்** :—இற்றைக்கு ஏறக்குறைய 600 ஆண்டுகட்கு முன்னர்.

### வரலாறு

இவர் இலக்கண இலக்கியங்களையன்றிச் சைவாகமங்களையும் நன்கு கற்றவர்; சகலாகம பண்டிதர் என்னும் பெயரைப் பெற்றவர். மெய்கண்ட தேவருடைய சீடர்களிலே தலையாயவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. சிவஞான சித்தியார்.
2. இருபாவிருபஃது என்னும் சித்தாந்த சாத்திரங்கள்.

## அருணசலக் கவிராயர்

**பிறப்பிடம்:**—சோழ மண்டலம்-தரங்கம்பாடியைச் சார்ந்த தில்லையாடி என்பர். சீர்காழியில் வதிந்து வந்தனரெனவும் கூறுவர்.

**குலம்:**—வேளாளர்.

**சமயம்:**—சைவம்.

**காலம்:**—1712-1777.

**பெற்றோர்:**—நல்லதம்பிப் பிள்ளை—வள்ளியம்மையார்.

### வரலாறு

இவர் தருமபுரவாதீனத்து வெள்ளியம்பலத் தம்பிரானுடைய மாணவர். இராமாயணம் முதலிய இலக்கியங்களையும், ஐந்திலக்கணங் களையும் கசடறக் கற்றவர். இராமாயணக் கதையை நாடகமாகப் பாடியவர் இவரே.

**பாடியவை:**

1. இராம நாடகம்.
2. தனிச் செய்யுட்கள் பலப் பல.
3. சீகாழித் தல புராணம்.
4. சீகாழிக் கோவை.

பொதுவாக இவையெல்லாம் எதுகை, மோனை நயம் மிக்கவை.

## அழகிய சிற்றம்பலக் கவிராயர்

**ஊர் :**—பாண்டி மண்டலத்துச் சிவகங்கையைச் சேர்ந்த மிதிலைப்பட்டி.

**சமயம் :**—சைவம்.

**காலம் :**—இற்றைக்கு 200 ஆண்டுகட்கு முன்.

இவர் கட்டளைக் கலித்துறை பாடுவதில் வல்லவர்; தளவாய் இரகுநாத சேதுபதி யரசர்மீது, "தளசிங்க மாலை" பாடியவர்.



## அழகிய சொக்கநாதப் பிள்ளை

**நாடு :**—பாண்டி நாடு.

**ஊர் :**—நெல்லையம்பதியையடுத்த தச்சநல்லூர்.

**காலம் :**—சற்றேறக்குறைய 60 ஆண்டுகட்கு முன்.

**ஆதரித்த வள்ளல் :**—முத்துசாமிப் பிள்ளை.

### குறிப்புகள்

இவர், தமிழ்ப் புலமை நிரம்பியவர்; திருநெல்வேலி முன்சிபுக் கோர்ட்டில் (முறை மன்றம்) எழுத்தாளர் வேலை பார்த்தவர்; இரட்டுற மொழிவதில் வல்லவர்; வறுமை யிலேயே தம் வாழ்க்கையை நடத்தியவர்; வறுமையிற் செம்மையுடையவர்; இன்முகத் தோடு இன்சொற்களைப் பேசி இன்பமூட்டு பவர்; யாவரும் வியக்குமாறு பேச வல்லவர்;

தமிழில் பல இன்னிசைப் பாக்களைப் பாடியவர்; இவர் சிலேடை பாடுவதில் வல்லவர் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு:

"கல்லா லடியுறலாற் கண்மூன் றிருப்பதனால்
எல்லோரும் பூசைக் கெடுத்திடலால்—வல்லோடு
கொள்ளுகையாற் கங்கா குலமுத்து சாமிமன்னு
கள்ளிதழி யானிகர் தேங் காய்".

**இயற்றிய நூல்கள்:**

1. நெல்லைக் காந்திமதி பிள்ளைத் தமிழ்.
2. நெல்லைக் காந்திமதியந்தாதி.



## அறிவுடை நம்பி

இவர், தமிழ்ப் புலமையிற் சிறந்த ஓர் பாண்டிய மன்னர்; படைக்க வேண்டிய செல்வங்களெல்லாவற்றையும் படைத்தவர்; இவர் கடைச்சங்கக் காலத்தவர். இவ்வரசரைப் பிசிராந்தையார் பாடியுள்ளார்; மேலும், அப் புலவரால் நன்னெறிப்படுத்தப் பெற்றார்; மக்கட்பேறின்றியிருந்து, பின்னர் அதனைப் பெற்று இன்புற்றார்; பாண்டி நாட்டுச் சான்றோராகிய பிசிராந்தையாருக்குத் தம் நாட்டு வேந்தராகிய அறிவுடை நம்பிபால் அன்பு தோன்றவில்லை; ஏனெனில்: இவ்வரசன் தம் குடிகளிடத்து இறை வாங்கும் நெறியிற்

பெருந் தவறு செய்தான்; அவர்பால் சூழ்ந்திருந்த அரசியற் சுற்றத்தாரும், மன்னனை இடித்துரைத்து, நெறிப்படுத்தும் நேர்மையின்றி அவர் வழியிலே சென்று, (நீர் வழிப்படூஉம் புணை போல) மக்கட்குத் துன்பம் உண்டாக்கினர். இதையறிந்த பிசிராந்தையார், அறிவுடை நம்பிபால் விரைந்து சென்று, குறைகளை நேரில் கண்டு, அகற்றி, நன்னெறியிற் செல்லுமாறு அறிவுரைகளைக் கூறித் திருத்தினார்.

[புறம். 184-ம் பாடலால் அறியலாம்.]



**அனவரத விநாயகம் பிள்ளை,** எம். ஏ., எம். டி.,

இவர் திருநெல்வேலியினர்; சென்னைக் கிறித்தவக் கலாசாலையிலும், இலங்கைப் பல்கலைக் கழகக் கல்லூரியிலும், தமிழ்ப் போதகாசிரியராய் விளங்கியவர்; தமிழகராதித் தலைவராயும் இருந்தவர்; சொல்லாராய்ச்சியிற் சிறந்தவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. தமிழ்ப் பெருமக்கள் வரலாறு.
2. சைவ சித்தாந்த வரலாறு.
3. நச்சினார்க்கினியர் உரையைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி நூல்.

## ஆலத்தூர் கிழார்

ஆலத்தூர் கிழாரின் இயற்பெயர் தெரிந்திலது; ஆலத்தூர் சோழ நாட்டிலுள்ளதாகிய ஓரூர். இவர் கிள்ளிவளவனைப் பாடியுள்ளார். இவர் நன்றியறிவுடையவர்; அரசர்களிடத்துத் தவறு கண்டபோது, இடித்துக் கூறி, நல்வழிப் படுத்தும் மனவலி படைத்தவர்; இவர் பாடிய பாடல்களைப் புறநானூற்றில் காணலாம்.

**இவராற் பாடப் பெற்றவர்கள்:**

1. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்.
2. சோழன் நலங்கிள்ளி.



## ஆவூர் மூலங் கிழார்

இவர் ஆவூரென்னும் பதியில் மூலநட்சத்திரத்தில் தோன்றியவர்; அதனால், இவர் இப்பெயர் பெற்றார் என்ப. இவர் வேளாண் மரபினர். இவர் கல்விச் செல்வத்தோடு நல்குரவையும் எய்தி, வள்ளல்களை நாடிச் சென்று பொருள் பெற்று வந்து இல்லறத்தை நடாத்தினர்.

**இவராற் பாடப் பெற்றவர்கள்:**

1. கிள்ளி வளவன்.
2. பூஞ்சாற்றூர்க் கௌண்டினியன் விண்ணந்தாயன்
3. குடநாட்டு மல்லி கிழான் - காரியாதி.
4. பாண்டியன் கீரஞ்சாத்தன்.
5. பாண்டியன் நன்மாறன்.

## ஆறுமுகத் தம்பிரான்

இவர் திருவண்ணுமலை யாதீனத்தைச் சார்ந்திருந்த அடியார்களில் ஒருவர்; இவர் சேக்கிழாராலியற்றப்பட்ட திருத்தொண்டர் (பெரிய) புராணம் என்னும் பன்னிரண்டாம் திருமுறையின் ஒரு பாகததிற்கும், திருமுறை கண்ட புராணம், சேக்கிழார் புராணம், அற்புதத் திருவந்தாதி, மூத்த நாயனுர் இரட்டை மணி மாலை என்பவற்றிற்கும் விசேடவுரை செய்தனர். அவ்வுரைகளால் அவரது கல்வித் திறமையும், சிவபத்தியும் நன்கு விளங்கும்; சைவ சித்தாந்த உணர்ச்சி யுடையவர்.



## ஆறுமுக நாவலர்

**இவருடைய இயற்பெயர் :—** *ஆறுமுகம்.*

**நாடு :—** *ஈழ நாடு.* (யாழ்ப்பாணம்)

**குடி :—** *மழவர் குடி.*

**ஊர் :—** *நல்லூர்.*

**காலம் :—** 120 ஆண்டுகட்கு முன்.

**குலம் :—** *கார் காத்த வேளாளர்.*

**சமயம் :—** *சைவம்.*

**பெற்ருேர் :—** *கந்தப் பிள்ளை—சிவகாமியம்மையார்.*

சமகாலத்தவர்:—1. இராமலிங்க அடிகள். 2. விசாகப் பெருமாளையர். 3. மழவை - மகாலிங்கையர். 4. மகா வித்துவான் - மீனுட்சிசுந்தரம் பிள்ளை.

**பிற குறிப்புகள்:**

இவர் தென்மொழி, ஆங்கிலம் முதலிய மொழிகளில் தேர்ச்சி பெற்றவர். இவர் யாழ்ப்பாணம், சிதம்பரம் முதலிய இடங்களில் சைவப் பிரகாச வித்தியாசாலைகளை நிறுவினார்; சைவ சமய சொற் பொழிவுகளாற்றுவதிலும், நூல்களெழுதுவதிலும் இவர் ஆற்றலுடையவர். இது கண்டு உலகம் இவருக்கு "நாவலர்" என்னுஞ் சிறப்புப் பெயர் வழங்கிற்று. முதன் முதல் தமிழின் உரை நடை இவரால்தான் திருந்தியது. இவர் சாதுரியமாகப் பேசும் திறமை பெற்றவர். இவர் விவிலிய நூலைத் தமிழில் மொழி பெயர்த்தனர். இராமநாதபுரம் பொன்னுச்சாமித் தேவரவர்களும் இவரை விரும்பி அழைத்துத் தமது சபையிலே சொற் பொழிவாற்றுவித்து, அதைக் கேட்டு மகிழ்ந்து இவருக்குப் பல விருதுகள் அளித்தனர்.

**இவர் செய்த உரைகளும், நூல்களும்**

1. நன்னூற் காண்டிகையுரை.
2. கோயிற் புராணவுரை.
3. சைவ சமய நெறி உரை.
4. இலக்கணச் சுருக்கம்.
5. இலக்கண வினா விடை.
6. பெரிய புராண வசனம்.
7. பால பாடம்.
8. திருவிளையாடற் புராண வசனம்.

இவர் தாம் செய்த உரை நூல்களையும், உரை நடை நூல்களையும் தாமே பதிப்பித்தார். நூல்களை வழுவற, அழகிய முறையில் வெளியிடும் முறையை முதன்முதல் தமிழ் உலகிற் செய்தவர் இவரே.



## இடைக் காடர்

இவர் இடைக்கழி நாட்டில் தோன்றியவராதலால், இப் பெயர் பெற்ருர் என்பர்; இலக்கிய வளஞ் சிறந்த பல பாக்களைப் பாடியுள்ளார். இவருடைய பாடல்களைச் சங்கத் தொகை நூல்களிற் காணலாம்; தக்க உவமைகளை அமைத்துப் பொருள்களை விளக்குவதில் சிறந்தவர்; சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடியுள்ளார். [புறம். 42] இவா "ஊசி முறி" என்னும் இலக்கண நூலைச் செய்தார். திருக்குறளை "கடுகைத் துளைத் தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள்" எனச் சிறப்பித்துள்ளார்.



## இடைக்குன்றூர் கிழார்

இடைக்குன்றூர் என்பது இவரது ஊர்; இவர் வேளாளர்; பாண்டியன் நெடுஞ்செழியன் ஒருவனுய் நின்று எழுவரை வென்ற செய்தியை வியந்தும், போர் செய்த திறத்தைப் புலவாறு புகழ்ந்தும், அவன் போருக்குச் சென்ற

லத்தைப் பாராட்டியும் பாடியுள்ளார். [புறம். 76–79] தலையாலங்கானத்துப் போர் நிகழ்ச்சிகளை நேரிற் கண்டுரைத்த சான்றோருள் இவர் சிறந்தவர்.



## இரட்டையர்

**நாடு** :—சோழ நாடு.

**ஊர்** :—ஆமிலந்துறை.

**குலம்** :—செங்குந்தர்.

**சமயம்**:—சைவம்.

**காலம்** :—வரபதியாட்கொண்டான் என்னும் சேரவரசர் காலம்.

### வரலாறு

இவர் இருவர்; ஒருவர் முடவர், மற்றவர் குருடர். முடவர், குருடர் முதுகிலிருந்து வழி காட்டுவர். இருவரும் ஒருவர் போன்று தோன்றுவதால் "இரட்டையர்" எனப் பட்டார். இளஞ்சூரியர், முதுசூரியர் எனவும் படுவர்; 'கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்' என்னும் புகழ் பெற்றவர். முதல் ஈரடிகளை ஒருவர் பாடப் பின் இரண்டடிகளை மற்றவர் பாடி முடிப்பர். வில்லியாற் சிறப்பிக்கப்பட்ட திருவக்கை ஆட்கொண்டானை இவ்விரட்டையர் "ஆட்கொண்ட நாயகன் தமிழ்க் கொங்கர் கோன் வக்கை நகராதிபன்" எனப் பாடியிருத் தலின், அவ் வில்லிபுத்தூரரும், இரட்டையரும்

சமகாலத்தவர்கள் என்பது பெறப்படுகின்றது. இவர்களாற் பாடப் பெற்றனவாக வழங்கும் விடுகவிகள் பல.

**இவர் பாடிய நூல்களாவன :**

1. தில்லைக் கலம்பகம்.
2. ஏகாம்பர நாதருலா.
3. ஆமாத்தூர்க் கலம்பகம்.

**வெண்பா**

“ மூடர்முன்னே பாடன் மொழிந்தா லறிவரோ
ஆடெடுத்த தென்புலியூ ரம்பலவா—ஆடகப்பொற்
செந்திருப் போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயகனா னால்.” —ஓர் எடுத்துக்காட்டு.



## இராகவையங்கார் மு.

இவர் ரா. இராகவையங்காரின் மைத்துனர்; லெக்ஸிகன் தமிழகராதிப் பதிப்புக்குப் பெருந்துணை புரிந்தவர். சில உரை நடை நூல்களையும் எழுதியுள்ளார்.

1. சேரன் செங்குட்டுவன்.
2. தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி.
3. வேளிர் வரலாறு.

இவர் கொள்கைகளுள் சிலவற்றிற்கு மறுப்புகள் எழுந்துள்ளன.

## இராகவையங்கார் ரா.

இவர், மதுரைச் சங்கத்தின் சிறந்த உறுப்பினராயும், சேதுபதியின் அரண்மனைப் புலவராயும் விளங்கி நின்றார்; சில காலம் செந்தமிழ்ப் பத்திரிகையை நடத்திவந்தார். இவர் தென்னவராயன் புதுக்கோட்டையைச் சார்ந்தவர். இவர் செந்தமிழ்ப் பத்திரிகையில் கம்பரைப் பற்றிப் பல அரிய கட்டுரைகளை எழுதியுள்ளார்; கம்பராமாயணச் சொற் பொழிவில் வல்லவர்; பாஸ்கர சேதுபதியைப் பற்றி இவர் பற்பல வெண்பாக்கள் பாடினார். இவர் வடமொழிப் புலமையும் மிக்கவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. வஞ்சிமாநகர்.
2. சேது நாடுந் தமிழும்.



## இராமசாமிப் பிள்ளை

**நாடு:**—பாண்டி நாடு – இராமநாத புரம். பின்னர் மதுரையில் மேலமாசி வீதியில் வாழ்ந்து வந்தார்.

**குலம்:**—வேளாளர்.

**சமயம்:**—சைவம்.

இவர், திருவாவடுதுறை யாதீனத்துச் சீடர்; இலக்கிய இலக்கணங்களையும், சைவ சாத்திரங்களையும் கற்றவர்; நாவலர்க்கு நண்பர்.

**உரை செய்த நூல்கள்:**

1. கம்பரந்தாதி.
2. முல்லையந்தாதி.
3. திருவிளையாடற் புராண முதற் காண்டம்.



## இராமச்சந்திரக் கவிராசர்

**நாடு:**—தொண்டை நாடு.

**ஊர்:**—இராசநல்லூர்; – பின்னர், சென்னையில் வாழ்ந்து வந்தார்.

**குலம்:**—இராச குலம்.

**சமயம்:**—சைவம்.

இவர், சித்திரக் கவிகள் பாடுவதில் வல்லவர்; பல நாடக நூல்களை எழுதியுள்ளார்.

1. தனிநிலைக் கவிகள்.
2. நடுவெழுத்தலங்காரம்.
3. சித்திரக் கவிகள் பல.
4. சகுந்தலை விலாசம்.
5. இரண்ய வாசகப் பா.
6. தாருக விலாசம்.
7. இரங்கோன் சண்டை நாடகம்—முதலியன.

## இராமலிங்க அடிகள்

**பிறப்பிடம்** :—*சிதம்பரத்தை அடுத்த மருதூர்.*

**பெற்றோர்** :—*இராமையாப் பிள்ளை—சின்னம்மையார்.*

**மரபு**:—*கருணீகர்.*

**சமயம்** :—*சைவம்.*

**காலம்** :—*கி. பி.* 1823 – 1873.

**வேறு பெயர்கள்** :—*வள்ளலார், திருவருட்பிரகாசர்.*

**வரலாறு**

*இவர், பத்தி மார்க்கத்தில் விஞ்சியிருந்ததனால் இல்லற வாழ்க்கையில் நெடுநாள் இருக்கவில்லை; உயிர்களிடத்துள்ள அன்பின் காரணமாக வடலூர் என்னும் ஊரிலே அறச்சாலையைத் தோற்றுவித்தார். இவர் சமரச சன்மார்க்க நெறியினர்.*

**இயற்றிய நூல்களாவன:**

1. *திருவருட்பா.*
2. *சீவகாருண்ய ஒழுக்கம்.*
3. *மனுமுறை கண்ட வாசகம்.*

[*எடுத்துக்காட்டாக ஓர் பாடல் ஈண்டு தரப்பட்டுள்ளது.*]

**இராமலிங்கர் இறைவனிடம் வேண்டுதல்**

*"அப்பா! நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்;*
*ஆருயிர்கட் கெல்லாம்நா னன்புசெயல் வேண்டும்;*
*எப்பாரும் எப்பதமும் எங்கணுநான் சென்றே*
*எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்;*
*செப்பாத மேனிலைமேல் சுத்தசிவ மார்க்கம்*
*திகழ்ந்தோங்க வருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்;*
*தப்பேது நான்செயினும் நீபொறுத்தல் வேண்டும்;*
*தலைவ! நினைப் பிரியாத நிலைமையும் வேண்டுவனே."*

## இராமலிங்கம் பிள்ளை, வெ. (நாமக்கல் கவிஞர்)

**பிறப்பிடம் :—** சேலம் மாவட்டத்தைச் சார்ந்த நாமக்கல் தாலூகாவிலுள்ள மோகனூர்.

**பெற்றோர் :—** வேங்கட்ராம பிள்ளை — அம்மணி யம்மையார்.

**காலம் :—** 1888-ம் ஆண்டு, அக்டோபர் திங்கள், 19-ம் நாள்.

**வரலாறு**

இவர் இளமையில் ஓவியக் கலைஞராகப் புகழ் பெற்றார்; கோவைக் கல்லூரியில் பயிலும் பொழுது, இவர் அக் கல்லூரித் தலைவராகிய "எலியட்" துரையைப்போல ஓர் ஓவியம் வரைந்தார். இதைக் கண்ணுற்ற கல்லூரித் தலைவர், அவருடைய திறமையைக் கண்டு மன மகிழ்ந்து பரிசு வழங்கினார்; தமிழிலும் தேர்ச்சி காட்டிப் பரிசுகளும் பெற்றார். இவர் 1908-ம் ஆண்டு "மெட்ரிகுலேஷன்" தேர்வில் வெற்றி பெற்றார். கவிஞர் – இராமலிங்கம் பிள்ளை யவர்கள் அரசவைக் கவிஞராகப் போற்றப் பட்டார். இவர் நாட்டுப் பற்றுடையவா.

**இவர் இயற்றிய நூல்கள் :**

1. தமிழன் இதயம்.
2. பிரார்த்தனை.
3. அவனும்—அவளும்.
4. சங்கொலி.
5. என் கதை.

## இராமானுசக் கவிராயர்

**இயற் பெயர் :—** *இராமானுசர். கல்விச் சிறப்பால் பெற்ற பெயர் "கவிராயர்".*

**பிறப்பிடம் :—** *இராமநாதபுரம்.*

**காலம் :—** *இற்றைக்கு 120 ஆண்டுகட்கு முன்.*

**சமயம் :—** *வைணவம்.*

*இவர் சோமசுந்தரக் கவிராயரிடம் கல்வி கற்ருர். இவர் இளமையில் கல்வி கற்றுத் தேர்ந்ததைப்பற்றிப் பல கதைகள் கூறப்படு கின்றன. இவருக்கு ஞாபக சக்தி குறைவா யிருந்தபடியால் மனவாட்டமடைந்து, கலை மகளை நினைந்து நினைந்து உருகித் தம்முடைய கழுத்தைக் கத்தியால் அறுத்துக்கொண் டாராம். அதுபோழ்து, கலைமகள் தோன்றித் திருவருள் புரிந்து மறைந்தனளாம். அதன் பின்பு தாம் படித்த நூற்பொருளை மனதில் இருத்தி வைக்கும் பண்பு பெற்ருராம். இவ்வாறு ஒரு கதை வழங்குகிறது.*

**இவர் இயற்றிய நூல்கள் :**

1. *திருவேங்கட அநுபூதி.*
2. *இலக்கணச் சுருக்கம்.*
3. *குடாரம்.*
4. *ஆத்தும போதப் பிரகாசிகை.*

## இரும்பிடர்த் தலையார்

இவர், பாண்டியன் கருங்கையொள்வாட் பெரும்பெயர்வழுதியைப் பாடியவர். [புறம்-3] சோழன் கரிகாலனுக்கு அம்மான் என்பர்; இவர் யானையின் பெரிய கழுத்தை இப் பாட்டின்கண் "இரும்பிடர்த்தலை" யென்று சிறப்பித்துக் கூறியுள்ளார். ஆதலால் இவரைச் சான்றோர் "இரும்பிடர்த்தலையார்" என்று வழங்கலாயினர். இவரது இயற்பெயர் தெரிந்திலது. கரிகாலன் இளமையில் இவரிடத்துக் கல்வி கற்றுச் சிறப்புற்றான் என்று மூன்றுறையரையனார் கூறியுள்ளார்.



## இளங்கோவடிகள்

**பெற்றோர் :**—இமய வரம்பன்—நெடுஞ்சேரலாதன் — நற்சோணை.

**ஊர் :**—வஞ்சிமாநகரம்.

**சமயம் :**—சமணம்.

**காலம் :**—கி. பி. 2-ம் நூற்றாண்டு.

சம காலத்தவர் :—1. சீத்தலைச் சாத்தனார். 2. கபிலர். 3. பரணர்.

இவர் இளமையிலேயே துறவு பூண்டார். கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார் இவருடைய நெருங்கிய நண்பர். இவர் நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தை இயற்றிய ஆசிரியர். இவர்

முத்தமிழிலும் சிறந்தவர் என்பதற்கு இவர் இயற்றிய சிலப்பதிகாரமே போதிய சான்றும். பண்டைக்காலத்து இசைத் தமிழ், நாடகத் தமிழின் பெருமைகளை உணர்த்துவது இந் நூலேயாம்.

※

## இளம்பூரணர்

இவர் இயற்பெயர் தெரிந்திலது. "இளம் பூரணன்" என்பதற்கு இளமையிலேயே கல்வி கேள்விகள் நிரம்பப் பெற்றவன் என்று பொருள் கூறலாம்; ஆதலின், இது காரணப் பெயராவென்று துணிந்து கூறுவதற்கில்லை.

**இடம் :—** மதுரை. [இவர் மதுரை யாசிரியராகிய பேராசிரியரிடம் கல்வி கற்றவர்; அது பற்றி இவருடைய ஊர் மதுரையே என்று ஒருவாறு துணியலாம்.]

**சமயம் :—** சைவம்.

**காலம் :—** இவர், அடியார்க்கு நல்லார், நச்சினார்க் கினியர் முதலியவர்கட்கு முற்பட்டவர்.

### வரலாறு

தொல்காப்பியத்திற்கு முதன் முதல் உரை யெழுதிய காரணத்தினல் இவர்க்கு 'உரை யாசிரியர்' என்னும் பெயர் வழங்கலாயிற்று; தொல்காப்பியம் முழுமைக்கும் இவர் உரை யெழுதியுள்ளார். இவருடைய உரையைப்

பயின்று, அதை ஆதாரமாகக் கொண்டு, சேனு வரையர், நச்சினர்க்கினியர் முதலியோர் தொல் காப்பியத்திற்கு உரை எழுதினர். அடியார்க்கு நல்லார் தாமெழுதிய சிலப்பதிகார உரையிலே "உரையாசிரியராகிய இளம்பூரணவடிகள்" என்று கூறியிருப்பதால், இவர் துறவறத்தை மேற்கொண்டு இருந்தவரென்பது தேற்றம். இவர் பன்னூலும் பயின்றவர் என்பதற்குத் தொல்காப்பிய உரையே போதிய சான்ரும்.

சம காலத்து ஆசிரியர்கள் :—1. மதுரை யாசிரியர். 2. சேனுவரையர். 3. நச்சினர்க் கினியர். 4. பரிமேலழகர்.



## இளம்பெரு வழுதி

**குலம்:—** பாண்டியன்.

**சமயம்:—** வைணவம் என்று கருதப்படுகிறது.

இவர் கடலில் இறந்தபின்னர், 'கடலுண் மாய்ந்த' என்ற அடைமொழி சேர்க்கப்பட் டிருக்கலாம்; உலகியலை அறிந்து செய்யுள் செய்யும் திறமுடையவர்.



## இறையனர்

இவர் 'களவியல்' என்னும் அகப்பொருள் இலக்கணத்தை இயற்றினர். ஈண்டு இறையனு ரென்றது, மதுரைமா நகரில் திருக்கோயில்

கொண்டு எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளை என்ப. இறையனார் என்பார் சோமசுந்தரக் கடவுள் அல்லர்; ஒரு புலவரே என்பர் சிலர்; பாண்டியனும் கடைச் சங்கப் புலவர்களும் அகப்பொருள் இல்லாமல் வருந்தினர். (பொருளதிகாரம்) அதனால் அவர்கள் ஆலவாய் அடிகளைக் குறித்துத் தவங் கிடந்தனர். அதன்பயனாக, அவர்கள் அகப் பொருள் இலக்கணத்தைப் பெற்றனர். இதனால், இஃது "இறையனார் அகப்பொருள்" என வழங்குகின்றது.



## உமறுப் புலவர்

இவர் ஒரு முகமதியப் புலவர்; எட்டயபுர சமஸ்தான வித்துவானாக இருந்தார்; கடிகை முத்துப் புலவரிடம் இவர் கல்வி கற்றார். இவர் காலம் கி. பி. 1665.—17-ம் நூற்றாண்டின் பிற்பகுதி. சீதக்காதியின் வேண்டுகோளுக்கிணங்கி, இவர் முகம்மது நபியின் வரலாறாகிய "சீறாப் புராணத்தை" இயற்றினார்.



## உமாமகேசுவரம் பிள்ளை

இவர் "தமிழவேள்" என்று அழைக்கப் படுகின்றார்.

**காலம்:—1883.**

**தந்தை:—**வேம்பப் பிள்ளை.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தைப் போற்றி வளர்த்த பெரியாராவர்; கரந்தைத் தமிழ்ச் சங்கத்தை நிறுவியவரும் இவரே; அருள் உள்ளம் படைத்தவர். புலவர்களைப் பாது காக்கும் இயல்பினர். இவர் 1941-ல் இயற்கை எய்தினர்.



## உமாபதி சிவாச்சாரியர்

இவர் உமாபதி தேவ நாயனர், கொற்றங் குடியார், கொற்றங்குடி முதல் அந்தணர் பெரு மாள் எனவும் படுவர்; தில்லைவாழந்தணர் மூவாயிரவருள் ஒருவர்; இவர் சைவ சித்தாந்த உண்மைகளை யெல்லாந் திரட்டி ஒவ்வோர் நூலாகத் திருவாய் மலர்ந்தருளினர்.



## உருத்திரங் கண்ணனர்

இவரைக்கடியலூர் உருத்திரங்கண்ணனர் என்று கூறுவர்; சங்கப் புலவருள் ஒருவர்; பட்டினப்பாலை, பெரும்பாணற்றுப் படை என்னும் இரு பாட்டும் இற்றியவர். பெரும் பாணற்றுப் படை, இளந்திரையனுடைய கொடை மடத்தையும் அவன் நாட்டு வளத் தையும் விரித்துக் கூறுவது; பட்டினப்பாலை, கரிகாற் சோழனையும், காவிரியாறு முதலிய வற்றையும் வியந்து கூறுவது. கரிகாற் சோழன் பதினறு நூருயிரம் பொன் பரிசிலளித்துப் பட்டினப்பாலையைக் கொண்டான். இதைக் கலிங்கத்துப் பரணியிலும் காணலாம்.

## உருத்திர சன்மன்

இவர் கடைச் சங்கப் புலவருள் ஒருவர்; உப்பூரிகுடி கிழார் மகனுவர்; இவரைக் குமரக் கடவுளம்சமென்று கூறுவர். அகநானூறு என்னும் தொகை நூலைத் தொகுத்தவர் இவரே. இறையனுர் அகப்பொருளுரை செய்த நாற்பத்தொன்பதின்மர் உரையையும் கேட்டு, நக்கீரர் உரையே சிறந்ததென்று உணர்த்திய மூங்கைப் பிள்ளையாவர்.



## உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்

இவர் 'மோசிகுடி' என்னும் ஊரிலே, பிறவிலேயே முடமாய்ப் பிறந்ததனுல், முட மோசி எனப்பட்டார். மோசி கீரனுர், மோசி கண்ணனுர், மோசி சாத்தனுர் முதலிய பல புலவர் தோன்றிய இடமாதலால், புலவர் நிறைந்த அவ்வூரில், இவர் தக்க புலவரை நாடிச் சென்று, இலக்கண இலக்கியங்களில் மேம்பட்டு, அறிஞரால் பாராட்டப்பட்டார். சோழன் முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளி என்பானது புகழைக் கேள்விப்பட்டு, அந்தச் சோழவரசன் வதிகின்ற நகராகிய உறை யூரை யடைந்து, அரசனுல் நன்கு மதிக்கப் பெற்று 'ஏணிச்சேரி' என்னுமிடத்து நெடு நாள் தங்கினுர்; அதனுல் ஏணிச்சேரி முட மோசியார் எனப்பட்டார். எனவே இப்புலவர் பெருமான் சோழ நாட்டிலே உறையூரிலே

வாழ்ந்தவர் என்பது உறுதியாம். இவர் அந்தணர் குலத்தவரென்று பேராசிரியர் கூறுகின்றனர். இவருடைய புகழ் சேர-சோழ நாடுகளில் பரவியிருந்தது.



## உறையூர் முதுகண்ணன் சாத்தனார்

இவர், உறையூரைச் சார்ந்தவர்; முது கண்ணன் எழுபது - இவர் தந்தையாராவர்; புலவர் பாடும் புகழுடையோர் வலவனேவா வானவூர்தியேறித் துறக்கஞ் செல்வரென் பதும், திங்கள் உலகில் உயிர்கள் பிறத்தலும், இறத்தலும், வளர்தலும், தேய்தலும் அறியா மடவோரும் அறியக்காட்டுமென்பதும், அறமும், பொருளும், இன்பமும் செய்தல் அறத் தின் பயனென்பதும், நாடகமே யுலகமென் பதும் இவருடைய புலமைப் பண்பை நன்கு எடுத்துக் காட்டுகின்றன. இவர் சோழன் நலங்கிள்ளியைப் பாடியுள்ளார்.



## எருமைவெளியனார்

இவர் 'எருமைவெளி' என்னும் ஊரினர்; ஆதலால் இப்பெயர் பெற்றார் போலும்; இவர் பாடிய பாடல்களைப் புறநானூற்றிலும் அகநானூற்றிலும் காணலாம். இவர் 'குதிரை மறம்' என்னும் துறையை வெகு அழகாகப் பாடியுள்ளார்

## எல்லப்ப நாவலர்

இவர் திவ்விய கவி சைவ எல்லப்ப நாவலர் எனப்படுவர்.

**நாடு:**—சோழ நாடு.
**ஊர்:**—பூந்தாழை.
**குலம்:**—வேளாளர்.
**சமயம்:**—சைவம்.
**காலம்:**—மணவாள தாசர் காலம்.

இவர் தருமபுர ஆதீனத்துச் சிவஞான தேசிகரிடம் சிவதீட்சை பெற்றவர்; இவர் பிள்ளைப் பெருமாளையங்கார் காலத்தவரென்று ஒரு சாரார் கூறுவர். ஆராய்ச்சியாளர் இவர் சிவஞான தேசிகர் காலத்தவர் என்று கூறுவர்.

**இயற்றிய நூல்கள்:**

1. அருணாசல புராணம்.
2. திருவருணையந்தாதி.
3. திருவெண்காட்டுத்தல புராணம்.
4. திருவாரூர்க் கோவை.
5. திருவருணைக் கலம்பகம்.



## எல்லீசர்

இவர் ஆங்கில நாட்டில் தோன்றியவர்; நல்லாசிரியர்களை அடுத்து வடமொழியும், தென்மொழியும் கற்றார். இவர் திருக்குறளுக்கு ஆங்கில மொழியில் விளக்கமான விரிவுரை யொன்றை எழுதும் பணியில் ஈடு

பட்டார்; ஆனால், முற்றுப் பெறவில்லை; இவர் முதன்முதலில் சென்னை நிலவரி மன்றத்தின் செயலாளராக நியமிக்கப்பட்டார்; எட்டு ஆண்டுகள் அவ்வலுவலை மேற்கொண்டு திறம்பட நடாத்தினார்; பின்னர் சென்னை கலெக்டராகப் 10 ஆண்டுகள் இருந்தார்; சென்னையில் கல்விச்சங்கத்தை நிறுவப் பாடுபட்டார்; அரிய தமிழ்ச் சுவடிகளைச் சேகரிப்பதிலும், பாதுகாப்பதிலும் முனைந்திருந்தார். இவர் தமிழ்ச் செய்யுளும் இயற்றியதாகத் தெரிகின்றது; அதாவது "நமசிவாயப் பாட்டு". இவர் தமிழ் மொழியின் தொன்மையையும், செம்மையையும் குறித்துப் பல ஆராய்ச்சிக் குறிப்புகளை எழுதி வைத்திருந்தார். காலன் விரைவில் அவர் உயிரைக் கவர்ந்தமையால், அவ்வேடுகள் நீக்கிரையாயின.



## எறிச்சலூர் மலாடனார்

இவர் கடைச் சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மருள் ஒருவர். இவர் ஊர் எறிச்சலூர். இவர் திருவள்ளுவ மாலைக்குச் சிறப்புக் கவி பாடியுள்ளார்.



## ஏரம்பையர்

**ஊர்:**—யாழ்ப்பாணத்திலுள்ள மாதகல்.

**குலம்:**—வேதியர்.

**சமயம்:**—சைவம்.

இவர் இலக்கிய இலக்கணங்களைக் கசடறக் கற்றவர்; சோதிடத்திலும் சிறந்தவர்; சித்தாந்த சாத்திரங்களிலும் பயிற்சி உடையவர்; வடமொழி நீதி சாரத்தைத் தமிழில் செய்யுள் நடையில் மொழி பெயர்த்தியவர்; சேது புராணத்தை வாக்கிய நடையில் ஆக்கினவர்.



## ஐயனரிதனர்

இவர் சேரர் பரம்பரையில் உதித்தவர்; தமிழ் நூல்களில் சிறந்த அறிவு வாய்ந்தவர்; சைவ சமயத்தினர். இவர் புறப் பொருள் வெண்பா மாலையைச் செய்த ஆசிரியர். இவர் தமிழையும், பொருளமைதியையும் நோக்குழி, இவர் சங்க காலத்துக்குப் பின்னிருந்தவரெனக் கொள்ளலாம். இளம்பூரணருக்குக் காலத்தால் முந்தியவர்; சிறப்புப் பாயிரத்தில் இவரை "வானவர் மருமான்" என்று கூறியிருப்பதனல் சேரர் குலத்தைச் சேர்ந்தவரெனலாம். இவருடைய காலம் எட்டாம் நூற்றண்டிற்கு முன் என்று கூறலாம்.



## ஐயூர் முடவனர்

இவர் ஐயூர் என்னும் ஊரினர்; இவருக்கு ஐயூர் கிழாரென்று மற்றொரு பெயரும் உண்டு; இவரது உறுப்புக் காரணமாக "முடவனர்" என்ற பெயர் எழுந்தது போலும்! இவர்

பாடல்கள் குறுந் தொகையிலும் அகநானூற்றிலும் வந்துள்ளன. இவர் தாமான் தோன்றிக் கோனிடத்துப் பல பசு நிரைகளையுந் தம்முடைய வண்டிக்கு எருதுகளையும் தாம் பெற்றதைக் குறித்துள்ளார். கிள்ளி வளவன் இறந்த பின்னரே இம் மன்னனிடம் இவற்றை இவர் பெற்றனர் போலும்! கிள்ளி வளவன் காலத்தே அவர் பிறரிடம் சென்றனரல்லர்.

"கிள்ளி வளவ னுள்ளி யவற் படர்ந்தும்
செல்லேன் செல்லேன்"

...என்ற தொடரால் அறியலாம்.



## ஒட்டக்கூத்தர்

இவர் கவிச் சக்கரவர்த்தி என்ற சிறப்புப் பெயர் பெற்றவர்.

**நாடு** :—சோழ நாடு.
**ஊர்** :—மலரி.
**மரபு** :—செங்குந்தர்.
**காலம்** :—இற்றைக்குச் சற்றேறக்குறைய 800 ஆண்டுகட்டு முன்.
**சமயம்** :—சைவம்.

**வரலாறு**

இவர், இளமையில் திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளலின் தந்தையாகிய சங்கரன் என்பவருக்கு உதவித் தொழில் செய்துகொண்டிருந்தார். காங்கேயன் என்னும் வள்ளல் அவருக்குக் கல்வி கற்பித்துக்

"கவிராய"ராக்கினார். நன்றி மறவாத இவர், தம்மை ஆதரித்த காங்கேயன்மீது 'நாலாயிரக் கோவை' என்னும் பிரபந்தம் பாடினார். காங்கேயன் இறைவனடியைச் சேரவும், கூத்தர் மிடி யென்னும் இடியால் அடியுண்டு வாடினர். இவருடைய புலமையை யறிந்த விக்கிரம சோழன், இவரை அவைப் புலவராக ஏற்றுக்கொண்டான்.

**இவர் இயற்றிய நூல்கள் :**

1. இராமாயணத்தின் உத்தர காண்டம்.
2. தக்க யாகப் பரணி.
3. அண்டத்துப் பரணி.
4. விக்கிரம சோழனுலா.
5. பிள்ளைத் தமிழ்க் கோவை, உலா முதலியன.
6. ஈட்டி யெழுபது.



## ஒப்பிலாமணிப் புலவர்

இவர் தொண்டைநாட்டில் தோன்றியவர்; இவர் குமணன்பாற் சென்றார். அவன் ஆங்கு இல்லாமையால் அமணனைக் கண்டார்; தன் தமயன் தலையினைக்கொண்டுவந்து கொடுக்கின், வேண்டியது தருவதாகப் பறை சாற்றி இருந்தான். இந்நிலையில் குமணனைக் காண இவர் கானகஞ் சென்றார். ஆங்கு அவனைக் கண்டு "ஆடெரி படர்ந்த..........குமண" என்ற

செய்யுளைப் பாடினர். "அந்த நாள் வந்திலே.... ....வறுமை நோய் களையே" என்று குமணன் தன் கருத்தைத் தெரிவித்து, தன் இளவல் பறை சாற்றியிருந்த செய்தி நினைவிற்கு வந்தது; வரவே குமணன் உடைவாளை எடுத்துப் புலவர் கையில் கொடுத்தனன். இவர் "சிவரகசியம்" என்னும் நூலை இயற்றியுள்ளார்.



## ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன்

இவன், முதுகுடுமிப் பெருவழுதிக்குப் பின் சில தலைமுறைகள் கழித்து அரசாண்டதாகத் தெரிகின்றது. திதியன் என்பவனை இப் பாண்டியன் பாடியுள்ளான். ஆதலால், இப் பாண்டியன் பரணர் காலத்தில் இருந்தவன் என்று தெரிகிறது. இவன் போரில் வல்லவன். இவன் போரில் கூறிய வஞ்சினச் சொற்களைப் புறநானூற்றில் காணலாம். 'ஒல்லையூர்' என்னும் ஊர் புதுக்கோட்டை சமஸ்தானத்திலுள்ளது. தென் நாட்டிலுள்ள 'பூதபாண்டி' என்னும் ஊர், இவன் பெயரால் வழங்குகிற தென்பர் ஒரு சாரார்.



## ஒருசிறைப்பெரியனார்

இவர் நாஞ்சில் வள்ளுவனைப் பாடியவர். இப் பெயர் சில ஏடுகளில் ஒருசிறைப் பெயரினார் என்றும், ஒருசிறைப் பெயரியனார் என்றும் காணப்படுகிறது. "பெருங்கல்

நாடனே! நீ வாழ்வாயாக; நின்னைப் பெற்றமையால் நின் தந்தை தாயர் வாழ்க" என்று பாராட்டியுள்ளார். இவர் பாடிய பாடலைப் புறநானூற்றில் காணலாம்.



## ஔவையார்

ஔவையார் என்ற பெயரோடு இருந்தவர் இருவர். அவருள் முன்னவர் சங்க காலத்தவர்; பின்னவர் கம்பர் காலத்திலிருந்தவர்; இவர் இன்ன குலத்தினரென்று திட்டமாய் அறுதியிட்டுக் கூற இயலாத நிலையிலுள்ளது. பெயரும் காரணப் பெயரோ, இயற்பெயரோ வென்றும் அறிய முடியவில்லை. அதிகமான் நெடுமானஞ்சியைக் கண்டு பாடினார்; அமுதினும் அரிய நெல்லிக் கனியைக் கொடுத்து உண்பித்து நெடுநாள் இவரை வாழச் செய்தார். புரவலனுடைய வாழ்விலும் புலவர்களுடைய வாழ்வு உலகிற்குப் பெரும் பயனளிக்கும் எனக் கருதியே அக்கனியை வழங்கினன். இவ்வம்மையார் தொண்டைமானிடம் தூது சென்றார். அவனுடைய படைக்கலக் கொட்டிலைக் கண்ணுற்று புகழ்வது போன்று பழித்தார்.



## ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை

இவர், அண்ணாமலைப் பல்கலைக் கழக ஆராய்ச்சிப் பகுதியில் விரிவுரையாளராய்ப்

பணியாற்றி வருகின்றார்; தொகை நூல்களுள் சிலவற்றுக்கு உரை கண்டவர். முப்பெருங் காப்பிய ஆராய்ச்சியாளர்; உரையில்லாத நூல்கட்கு விளக்கவுரை யெழுதி மாணவருலகிற்குப் பெரிதும் பயன்படுமாறு செய்து வருகின்றார்.



## கச்சியப்ப சிவாச்சாரியர்

**நாடு** :—தொண்டை மண்டலம்.

**ஊர்** :—காஞ்சி.

**குலம்** :—ஆதி சைவர்.

**தந்தை**:—காளத்தியப்ப சிவாச்சாரியர்.

### பிற வரலாறு

இவருக்கு நெடுங்காலமாகப் பிள்ளைப் பேறு இல்லாமையால் குமர கோட்டத்தின்கண் எழுந்தருளிய சுப்ரமணியக் கடவுளை முறைப்படி வணங்கி வந்தார். அவனருளால் ஓர் சற்புத்திரன் தோன்றினன். அவருக்குக் கச்சியப்பர் என்று பெயரிட்டனர். இவர் இளமையிலேயே எல்லாக் கலைகளிலும் தேர்ச்சி பெற்று வல்லவரானார். இவர் வடமொழிப் புலமையும், தென்மொழிப் புலமையும் ஒருங்கே அமையப் பெற்றவர். சுப்பிரமணியக் கடவுளின் வேண்டுகோளுக்கிணங்கி, இவர் கந்த புராணம் பாடி முடித்தார். இந்நூல் குமர கோட்டத்தில் பல பெரியார்களின் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது. கச்சியப்ப சிவாச்சாரியர் கந்தபுராணம் பாடிய

பெருமையையறிந்து, அவர் ஏறி வந்த சிவிகையைக் கச்சியிலும் அதனைச் சூழ்ந்த இடங்களிலும் உள்ள மக்கள் அனைவரும் சுமந்து அவரை முருகன் கோட்டத்துக்கு அழைத்துச் சென்றனர் என்பது வரலாறு.



## கச்சியப்ப முனிவர்

**நாடு :—** தொண்டைமண்டலம்.

**ஊர் :—** தணிகைத் திருப்பதி.

**குலம் :—** வேளாளர்.

**சமயம் :—** சைவம்.

**காலம் :—** 150 ஆண்டுகட்கு முன்.

இவர் திருவாவடுதுறை ஆதீனத்துச் சீடர்; கந்தப் பையரின் ஆசிரியர்; இலக்கிய இலக்கணங்களையும், தருக்க சாத்திரங்களையும் நன்கு கற்றவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. தணிகைப் புராணம்.
2. திருவானைக்காப் புராணம்.
3. பேரூர்ப் புராணம்.
4. பூவாளூர்ப் புராணம்.
5. விநாயக புராணம்.
6. தணிகையாற்றுப் படை.
7. வண்டு விடு தூது.

## கடிகைமுத்துப் புலவர்

**நாடு** :—பாண்டி நாடு.

**ஊர்** :—எட்டயபுரம்.

**சமயம்** :—சைவம்.

**காலம்** :—18-ம் நூற்றாண்டு.

இவர், அவ்வூர் அரசனாகிய சகவீரராம வெங்கடேசுவர எட்டப்ப நாயகனது அவைப் புலவராக இருந்தவர். இவர் மடக்கு சிலேடை முதலியன அமைத்துக் கவி பாடுவார். இவர் வார்த்தைகளிலும் சிலேடை அமைந்திருக்கும்; மனைவியின் திவசத்துக்கு ஒருவர் அரிசி வாங்கிக்கொண்டு வருதலைக் கணடார். ஒருவர் "யாது புலவீர்" என்று வினவியபோது, தலை விதியின் வசம் எனவும், தலைவியின் திவசம் எனவும், இரு பொருள் படுமாறு "தலைவிதிவசம்" என்றனர் என்ப.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. சமுத்திர விலாசம்.
2. திக்கு விசயம்.
3. திருவிடை மருதூர் அந்தாதி.
4. தனிப் பாக்கள் பல.

அவைகளைத் 'தனிப்பாடற்றிரட்டு' என்னும் நூலில் காணலாம். இவரது பாடல்கள் மிகச் சிறந்த வருணனைகளை யுடையன.

## கண்ணனார்

இவர் மாவளத்தான் காலத்தில் வாழ்ந்தவர்; காஞ்சி மாநகருக்கு அண்மையிலுள்ள 'தாமல்' எனும் ஊரில் இவர் தோன்றினர். இவர் சிறந்த புலவர்; அந்தணர் குடியினர்; கல்வி கேள்விகளிற் சிறந்தவர். தம்மை அடுத்தவர்க்கு அறவுரை கூறும் திறம் பெற்றவர். மாவளத்தான் இவரிடம் கல்வி பயின்றான்.



## கணி மேதாவியார்

இவர் ஏலாதி யென்னும் நூலினை இயற்றியவர்; இவர் சமணர்; தந்தையார் மாக்காயனார்; இது கடவுள் வாழ்த்துள்பட 81 செய்யுட்களையுடையது. ஏலம், இலவங்கம், சிறுநாவற் பூ, மிளகு, திப்பிலி, சுக்கு என்னும் ஆறு மருந்துச் சரக்குகளினாற் செய்த தூள் உடலுக்கு நன்மை பயப்பது போல், ஆறு நீதிகளைப் புகட்டி நன்மை பயப்பது; அதனால் இந்நூல் இப்பெயர் பெற்றதென்பர்.

## கதிரைவேற் பிள்ளை

பிறந்த ஊர் :—உடுப்பிட்டி.

குலம் :—வேளாளர்.

க்ஙகை :—குமாரசாமி முதலியார்.

**வரலாறு**

இவர், தமிழ், ஆங்கிலம் முதலிய மொழிகளில் தேர்ந்தவர்; வடமொழிப் புலமையும் உடையவர்; இவர் வேதாந்த சித்தாந்த நூல்களையும், தருக்க நூல்களையும், நீதி நூல்களையும் கற்றவர்; பல புலவர்களின் உதவியால் இவர் தகர வருக்கம் வரை ஓர் அகராதியை இயற்றியவர்.



## கபிலர்

இவர் பாண்டி நாட்டிலுள்ள திருவாதவூரில் தோன்றியவர்; இவர் அந்தணர்; இளமையிலேயே கல்வியைக் கசடறக் கற்றுத் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றித் திகழ்ந்தார்; ஔவையார், பரணர் முதலிய பெரும் புலவர்களோடு இவர் பெரு நட்புக் கொண்டிருந்தார்; இவர் பாடிய பாடல் எட்டுத் தொகை, பத்துப் பாட்டு, பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் காணப்படுகின்றன. பாரி யென்னும் கொடை வள்ளலுக்கு உயிர்த் துணைவர்; பாரியின் அவைப் புலவராகவும் விளங்கியவர்; பாரி இறந்த பின் அவன் புதல்வியரைத் தக்கார்க்கு மணம் புரிவிக்கும் பொறுப்பில் ஈடுபட்டார்; அருங்குணங்கள் பலவும் வாய்ந்த புலவர்; வேள் பாரியின் அரசாட்சிக்கு ஏற்ற அமைச்சராகவும் இருந்து ஆவன செய்து வந்தார். கடைச் சங்க காலத்தில்

வாழ்ந்தவர்; இவர் செல்வக் கடுங்கோவாழி யாதன் என்னும் சேரவரசன் மீது ஏழாம் பத்தைப் பாடி (பதிற்றுப்பத்து) நூறாயிரம் பொற்காசும், அவன் ஒரு மலைமீதேறிக் கண்டு கொடுத்த நாடும் பரிசிலாகப் பெற்றவர்.

**இவர் இயற்றிய நூல்கள்:**

1. குறிஞ்சிப் பாட்டு – ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழறிவித்தற்கு இப்பாட்டை இயற்றினர்.
2. இன்னா நாற்பது.



## கம்பர்

**நாடு:**—சோழ நாடு.

**ஊர்:**—திருவழுந்தூர்.

**குலம்:**—உவச்சர்.

**தந்தை:**—ஆதித்தன்.

**சமயம்:**—வைணவம்; ஒருசாரார் வேளாளர் என்று கூறுவர்.

**காலம்:**—800 ஆண்டுகட்கு முன்.

**ஆதரித்தவர்:**—சடையப்ப வள்ளல்.

**வாழ்க்கை வரலாறு**

'கம்பர்' என்ற சொல் ஏகம்பன் என்பதன் முதற் குறை யென்ப. அவர் குலத்தினர் காளி கோவிற் பூசனை செய்பவர். தம்மை ஆதரித்த சடையப்பரிடம் அளவற்ற நன்றி யறிவுடையவர். இராமாயணத்துள் நூறு

பாட்டிற்கொருமுறை அவ்வள்ளலைப் புகழ்ந்து பாடியுள்ளார். கடல் மடை திறந்தாற்போல், இவரிடமிருந்து கவிகள் வெளிப்பட்டன. கம்ப ராமாயணத்தின் முதல் ஆறு காண்டங்களைச் செந்தமிழ் விருத்தப் பாக்களில் பாடினார்.

**இவரது பெருமை:**

இவர் கவிச் சக்கரவர்த்தி யென்னுஞ் சிறப்புப் பெயர் பெற்றவர்; "கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவி பாடும்"; "கல்வியிற் பெரியன் கம்பன்"; "விருத்தமென்னும் ஒண்பாவிலுயர் கம்பன்" என்று அழைக்கப் படுகின்றார். "கம்பர்" என்ற பெயருக்குப் பலர் பலவாறு காரணம் கூறுகின்றனர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. சடகோபர் அந்தாதி.
2. சரஸ்வதி அந்தாதி.
3. ஏரெழுபது.
4. திருக்கை வழக்கம்.
5. கம்ப ராமாயணம்.



## கருவூர்க் கதப்பிள்ளை

இவரைக் கருவூர்க் கதப்பிள்ளை சாத்தனார் என்றுங் கூறுவர்; இவர் சேர வேந்தர்பால் மிக்க அன்புடையவர்; சேரனது ஈகைச் சிறப்பை இவர் பாடிய அகப் பாட்டால் அறியலாம். [309.] இவர் பிட்டங்கொற்றனை யும் பாடியுள்ளார்.

## கல்லாடனார்

இப் பெயர் பூண்ட நல்லிசைப் புலவர் ஒருவரோ இருவரோ பலரோவென்பது அறிவுடையார் ஆராய்ச்சியில் உள்ளது. கல்லாடம் என்பது அவருடைய ஊர் போலும்; இவ்வூர் மலையாள நாட்டிலுள்ளது; இவர் தொல்காப்பியத்துக்கு உரை இயற்றியதாகத் தெரிகின்றது. இவருடைய பாடல்கள் அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை என்பவைகளிலும் பன்னிரு பாட்டியலிலும் வந்துள்ளன. பிற்காலத்திலே எழுந்த கல்லாடம் என்ற நூல் இவராற் செய்யப்பட்டதன்று. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனை இவர் பாடியுள்ளாராதலால் அவனைப் புகழ்ந்து பாடிய குடபுலவியனார், மாங்குடி கிழார், மாங்குடி மருதனார் முதலியோர் இவர் காலத்தவரே.



## கவிராசர்

திரிகோண மலையே இவருடைய ஊர் ஆகும். பண்டித ராசரும் இவரும் சம காலத்தவர். இவர் கோணேச சாசனத்தைப் பாட்டானும் உரையானும் இயற்றியுள்ளார்.



## கழாத்தலையார்

இப்பெயர், "கழார்த் தலையார்" என்றும் காணப்படுகிறது. இவர் இப் பெயர் பெற்ற

தற்குப் பலர் பலவாறு கூறுகின்றனர். 'கழார்' என்பதாயின், கழார் என்னும் ஊரினராதல் வேண்டும். கழாத்தலை என்பது ஓர் ஊரென்றும், இவர் அவ்வூரினரென்றும் கூறுவர். இவர் செய்யுள், புலவர் போற்றும் சிறப்புடையது. இவர் குடக்கோ நெடுஞ்சேரலாதனைப் பாடி அவன்பால் ஆரம் பெற்றார் என்ப. இவர் கூறும் உவமைகள் நயமும் இனிமையும் பொருந்தியவை.



## கழைதின் யானையார்

இவர் கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய வல்வில் ஓரியைப் பாடியவர். இவர் மனவலிமையும், அஞ்சா நெஞ்சமும் படைத்தவர். இவர் பாடிய பாட்டினுள் ஓரி தமக்கு ஈயவில்லையாயினும் தான் அவனை வெறுப்பதில்லை யென்று கூறினார்; இரப்பதையும் ஏற்பதையும் பற்றிச் சில நீதிகள் கூறியுள்ளார்.



## கனகசுந்தரம் பிள்ளை

இவர் சென்னை கிறித்தவக் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றியவர். இவர் யாழ்ப்பாணத்தில் தோன்றியவர்; நூல்களைப் பிழையற அச்சிட உதவி புரிவதில் இவர் இணையற்றவர்; "இல்லாண்மை" யென்னும் ஓர் உரை நடை நூலும் இவர் இயற்றி

யுள்ளார். பல்கலைக் கழகத்தார் மேற்கொண்டுள்ள தமிழகராதிக்கும் சில காலம் தலைமை பூண்டிருந்தார்; தமிழ்ப் புலவர்க்கும் அறிவுத் துணையாய் விளங்கியவர்.



## காக்கை பாடினியார் நச்செள்ளையார்

இவர், நல்லிசைப் புலமை வாய்ந்த மெல்லியலார். இவர் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாடிய பாடலொன்று பதிற்றுப் பத்தில் உள்ளது; அதைப் பாடி "நூறாயிரங் காணம்" பொன்னைப் பரிசாகப் பெற்றார். இவருடைய இயற்பெயர் நச்செள்ளை. காக்கை கரைவதைப் பற்றி இவர் பாடியதனால் இக் காரணப் பெயர் பெற்றார் என்பர் ஒரு சாரார். 'செள்ளை' என்பது தாய் என்னும் பொருளதாக 'ந்' என்பது சிறப்புப் பொருளைக் காட்ட பெண்பாலாரைத் தாயாக வழங்கும் மரபின் படி ந்ச்செள்ளையார் என்ற பெயர் வழங்கப் பட்டிருக்கலாமென்றும், இவரது இயற்பெயர் இன்னதென்று விளங்கவில்லை யென்றும் மற்றொரு சாரார் கூறுவர். இவருடைய பாடலைப் புறநானூற்றிலும் காணலாம்.



## காரி கிழார்

இவர் காரி யென்னும் ஊரினர்; இவ்வூர் தொண்டை நாட்டிலுள்ளது; இப்போது இதற்கு இராமகிரி என்று பெயர் வழங்குகிறது.

இவர் பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை வாழ்த்தியுள்ளார். [புறம்-6.] "மதியமும், ஞாயிறும்போல இந் நிலமிசை மன்னுவாயாக" எனச் சொல்லி வாழ்த்துகின்றார்.



## காரைக்காலம்மையார்

இவர், நாயன்மார்களில் ஒருவர். இவர் சோழ நாட்டிலுள்ள காரைக்கால் என்னும் ஊரில் பிறந்தவர். இவர் சிவபெருமான்மீது பாடிய அந்தாதி அனைவராலும் போற்றப்படுகின்றது. இவர் சிறந்த தமிழ்ப் புலமை உடையவர்.

**குலம் :**—வைசியர்.

**சமயம் :**—சைவம்.

**பிள்ளைத் திருநாமம்:**—புனிதவதியார். (இவர் பெரிய புராணங் கூறும் அடியாருள் ஒருவர்.)

**இவர் பாடியவை :**

1. அற்புதத் திருவந்தாதி.
2. இரட்டை மணி மாலை.



## கார்மேகக் கோனார்

இவர் மதுரை அமெரிக்கன் கல்லூரியில் பேராசிரியராய் விளங்கியவர்; தற்போது ஓய்வு பெற்றுள்ளார். இவர் சிறந்த சங்கநூற் புலவர். இதனை அவரெழுதிய "பண்டைப்

புலவர் வரலாறு" என்னும் நூலால் அறியலாம்; நல்லிசைப் புலவர்கள், மாணவர் செந்தமிழ் மாலை முதலிய நூல்களைத் தொகுத்து வெளியிட்டுள்ளார்.

❋

## கால்டுவெல்

இவர் தமிழ்ப் பணியாற்றிய பாதிரியார். இவர் 1814-ம ஆண்டில் பிறந்தார்; இவர் இளமையிலேயே கல்வி கற்று இறைவன் பணியில் ஈடுபட்டார். இவர் தமிழர்களின் வாழ்க்கை நலத்தையறிய விரும்பிச் சென்னையிலிருந்து நானூறு கல் நடந்து சென்றூர்; அங்கிருந்து மதுரையம்பதியை யடைந்தார். அதன் வளத்தைக் கண்டார்; பிறகு நெல்லையைச் சார்ந்த இடையன்குடியை அடைந்தார்; ஐம்பது ஆண்டுகள் இடையருது சமயத் தொண்டு ஆற்றினுர்; இவருக்குத் "திருநெல்வேலி பிஷப்" என்னும் பட்டம் 1877-ம் ஆண்டில் கிடைத்தது. இவர் தமிழ் மொழியோடு தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய மொழிகளையும் நன்ருகக் கற்ருர். இவர் "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" என்னும் ஒப்புயர்வற்ற நூலை ஆங்கில மொழியில் இயற்றினுர். இந்நூல் வித்துவான் தேர்வுக்குப் பாட புத்தகமாக வைக்கப் பட்டுள்ளது. இவர் சென்னைப் பல்கலைக் கழகத்திலும் உறுப்பினராக இருந்து பல தொண்டுகள் புரிந்தார்; மேனுட்டிலும் தமிழ் மணம் கமழச் செய்தார்.

## காவற் பெண்டு

இவர், சிறந்த மறக் குடியில் தோன்றி வளர்ந்து மறக்குடியில் வாழ்க்கைப்பட்டவர்; இனிய செய்யுள் இயற்றும் வன்மை பெற்றவர். இவர்க்கு மறம் மிக்க மகனொருவன் இருந்தான். ஒரு சால்புடைய மகள், அவர் மனைக்கு ஒரு நாள் வந்தார். "நின் மகன் யாண்டுளன்"? என வினவ, அதுபோழ்து அவர், "அவன் போர்க்களத்தே விளங்கித் தோன்றுவன்; அவற்கும் எனக்கும் உள்ள தொடர்பு, புலிக்கும் அதன் முழைக்குமுள்ள தொடர் பாகும்; அவனை ஈன்ற வயிறோ இது" வெனத் தம் வயிற்றைக் காட்டி உரைத்தார். [புறம்-86]



## காளமேகப் புலவர்

**நாடு :—** பொன்னிவள நாடு.

**ஊர் :—** கும்பகோணத்தையடுத்த நந்திக் கிராமம்.

**குலம் :—** அந்தணர்.

**மரபு :—** வைணவம்.

**பிள்ளைத் திருநாமம் :—** வரதர்.

### வரலாறு

இவர் திருவரங்கம் அடைந்து, அங்குள்ள பெருமாள் கோவில் மடைப்பள்ளியில் பரிசாரகராய் அமர்ந்து வேலை பார்த்து வந்தனர். அக்காலை சம்புகேசுவரம் என்னும் நகரிலுள்ள சிவபெருமானை வழிபடும்

மோகனாங்கி என்பவளைத் திருமணம் செய்து கொள்ள விழைந்து, வைஷ்ணவ மதத்தை விட்டுச் சைவ சமயத்தைச் சார்ந்து திருவானைக் காவில் சிவபெருமான் கோவிலில் பரிசாரகம் செய்து வந்தனர். இவர் திருவானைக்காவில் வழிபட்டுக் கொண்டிருக்கும்போழ்து, கலை மகள் அவரை விளித்து "உன் நாவை நீட்டு" என்று கூறினள். அவர் அங்ஙனம் நீட்டவே, தேவி அவர் நாவில் பீசாட்சரத்தை எழுதி விட்டு மறைந்தருளினள். வரதருக்கு உண்மை ஞானம் அப்போதே உதித்துவிட்டது. அக் கணமுதல் காளமேகம் மழை பொழிவது போல அவர் மதுரமயமான தமிழ்ப் பாக்களைப் பொழிந்ததனால் அவரை யாவரும் "காள மேகப் புலவர்" என்று பெயரிட்டு அழைக்க லாயினர்.



## கிருஷ்ணப் பிள்ளை, எச். ஏ.

**நாடு :—** தென் தமிழ் நாடு.

**ஊர் :—** ரெட்டியார்பட்டி; திருநெல்வேலியிலுள்ளது.

**குலம் :—** வேளாளர்.

**மதம் :—** வைணவம் என்பது ஒரு சாரார் கூற்று. [பின்னர்க் கிறித்தவர் ஆனார்.]

### வரலாறு

இவர் இளமையிலேயே அக்கால முறைப் படி கல்வி கற்றுத் திகழ்ந்தார். சாயர்புரத்தில் போப்பையர் நிறுவிய கல்லூரியில் ஓர் தமிழ்

ஆசிரியர் பதவி காலியாக இருந்தது. அவர் மனுச் செய்துகொண்டிருந்தார்; அதன் பயனாக அவர்க்கு அப் பதவி கிடைத்தது. அப்பதவியை யேற்று அவர் ஆவன செய்தார். இவர் கிறித்து நாதர் பெருமையை விளக்கும் பெருங்காவியமும், அவற்றைப் போற்றி மன முருகுதற்கேற்ற திருப்பாசுரங்களையும் இயற்றித் தமிழ் நாட்டார்க்குத் தொண்டு செய்த கவிஞர்; தமது 73-ம் ஆண்டில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. இரட்சணிய யாத்திரிகம்.
2. இரட்சணிய மனோகரம்.
3. இரட்சணிய சமய நிர்ணயம்.

※

## குகை நமச்சிவாயர்

இவர் திருவண்ணாமலையில் ஒரு குகையில் யோகம் செய்துகொண்டிருந்த ஒரு சித்தர். அவர் செய்த நூல் அருணகிரியந்தாதி. குரு நமச்சிவாயர் என்பவர் இவருடைய மாணவர்.

※

## குணசாகரர்

இவர் சமணப் புலவர். இவர் யாப்பருங் கலக் காரிகை என்னும் நூலுக்கு உரை வகுத்தவர்.

## குமட்டூர்க் கண்ணனூர்

இவர், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்மீது பத்துப்பாட்டுப் பாடியுள்ளார். (பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்து) உம்பற் காட்டு ஐந்நூறு ஊர் பிரமதாயமும், முப்பத்தெட்டு வருடம் தென்னாட்டுள் வருவதனிற் பாகமும் பரிசிலாகப் பெற்றவர்; அந்தணர் குலத்தினர். கண்ணனூரென்று ஒரு புலவர் உளர்; அவரினின்று வேறுபடுத்தற்கு இவர் இங்ஙனம் வழங்கப் பெற்றார் போலும்.



## குமர குருபரர்

**நாடு :**—பாண்டிய நாடு.

**ஊர் :**—ஸ்ரீவைகுண்டம்.

**குலம் :**—சைவ வேளாளர்.

**தாய் :**—சிவகாமசுந்தரி.

**தந்தை :**—சண்முக சிகாமணிக் கவிராயர்.

**காலம் :**—கி. பி. 17-ம் நூற்றாண்டு-மதுரையம்பதியை யாண்ட திருமலை நாயக்க மன்னனுடைய காலம்.

### வாழ்க்கை வரலாறு

இவர் ஐந்து வயதுவரையில் ஊமையாய் இருந்தார்; அதனால் இவருடைய பெற்றோர் துன்பக்கடலில் ஆழ்ந்தனர். பிறகு இவரைத் திருச்செந்தூர் முருகன் கோயிலுக்கு

அழைத்துச் சென்று 'இக் குழவியைப் பேச வைத்தாலன்றி நாங்கள் உணவுண்ணோம்' என்று வரங்கிடப்ப, அவனருளால் (இறைவனருளால்) பேசும் தன்மை பெற்றார்; தமக்கு அருள் புரிந்த முருகன் பெருமைகளைப் புகழ்ந்து "திருச்செந்தூர்க் கந்தர் கலி வெண்பா" என்னும் நூலை முதன்முதலாகப் பாடினர்.

அஞ்ஞான்று தருமபுரம் ஆதீனத் தலைவராய் விளங்கிய மாசிலாமணித் தேசிகர் என்பவரிடம் ஞானோபதேசம் பெற்றார். இவர் தமிழ் நாட்டிலுள்ள பல தலங்களையும் தரிசித்துப் பல நூல்களை இயற்றியுள்ளார். இவர் காசியில் கட்டிய மடம் இன்றும் உள்ளது.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.
2. மீனாட்சியம்மை குறம்.
3. மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை.
4. மதுரைக் கலம்பகம்.
5. சிதம்பரச் செய்யுட் கோவை.
6. முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்.
7. நீதி நெறி விளக்கம்.
8. சகலகலாவல்லி மாலை முதலியன.



## குமரகுருபரதாச சுவாமிகள்

**பெற்றோர்:**—சாத்தப்பப் பிள்ளை; செங்கமலவம்மாள்.

**இடுகுறிப் பெயர்:**—அப்பாவு.

**வரலாறு**

இவர் இளமையிலேயே தெய்வபக்தியில் விஞ்சியவர், கிறித்தவர் கோயிலையும் மகம் மதியர் பள்ளியையும் காணும்போதும் கடவுள் சான்னியத்தியமுள்ளதென்று கருதிக் கை தொழுது செல்லும், பரந்த நோக்க முடையவர். 'எல்லோர்க்கும் ஆண்டவன் ஒரு வனே; நாம் எல்லோரும் அவனுடைய பிள்ளை களே' என்று கூறுவர். இவர் சேது மாத வய்யரென்னும அந்தணரைக் குருவாக அடைந்து அவரிடம் ஆறெழுத்து மந்திரத்தை உபதேசம் பெற்ருர் என்பர்.



## குருகைப் பெருமாள் கவிராயர்

இவர் திருநெல்வேலியிலுள்ள 'ஆழ்வார் திருநகரியில் வாழ்ந்தவர். 'மாறனலங்காரம்' என்னும் பெரிய அணி இலக்கணத்தை இயற்றியவர்.



## குறமகள் இளவெயினி

இவர் ஏறைக்கோனுடைய பண்புகளைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். [புறம்-157.] இள வெயினனுர் என்னும் சான்ருேரும், குறமகள் குறியெயினியார் என்னும் சான்ருேரும் நற்றிணைப் புலவர் வரிசையில் காணப்படு கின்றனர். இவர் நல்லிசைப் புலமை வாய்ந்த மெல்லியலார்.

## கூடலூர் கிழார்

இவர் மதுரையம்பதியினர்.

**குலம் :**—வேளாளர்.

**காலம் :**—கடைச் சங்க காலம்.

இவர் பதினெண் கீழ்க்கணக்குள் ஒன்றெனப்படும் முதுமொழிக் காஞ்சியைப் பாடியவர். ஐங்குறுநூறு என்னும் தொகைநூல் தொகுத்தவர் இவரே. இவர் வான நூற் புலமையுமுடையவர்.



## கூலவாணிகன் சாத்தனார்

**பிறப்பிடம் :**—திருச்சி மாவட்டத்திலுள்ள 'சீத்தலை' என்னும் ஊர்.

**தொழில் :**—கூல வாணிபம்.

**மரபு :**—வணிகர்.

**மதம் :**—பௌத்தம்.

**காலம் :**—கி. பி. 2-ம் நூற்றாண்டின் பிற்பகுதி.

**சம காலத்தவர் :**—இளங்கோவடிகள், சேரன் செங்குட்டுவன்.

**இயற்றிய வேறு பாடல்கள் :**

நற்றிணை முதலிய சங்க நூல்களில் இவர் பாடிய பதினொரு செய்யுட்கள் காணப்படுகின்றன.

**வாழ்க்கை வரலாறு**

இவர் கடைச் சங்கப் புலவர்களில் ஒருவர். இவர் மணிமேகலை என்னும் சீரிய நூலை

இயற்றி வான் புகழ் கொண்டவர். இவரைக் கூலவாணிகன் சாத்தனார், சீத்தலைச் சாத்தனார் என்றுங் கூறுவர். கூலவாணிகன் என்னும் அடைமொழியை நோக்குழி, இவர் தம் குலத் தொழிலைச் செய்து சிறப்புற் றிருக்கலாம். 'சீத்தலை' யென்ற அடைமொழி இவர்க்குப் பொருந்துவது பற்றி இருவகை வரலாறுகள் வழங்குகின்றன. சீத்தலை யென்பது ஓர் ஊர்ப் பெயராகும். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைச் சார்ந்த பெருமளூர்த் தாலூகாவில் உள்ளது.

இவர் சொற் பொருள் ஆராய்ச்சியிலே வல்லுநர்; சங்கத்திலே அரங்கேற்றும் பொருட்டு வரும் நூல்களிலே குற்றங்களைக் களையுந்தோறும் மனம் வருந்தி 'இதையும் கேட்க நேரிட்டதே' என்று தலையிற் குத்திக் கொள்வர்; அவ்வாறு பல்காலும் குத்திக் கொண்டதால், இவர் தலை சீப் பிடித்த தலையாய்து; அதனால், இவர் இப்பெயரினைப் பெற்றார் என்பர் சிலர்.



## கூழங்கைத் தம்பிரான்

**நாடு :—** தொண்டை நாடு.

**ஊர் :—** காஞ்சிபுரம்.

**குலம் :—** வேளாளர்.

**சமயம் :—** சைவம்.

**காலம் :—** 130 ஆண்டுகட்கு முன்.

இவர் இலக்கிய இலக்கணங்களிலும் சித்தாந்த சாத்திரங்களிலும் வல்லவர். இவர் யாழ்ப்பாணத்து வைத்தியலிங்கச் செட்டியாரின் நண்பர். இவர் வண்ணார்பண்ணையில் வசித்தவர். இருபாலை நெல்லை முதலியார்க்கு இலக்கணம் இலக்கியம் கற்பித்தவர். கைத் தலம் கூழை அடைந்தமை பற்றிக் "கூழங் கைத் தம்பிரான்" என்று அழைக்கப்பட்டார்; சித்திவிநாயகர் திருவிரட்டை மணி மாலை" என்னும் நூலைப் பாடியவர்.



## கோபாலகிருட்டின பாரதியார்

**பிறப்பிடம் :—** தஞ்சை மாவட்டத்திலுள்ள ஆனை தாண்டவபுரம்.

**குலம் :—** அந்தணர்.

**காலம் :—** 18-ம் நூற்றுண்டின் பிற்பகுதி.

இவர் பல கீர்த்தனைகளைப் பாடியுள்ளார். 'நந்தனார் சரித்திரக் கீர்த்தனை' என்னும் நூலை இயற்றியுள்ளார்.



## கோவூர் கிழார்

**நாடு :—** சோழ நாடு.

**ஊர் :—** கோவூர்.

**குடி :—** வேளாளர் குடி.

இவர் இளமையிலேயே தம் ஊரகத்திலும் அடுத்த ஊர்களிலுமிருந்த பல சான்றோர்களை அடுத்து, அந்நாளில் வழங்கிய இலக்கிய இலக்கணங்களையும் வழுவறக் கற்றார். நலங்கிள்ளிபால் பெரு நட்பு பூண்டவர்; சோழர் குலத்துத் தோன்றலாகிய நெடுங்கிள்ளி என்ற அரசனுக்கும் நலங்கிள்ளிக்கும் அடிக்கடி பல போர்கள் நிகழ்ந்தன. இவர்களை ஒன்றுபடுத்தினார்; நெடுங்கிள்ளி என்னும் சோழன், இளந்தத்தன் என்னும் புலவரை ஆராயாது கொல்லத் துணிந்த போழ்தும் இப்புலவர் விரைந்து சென்று, அவனைக் கொல்லாவண்ணம் பாதுகாத்தருளினர்; கிள்ளிவளவன் மலையமான் மக்களை யானைக்காலால் இடறுவிக்கத் துணிந்தது கேட்ட இப்புலவர், அக்கிள்ளியின்பாற் விரைந்து சென்று அச்செயலை அகற்றினார். [புறம்-46] அவர் செய்த அறப் பணிகள் அளப்பில. இப்புலவர் குளமுற்றத் துத்துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியுள்ளார்.



## சங்கர பண்டிதர்

**ஊர் :—**யாழ்ப்பாணத்திலுள்ள நீர்வேலி.

**குலம் :—**வேளாளர்.

**சமயம் :—**சைவம்.

**காலம் :—**இற்றைக்கு 45: ஆண்டுகட்கு முன்.

இவர் சிவப்பிரகாச பண்டிதர்க்குத் தந்தை. இவர் சிவகுரு நாதர்க்கு மைந்தர்.

இவர் வடமொழி தென்மொழிகளிலுள்ள இலக்கிய இலக்கணங்களையும் ஆகம சித்தாந்த தருக்க நூல்களையும், தருமசாத்திரங்களையும் கசடறக் கற்றவர். இவர் நூல்களைத் தேடிக் கற்றலிலும் வட நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்தலிலும், பிற மதங்களைக் கண்டித்துச் சைவ சமயத்தை நிலை நாட்டுதலிலும் பெரும் பான்மையுந் தமது காலங் கழித்தவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. சைவப் பிரகாசனம்.
2. சிவ தூஷண கண்டனம்.
3. கிறித்து மத கண்டனம்.
4. அநுட்டான விதி.
5. சத்த சங்கிரகம்.

**உரை நூல்கள்:**

1. சிவபூசையந்தாதியுரை.
2. அக நிர்ணயத் தமிழுரை—முதலியன.



## சங்கரநமச்சிவாயப் புலவர்

**இவரது இயற்பெயர்** :—சங்கரநமச்சிவாயன்.

**நாடு** :—பாண்டிநாடு.

**ஊர்** :—திருநெல்வேலி.

**காலம்**:—சுவாமிநாத தேசிகருடைய மாணவராதலின் அவருடைய காலத்தினரே.

**குலம்** :—வேளாளர்.

**சமயம்** :—சைவம்.

வாழ்க்கை வரலாறு

இவர் சுவாமிநாத தேசிகரிடம் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களைக் கசடறக் கற்றவர்; மருதப்ப தேவர் என்பவருடைய அவைக்களப் புலவராக இருந்தவர். இவர் நன்னூல் விருத்தியுரையைச் செய்தவர். அவ்வுரையிலே பல நூல்களிலிருந்து மேற்கோள்களை எடுத்துக் காட்டியுள்ளமையால், அவர் அந் நூல்களைக் கற்றிருந்தனர் என்பது தேற்றம்.

சம காலத்தவர்:-1. வைத்தியநாத நாவலர். 2. சுப்பிரமணிய தீட்சிதர். 3. சாமிநாத தேசிகர். 4. மயிலேறும்பெருமாள் பிள்ளை.



## சடையப்பர்

இவர் திருவெண்ணெய்நல்லூரைச் சார்ந்தவர்; கம்பரை ஆதரித்த வள்ளல்; இவர் காலம் கி. பி. 9-ம் நூற்றாண்டென்றும், 12-ம் நூற்றாண்டின் பிற்பகுதியென்றும் ஆராய்ச்சியாளர் கூறுப. கம்பர் தாம் பாடிய இராமாயணத்தில் தம்மை ஆதரித்தவராகிய சடையப்பரை பத்து இடங்களில் அமைத்துப் பாடியுள்ளார். இவ்வள்ளலுக்குச் 'சர ராமன்' என்ற ஒரு பெயருண்டு; இதை, "அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும் உடையான் சரராமன் ஊர்" என்பதனால் அறியலாம்.

## சத்திமுற்றப் புலவர்

**பிறப்பிடம்:**—கும்பகோணத்துக்கு அருகிலுள்ள திருச்சத்திமுற்றம்.

**குலம்:**—செங்குந்தர்.

**ஆதரித்தவர்:**—சோழ நாட்டு வள்ளல் - குடிதாங்கி என்பவரால் ஆதரிக்கப் பெற்றவர்.

இவர் செங்குந்த மரபிலே தோன்றிய ஓர் தமிழ்ப் புலவர்; இவர் வறுமை நோயால் பாண்டி நாட்டையடைந்து பாண்டியனைத் தரிசிக்கும் பொருட்டுச் சமயம் பார்க்கும் பொழுது, ஓரிரவு பெருமழையி லகப்பட்டுப் போர்த்துக்கொள்ளத் துணியின்றிக் குளிரால் நடுங்கி, மெலிந்து, மரத்தின் கீழிருந்து தம் மனைவி மக்களை நினைந்து, தம் விதியை நொந்து வருந்தினர். அதுபோழ்து, விணணிலே தெற்கிருந்து வடதிசையை நோக்கிச் சத்தமிட்டுக் கொண்டு பறந்து போகின்ற ஒரு நாரையைக் கண்டார். நாராய்! நாராய்!! என்று கூவித் தம்முடைய நிலைமையை எடுத்துக் கூறினர். அப்போது நகர் சோதனையின் பொருட்டு அவ்வழியிலே சென்ற பாண்டியன் அதனைக் கண்டு இரக்கமுடையவனுகத் தான் அணிந்திருந்த போர்வையை இவர்மீது வீசிப் போயினன். பிறகு விடிந்ததும் அப்புரவலன் சேவகர்களை அழைத்துத் தனது போர்வை முன்னிரவிற் களவு போயிற்று என்று கூறி அக் கள்வனைத் தேடிக் கொணரும்படி கட்டளையிட்டான். அவ்வாறே அச் சேவகர்கள் அப் புலவரை

அழைத்து வருவதைக் கண்ட பாண்டியன் அவரை வரவேற்றுத் தக்கவாறு பரிசளித்து வறுமை நோயைத் தீர்த்தான்.



## சதாசிவ பண்டிதர்

**நாடு:**—வண்ணார்பண்ணையைச் சார்ந்த நாச்சியார் கோவில்.

**குலம்:**—பொன் வினைஞர்.

**தந்தை:**—நமசிவாயம்.

இவர் தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கசடறக் கற்றவர்.

**இயற்றிய நூல்களாவன:**

1. வண்ணையந்தாதி.
2. வண்ணை நகரூஞ்சல்.
3. சிங்கை நகரந்தாதி.

இவை 1887-ல் பதிப்பிக்கப் பெற்றன.



## சந்தோஷம் க. ப.

இவர் சிறந்த தமிழ்ப் புலவர்; வட ஆற்காடு மாவட்டத்தைச் சார்ந்த வேலூரில் 'ஊர்கீஸ்' உயர் நிலைப்பள்ளியின் தலைமைத் தமிழாசிரியராகப் பல்லாண்டுகள் பணியாற்றியவர். இவர் 'மகிழ்நன்' என்னும் புனைப் பெயரால் பற்பல இனிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதி யுள்ளார். இவர் 1943-ல் இயற்கை எய்தினார்.

## சமண முனிவர்கள்

எண்ணாயிரம் சமண முனிவர்கள் கடைச் சங்க காலத்தில் பஞ்சத்தின் காரணமாகத் தம் நாட்டை விட்டுப் பாண்டி நாட்டுக்குச் சென்றனர். அதுபோழ்து அவர்கள் பாண்டி மன்னனால் ஆதரிக்கப்பட்டனர். சமண முனிவர்களின் நாடு நாடாயினபோழ்து அவர்கள் பாண்டியனை விடை கேட்டனர். பாண்டியனோ அவர்களை விட்டுப்பிரிய மனமில்லாமல் விடை கொடுக்கக் காலந் தாழ்த்தினன். இதை யறிந்த அம் முனிவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பாக்களை எழுதித் தத்தம் இருக்கையில் வைத்துவிட்டு மறைந்தனர். அவ்வேடுகள் வையையாற்றில் எறியப்பட்டன. அவற்றுள் 400 பாக்களே நீரை எதிர்த்துக் கரைக்கு வந்தன. அவைகளைப் பதுமனார் என்னும் புலவர் தொகுத்து நாலடியார் என்று பெயரிட்டனர்.



## சம்பந்தர்

இவர் சைவ சமயாச்சாரியருள் ஒருவர். இவர் சீகாழியிலே அந்தணர் குலத்திலே சிவபாதவிருதயருக்குப் பகவதியாரிடத்திலே புதல்வராக அவதரித்தவர்; மூன்றாண்டு நிரம்பியதும் உமா தேவியரால் ஞானப்பா லூட்டப்பட்டவர். அன்றுமுதல் வேதத்து உண்மைப் பொருள்களையெல்லாம் மக்களுக்கு

எடுத்துக் காட்டும்பொருட்டுத் தேவாரங்களைப் பாடத் தொடங்கியவர். இவர் கௌணிய கோத்திரத்தைச் சார்ந்தவர்; இவர் காலம் 4000 ஆண்டுகட்கு முன். இவர் சமணரையும் பௌத்தரையும் வாதில் வென்று சைவத்தைப் பரவச் செய்தார். ஜைனராயிருந்த பாண்டிய அரசனை சைவத்தைத் தழுவச் செய்தனர். திருமுறை கண்ட புராணத்தில் இவர் பாடியனவாகக் கூறியுள்ள பதிகங்களின் தொகை 16000; இப்பொழுதுள்ளன 384.



## சயங்கொண்டார்

**நாடு:**—சோழ நாடு.
**ஊர்:**—தீபங்குடி.
**சமயம்:**—சமணம்.

இப்புலவர்பெருமான், உபயகுலோத்தமன், அபயன் சயதுங்கன் என்றும் வழங்கப் படுகின்றான்; தென்னாட்டுப் புலவர் சிலருடன் பொருது வென்றமையால் 'சயங் கொண்டான்' என்னும் பட்டப் பெயரை அடைந்தான். கலிங்கத்துப்பரணி என்னும் நூலினை இயற்றிப் பெரும் புகழ் பெற்றார். இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவரென்பதற்கு, கலிங்கத்துப்பரணியில் திருமால் முதலிய தேவர்க்கு முன்னர் சிவபெருமான் துதி பாடப் பட்டுள்ளமையாலும், சத்த மாதர்களுடைய வணக்கம் கூறப் பட்டிருத்தலானும் இதுவே

போதிய சான்ருகும். இவர் காலத்தைப்பற்றிப் பலர் பலவாருகக் கூறுகின்றனர்; அது எங்ஙனமாயினும் ஆகுக. இவரது காலம் கி. பி. 12-ம் நூற்ருண்டு என்று ஒருவாறு துணிந்து கூறலாம். "வெண்பாவிற் புகழேந்தி, பரணிக்கோர் சயங்கொண்டான்" என்பதி லிருந்து சயங்கொண்டான் புலமை நனி விளங்கும்.



## சர்க்கரைப் புலவர்

**பிறப்பிடம்:**—இராமநாத புரம் — கடாரம் என்னும் ஊரினர்; சிறந்த சைவர்.

**காலம்:**—1645 – '70.

இவர் பரம்பரையில் தோன்றிய இராம சாமிப் புலவர் என்பவர் சிதம்பரம் அண்ணு மலைப் பல்கலைக்கழகத்தில் பல்லாண்டுகளாகத் தமிழ்ப் பணி புரிந்துள்ளார்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. திருச் செந்தூர்க் கோவை.
2. சர்க்கரைப் புலவர் மிழலைச் சதகம்.



## சரவணமுத்துப் புலவர்

**ஊர்:**—நல்லூர்.

**தந்தை:**—மனப்புலி முதலியார்.

இவர் இருபாலைச் சேனுதிராய முதலியார் அவர்களிடம் இலக்கிய இலக்கணப் பயிற்சி

பெற்றவர்; வேதாந்த சித்தாந்த நூல்களில் தெளிந்த அறிவுடையவர். ஆறுமுக நாவலரும் இவரிடம் கல்வி கற்றவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. *வேதாந்த சுயஞ்சோதி.*
2. *ஆத்தும போதப் பிரகாசிகை.*



## சவ்வாதுப் புலவர்

**நாடு:**—*தொண்டை மண்டலம்.*

இவர் பிறந்த ஊர்-பெற்ருேர்-மரபு இவைகளை வரையறுத்துக் கூறுவதற்கு ஏற்ற ஆதாரங்களில்லை. இவருடைய பாடல்கள் இன்பத்தைத் தருவன. இவர் பற்பல வள்ளல்கள் பாற் சென்று பரிசு பெற்ருர். இவர் ஆனந்தரங்க பூபதி, சோலையப்ப முதலியார், சேதுபதி மன்னர் முதலியோர்பாற் சென்று பரிசில் பெற்று வந்தனர் என்பது இவருடைய பாடல்களால் அறியலாம். இவர் முகம்மதிய தமிழ்ப் புலவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. *ஆண்டவன் பிள்ளைத் தமிழ்.*

**இவர் சர்க்கரைப் புலவர் காலத்தில் வாழ்ந்தவர்.**

## சாந்தலிங்க சுவாமிகள்

இவர் துறையூரில் வாழ்ந்து வந்த ஓர் தமிழ்ப் புலவர்; சமய சாத்திர விசாரத்திற் சிறந்தவர்; வீர சைவர்; இளமையிலேயே துறவறத்தை மேற்கொண்டவர்.

**இவர் இயற்றிய நூல்கள்:**

1. அவிரோதவுந்தியார்.
2. வைராக்கிய சதகம்.
3. வைராக்கிய தீபம்.
4. கொலை மறுத்தல்.

இவர் சங்கம குலத்தில் தோன்றியவர்.



## சாந்தலிங்கக் கவிராசர்

இவரூர் சோழ மண்டலத்திலுள்ள தண்டலைச்சேரி. இவர் சைவ சமயத்தினர். இவர் போலி வேடத்தாரை எள்ளி நகையாடும் இயல்பினர். இவர் வேதாகமங்களும், புராணங்களும் கூறுகின்ற நீதிகளை நோக்கி, உலகில் வழங்கும் பழமொழிகளையும் அவற்றோடு பொருந்திப் 'பழமொழி விளக்கம்' எனும் ஒரு நூல் செய்தவர்; அதில் உலகியலும் கூறப்பட்டுள்ளது; இவர், பொய் சொல்லும் புல்லரைக் குறித்தும் செய்ந்நன்றி மறப்பவர்களைக் குறித்தும் பலபடியாகப் பாடியுள்ளார். பாடும் வகை பயிலாது பாடுவதை நோக்கிப்

பின்வருமாறு கூறியுள்ளார். "தழ தழத்துப் பாடுவதின் மவுனமாயிருப்பதுவே தக்க தாகும்"—என்பர்.



## சாந்துப் புலவர்

**நாடு:**—பாண்டி நாடு — திருப்புனவாயிலையடுத்த சிறுகம்பையூர் என்னும் ஊரில் தோன்றியவர்; வேளாளர் குலத்தினர்; சைவ சமயத்தினர்.

இவர் மயூரக்கோவை என்னும் பிரபந்தம் பாடியவர்; இது சொற் சிறப்பும், பொருட் சிறப்பும் உடையது. உதாரணமாக ஈண்டு ஓர் பாடலை நோக்குவம்.

"பாடாத தும்பி யணியாக மாதங்கம் பட்சி யொன்றிற்
கோமத நாகஞ் சூடாத கரிகொடி யோர் சிறைக்குத்
தேடா விலங்கு குகன்மயில் வெற்பிற் றெரித்த கொம்பு
வாடாத மாவென் யதுகாய மேவி வ்ரிற் சொல்லுமே"

இது வேழம், விஞதல், தும்பி, மாதங்கம், நாகம், கரி, விலங்கு, மா என்பன யானையையே குறிக்கும்.



## சாமிநாதய்யர் உ. வே.

**பிறப்பிடம்:**—சோழ நாடு-குடந்தைக்கு மேற்கிலுள்ள உத்தமதானபுரம்.

**பெற்றோர்:**—வேங்கட சுப்பையர்.

**காலம்:**—9-2-1855.

**ஆசிரியர்:**—மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை;

இவர் இளமையிலேயே கல்வி கற்ருர்; தன் தந்தையாரிடத்தில் நிகண்டு, சதகம் முதலிய நூல்களையும் கற்ருர்; தந்தையார் இசைப் பயிற்சியில் தேர்ந்தவர்; ஆதலால் அவரிடத்தில் சங்கீதத்தைப் பயின்ருர்; இவர் பின்னர் அரியலூர் சடகோப ஐயங்காரிடம் சில பிரபந்தங்களையும், அதன் பின்னர் செங்கணம் விருத்தாசல ரெட்டியாரிடம் இலக்கண நூல்கள் சிலவற்றையும் பாடங் கேட்டார். இவர் மீனுட்சி சுந்தரம் பிள்ளை அவர்களிடமும், திருவாவடுதுறை மடாதிபதிகளான சுப்பிரமணிய தேசிகரிடமும் பாடங்கேட்டு வந்தனர். இவர் பல கல்லூரிகளில் தமிழாசிரியர் பணியேற்றுத் தமிழ் மொழிக்கு ஆக்கந் தேடினுர்.

இவர்க்குக் கிடைத்த பட்டங்கள்: 1. மகாமகோபாத்தியாயர். [1906.] 2. தாட்சிணுத்ய கலாநிதி. [1925.] 3. "டாக்டர்". [1902.]

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. மீனுட்சிசுந்தரம் பிள்ளை சரித்திரம்.
2. கண்டதும் கேட்டதும்.
3. தியாகராச செட்டியார் சரித்திரம்.
4. புதியதும் பழையதும்.
5. என் சரித்திரம் (சுய சரிதை)



## சாமிநாத தேசிகர்

**நாடு:**—பாண்டி நாடு.

**குலம்:**—வேளாளர்.

**மதம்:**—சைவம்.

**ஆசிரியர்:**—மயிலேறும்பெருமாள் பிள்ளை.

**காலம்:**—18-ம் நூற்றாண்டின் துவக்கம்.

**வாழ்க்கை வரலாறு**

இவர் வடமொழி தென்மொழி என்னும் இருமொழியிலும் வல்லவர்; கல்விக் கடலாக விளங்கியவர்; இவரது இயற்பெயர் சாமிநாதர். 'தேசிகர்' என்பது ஞான நூல்களைக் கற்று அறிவொழுக்கங்களிற் சிறந்து துறவு பூண் டமைபற்றி வழங்கிய சிறப்புப் பெயரென்பர். இவர் அம்பலவாண தேசிகரிடம் சிவதீட்சை பெற்றவர். இவர் சொற்போர் புரிவதில் வல்லுநர்.

**இவர் இயற்றிய நூல்கள்:**

1. இலக்கணக் கொத்துரை.
2. தச காரியம்.

சமகாலத்தவர்:—1. வைத்தியநாத நாவலர்; 2. சுப்பிரமணிய தீட்சிதர்; 3. சங்கர நமச்சிவாயப் புலவர்.



## சிங்காரவேல் முதலியார் ஆ.

இவர், பச்சையப்பன் கலாசாலைத் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றியவர்; பட்டினத் தடிகள் பாடல்கட்கோர் உரை வகுத்தவர்; அபிதான சிந்தாமணி என்னும் தமிழ்ப் பேரகராதியின் ஆசிரியர் இவரே.

## சிதம்பரப் பிள்ளை

**நாடு** :—ஈழ நாடு – யாழ்ப்பாணத்திலுள்ள சங்குவேலி என்னும் ஊரிலே தோன்றியவர்.

**குலம்** :— வேளாளர்.

**சமயம்** :—கிறித்தவம்.

**காலம்** :—இற்றைக்கு 27 ஆண்டுகட்கு முன்.

இவர் ஆங்கில மொழியில் தர்க்கம்-கணிதம் முதலிய துறைகளிலும் வல்லவர். கல்லூரியிலே ஆசிரியராய்ப் பணியாற்றியவர்; தமிழ் மொழியிலுள்ள இலக்கியம்–இலக்கணம் முதலியன கற்றுத் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றி வாழ்ந்தவர்; ஆங்கில மொழிச் சொற்களைத் தமிழிற் பெயர்க்குங்கால் அவற்றிற் கேற்பச் சொற்களைத் தெரிந்தெடுப்பதில் சிறந்தவர்; 'ஆங்கிலம் – தமிழ்' அகராதி யொன்றைச் செய்தவர். இலங்கை நேசன் முதலிய பத்திரிகைகளில் பல கட்டுரைகளை வரைந்தவர்.

**இயற்றிய நூல்கள்** :

1. இலக்கிய சங்கிரசம்.
2. தமிழ் வியாகரணம்.
3. நியாய இலக்கணம்.



## சிவஞான முனிவர்

**பிள்ளைத் திருநாமம்** :—முக்களாலிங்கர்.

இவர் துறவு வழியைக் கைக்கொண்ட காலத்தில் 'சிவஞானம்' என்று சான்றோர் அழைக்கலாயினர்.

**நாடு** :—பாண்டி நாடு.

**ஊர்** :—பாபநாசத்திற்கு அண்மையிலுள்ள விக்கிரம சிங்கபுரம்.

**காலம்** :—200 ஆண்டுகட்கு முன்.

**குலம்** :—சைவ வேளாளர்.

**சமயம்** :—சைவ சமயம்.

**பெற்றோர்** :—ஆனந்தக் கூத்தர்—மயிலம்மை.

**வரலாறு**

இவர் இளமையிலேயே அடியார்களிடத்து அன்பு, கல்வி, ஒழுக்கம் முதலியவற்றில் சிறந்து விளங்கினார். இவர் ஐந்திலக்கணத்தைத் தக்கார் மாட்டு ஐயந்திரிபறக் கற்றுத் தேர்ந்தார். தாம் கற்ற நூல்களைத் திருத்தணிகைக் கச்சியப்பர், தொட்டிக்கலை சுப்ரமணிய முனிவர், கச்சிச் சிதம்பர முனிவர், சரவண பத்தர் முதலியவர்கட்கும் நன்கு உணர்த்தி அவர்களையும் கல்வியில் வல்லவராகச் செய்தார். இவர் 'இலக்கண விளக்கச் சூறாவளி' என்னும் ஒரு நூலினை இயற்றினார். சங்கர நமச்சிவாயப் புலவரால் எழுதப் பெற்ற நன்னூலை நன்கு பரிசோதித்து தாம் கண்டறிந்த இலக்கண முடிபுகளையெல்லாம் இடையிடையே செருகி அந்நூலை சிறப்புறச் செய்தார். இவர் பல நூல்களை எழுதியுள்ளார்.

**இவர் இயற்றிய நூல்கள் :**

1. காஞ்சிபுராணத்தின் முதற்காண்டம்.
2. சோமேசர் முதுமொழி வெண்பா.
3. குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி.

4. கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி.
5. கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்.
6. குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்.
7. திருவேகம்பரந்தாதி.
8. தருக்க சங்கிரகம்.
9. சித்தாந்தப் பிரகாசிகை.
10. திருத்தொண்டர் திருநாமக்கோவை.



## சிவப்பிரகாசர்

**பிறப்பிடம் :**—காஞ்சிபுரம்.

**குலம் :**—தொண்டைமண்டல வேளாளர்.

**தந்தை :**—குமாரசாமி தேசிகர்.

**காலம் :**—300 ஆண்டுகட்கு முன்.

இவர் இளமையிலேயே தம் தந்தையாரை இழந்தார். இவர் சிவ பத்தியுடையவர்; திருவண்ணுமலையில் எழுந்தருளிய சிவபெருமான் மீது சோணசைல மாலை என்னும் நூலைப் பாடினர். இவர் துறைமங்கலம் சென்று அவ்வூரின் அதிபதியாகிய அண்ணுமலை ரெட்டியாரின் வேண்டுகோளின்படி தமக்காகக் கட்டப்பட்ட மடத்தில் இரண்டு ஆண்டுகள் தங்கியிருந்தனர். தான் மேலும் கல்வி பயிலவேண்டுமென்ற விருப்பத்தை சிவப்பிரகாசர், ரெட்டியாரிடம் அறிவிக்க, அவர் 300 பொற்காசுகளைக் கொடுத்து வழியனுப்பினர். பிறகு,

இவர் தருமபுரி ஆதீனத்து வெள்ளியம்பல வாண சுவாமிகள்பால் சென்று பதினைந்து நாட்களில், தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றனர். சிவப் பிரகாசர், ரெட்டியாரிடம் தாம் பெற்ற 300 பொற்காசுகளையும் அம்பல வாணருக்குக் காணிக்கையாகக் கொடுத்தனர். இவர் திருச்செந்தூரில் தம் ஆசிரியரை அவ மதித்து வந்த ஒரு தமிழ்ப் புலவரை திருச் செந்தில் நீரோட்டகயமக அந்தாதி பாடி வென்றார்.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. பல மலைநாதர்மீது திருவெங்கைக்கோவை, கலம் பகம், உலா அலங்காரம் என்னும் பிரபந்தங்கள்.
2. சிவப்பிரகாச விகாசம்.
3. தர்க்க பரிபாஷை.
4. சதமணிமாலை.
5. நால்வர் நான்மணிமாலை.
6. நன்னெறி.
7. கண்ணப்பச் சருக்கம்.
8. நக்கீரச் சருக்கம்.
9. பிரபுலிங்கலீலை.
10. திருக்கூவற்புராணம்.
11. சித்தாந்த சிகாமணி.
12. வேதாந்த சூடாமணி.
13. நிரஞ்சன மாலை.
14. கைத்தல மாலை.
15. அபிடேக மாலை.
16. இஷ்டலிங்கப் பெருங்கழி முதலியன.

## சீதக்காதி

இவர் காயல் பட்டினத்துப் பெருஞ் செல்வர். இவரது இயற்பெயர் ஷெய்கு அப்துல் காதர் மரக்காயர்; சிறந்த வள்ளல்; பஞ்ச காலத்திலும் எவர் தடுத்துக் கூறினும் வேண்டியவர்கட்குப் பொருள் கொடாமல் இரார். இரப்பவர்க்குச் செம்பொன்னைப் பிடிப் பிடியாக அள்ளிக் கொடுக்கும் இயல்பினர்; தமிழ்ப்பற்றுடையவர்; அது பற்றிப் படிக் காசுப் புலவரை நண்பராகக் கொண்டவர். இவர் இறந்தபோது படிக்காசுப் புலவர் பாடிய "தோட்டாளன்" என்னும் பாடல் நெஞ்சை உருக்கத் தக்கது; எணணற்ற புலவர்களை ஆதரித்தவர்; நாட்டு மக்களை துன்பங்களி லிருந்து பாதுகாத்தவர்; ஏழைகளிடம் இரக்க முடையவர்.



## சீனிவாசப் பிள்ளை கே. எஸ்.

இவர் தஞ்சையில் பல்லாண்டுகளாக வழக்கறிஞராய்ப் பணியாற்றியவர்; சீரிய தமிழ்ப் பற்றுடையவர்; 'தமிழ் வரலாறு' எனும் நூலை இயற்றியவர்; இந்நூல் புலவர் தேர்வுக்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது; இவர் சிறந்த ஆராய்ச்சித் திறனுடையவர்.

## சுத்தானந்த பாரதியார்

இவர் சமரச நோக்குடையவர்; சிறந்த நாட்டுப் பற்றுடையவர்; இவருடைய பாடல்கள் தமிழர்களின் ஆர்வத்தைத் தட்டி எழுப்பும் ஆற்றல் பொருந்தியவை; சிவகங்கையில் தோன்றி, அரவிந்தர் மடத்தில் பல்லாண்டுகள் இருந்து அறப்பணி புரிந்த அண்ணலாவர்.

**பெற்றோர்** :—ஜடாதரர்-காமாட்சி.

**தோற்றம்** :—1897-ம் ஆண்டு.

**பிள்ளைத் திருநாமம்** :—வேங்கட சுப்பிரமணியம்.

இவர் இயற்றியுள்ள பல உரை நடை நூல்களும், கவிதைகளும் மாணவர்களால் விரும்பிக் கற்கப்படுகின்றன. நடை மிகவும் எளியது.



## சுந்தரம் பிள்ளை பி. (பேராசிரியர்)

**நாடு** :—சேர நாடாகிய திருவாங்கூர்.

**ஊர்** :—ஆலப்புழை.

**காலம்** :—1855-ம் ஆண்டு, ஏப்ரல், 4-ம் நாள்.

**தந்தை** :—பெருமாள் பிள்ளை.

**தாய்** :—மாடத்தியம்மை.

இவர் தந்தையார் சோமசுந்தரக் கடவுளை நினைத்து இவருக்குச் 'சுந்தரம்' என்ற பெயரை இட்டனர். இவர் 1876-ல் பி. ஏ., பட்டம் பெற்றார். இவரைத் திருவனந்தபுரக் கல்லூரியிலே வரலாறும், தத்துவ நூலும் கற்பிக்கும்

ஆசிரியராக ஏற்றுக்கொண்டனர். பிறகு இவர் தத்துவக் கலையில் எம். ஏ. பட்டம் பெற்றார்; தமிழ் வளர்ச்சிக்கு அரும்பாடு பட்டவர். திரு ஞான சம்பந்தரின் காலத்தை ஆராய்ந்து முடிவு கட்டியவர். 'மனோன்மணீயம்' என்னும் சிறந்த நாடக நூலை இயற்றிய பேராசிரியர் இவரே. இப் பெரியார் 1897-ம் ஆண்டு, ஏப்ரல் மாதம், 25-ம் நாள் மறைந்தார்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. மனோன்மணீயம்.
2. நூற்றொகை விளக்கம்.



## சுந்தரமூர்த்தி நாயனார்

**நாடு:**—திருமுனைப்பாடி.
**ஊர்:**—திருநாவலூர்.
**மறு பெயர்கள்:**—தம்பிரான் தோழர்; நாவலூரர்; வன்றொண்டர்.
**காலம்:**—கி. பி. 655.
**குலம்:**—ஆதி சைவம்.

இவர் சைவ சமய குரவர் நால்வருள் ஒருவர்; இவர் சடையனாருக்கு, இசைஞானியார் வயிற்றிலே அவதரித்தவர்; நரசிங்கமுனையர் என்பவரால் வளர்க்கப்பட்டார். சுந்தரர் மணப் பருவமடைந்து மணக் கோலத்துடன் இருந்தபோழ்து, சிவபெருமான் கிழ வேதியராக வந்து, ஆவணவோலை காட்டி, அவரை

ஆட்கொண்டார். இவர் பிறகு பரவையாரை மணந்தார். சுந்தரமூர்த்தி நாயனாரும், சேரமான் பெருமானும் சமகாலத்தவர் என்பதைப் பெரிய புராணத்தால் அறியலாம். இவர் பாடினவாகக் கூறும் பதிகங்கள் 38,000. இப்பொழுதுள்ளன 100. இவருடைய காலம் இரண்டாம் நரசிம்ம வர்மனுடைய காலமேயாம்.



## சுப்பிரமணிய தீட்சிதர்

இவர், நெல்லை வட்டத்தைச் சார்ந்த ஆழ்வார் திருநகரி என்னும் ஊரில் தோன்றியவர். தென் மொழி, வடமொழி ஆகிய இவ்விரு மொழிகளிலும் புலமை பெற்றவர். இவருடைய காலமும், வைத்தியநாத தேசிகருடைய காலமும் ஒன்றே என்பது நூல் துணிபு. இவர் சைவர். இவர் தம் நூலைத் தொடங்கும்போதே "நீர் கொண்ட சென்னி மகேச்சுரன்" எனத் தெய்வ வணக்கம் கூறிச் செல்வதால், இவர் சைவ வேதியராவர். இவர் இயற்றிய நூல் 'பிரயோக விவேகம்'.



## சுப்பிரமணிய பாரதியார்

**பிறப்பிடம் :—** எட்டையபுரம்.

**பெற்றோர் :—** சின்னசாமி ஐயர் - இலக்குமி.

**குலம் :—** அந்தணர்.

**காலம் :—** 1882 - 1921.

இவர் இளமையில் எட்டையபுரத்தில் கல்வி கற்றார்; பின்னர் நெல்லையில் ஆங்கிலக் கல்வி கற்றார்; பன்னிரண்டாம் அகவையில் கவி பாடும் வன்மை பெற்றார்; இவர் 'சுதேச மித்திரன' என்னும் செய்தித்தாளின் உதவி ஆசிரியராக இருந்தார்; பின்னர் 'இந்தியா' 'பால பாரதம்' முதலிய பத்திரிகைகளை இவர் தாமே நடத்தினார்; சுதந்திரக் கிளர்ச்சியில் ஈடுபட்டார்; அதனால் சிறை புகுந்தார்; இவர் நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் உடையவர்; மக்களிடையே சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய உணர்ச்சிகளைப் பரவச் செய்தவர் இவரே. இவர் உவமையைக் கையாள்வதில் வல்லவர்; தற்காலப் புலவர்களில் தலைசிறந்தவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. முருகன் பாட்டு.
2. கண்ணன் பாட்டு.
3. தராசு.
4. பாஞ்சாலி சபதம்.
5. குயில் பாட்டு.
6. ஞானரதம்.
7. சந்திரிகையின் கதை—முதலியன.

இவர் பாரத நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்டவர்; இனிய கீதங்களால் வீர சுதந்திர உணர்ச்சியைத் தட்டி எழுப்பினார்; பாடல்கள் எளிதில் பொருள் விளங்குவன; உரிமை உணர்ச்சியை ஊட்டுவன; இவருடைய பாடல்கள் இன்பத்தேன் பொழிவன.

## சுப்பிரமணிய பிள்ளை கா.

இவர் சிறந்த தமிழறிஞர்; திருநெல்வேலியைச் சார்ந்தவர். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர்; ஆங்கிலத்தில் எம்.ஏ., எம்.எல்., பட்டம் பெற்றவர்; தாகூர் சட்ட விரிவுரையாளர் என்னும் உயர் நிலையைப் பெற்றவர். இவர் சிறந்த நூல்களை இயற்றியுள்ளார்.

1. திருவாசக விரிவுரை.
2. இலக்கிய வரலாறு.
3. திருக்குறள் பொழிப்புரை.
4. மெய்யறிவு—முதலியன.



## சுப்பிரமணியப் புலவர்

இவர் முருகப் பெருமான் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் பல இடங்களுக்குச் சென்று அவனை இடைவிடாது துதித்து வந்தனர். அவன்து திருவருளால் கல்வி அறிவு விளங்கிச் சிறந்த கவியாஞர். இவர் 'மனிதர்களைப் பாடுவதில்லை' என்று சூளுறவு கொண்டார். இந்நிலையில் வறுமை நோய் வாட்ட அவர் ஒரு நாள் அம்முருகன் பெயர் வாய்ந்த ஓர் அரசன் இருப்பதைக் கேட்டு அவனைப் பாடிப் பரிசில் பெற்று வாழ்ந்தனர்.

## சுப்பிரமணிய முனிவர் (தொட்டிக்கலை)

இவர், தொண்டை மண்டலத்திலுள்ள தொட்டிக் கலைசையில் தோன்றியவர்.

**சமயம்:**—சைவம்.

**காலம்:**—சிவஞான முனிவர் காலம்.

இவர் சிவஞான முனிவர்க்கு மாணவர்; இலக்கிய நூல்களையும், சித்தாந்த சாத்திரங்களையும் கசடறக் கற்றவர்; சிலேடை மடக்கு முதலிய சொல்லணிகளை வைத்துக் கவி பாடுவதில் தலை சிறந்தவர்; சுப்பிரமணிய திருவிருத்தமும், திருத்தணிகைத் திருவிருத்தமும் பாடி அவற்றைப் பாராயணஞ் செய்த இருவர்க்கு முறையே குட்ட நோயும், குருட்டுத் தன்மையும் நீங்கும் வண்ணஞ் செய்தனர்.

### இவர் இயற்றிய நூல்கள்

1. துறைசைக் கோவை.
2. கலைசைக் கோவை.
3. கலைசைச் சிலேடை வெண்பா.
4. சிதம்பரேசர் வண்ணம்.
5. திருக்குற்றாலச் சித்தித் திருவிருத்தம்.
6. பழனி முருகக் கடவுள் பஞ்சரத்தினமாலை.
7. திருச்சிற்றம்பலத் தேசிகர்மீது சிந்து.
8. பஞ்சரத்னமாலை—முதலியன.

## சுவாமிநாதர்

**தந்தை :—** அருணாசலம் பிள்ளை.
**நாடு :—** யாழ்ப்பாணம்.
**ஊர் :—** மாணிப்பாய்.
**குடி :—** வேளாண்குடி.
**காலம் :—** ஏறக்குறைய 120 ஆண்டுகட்கு முன்.

இவர் சங்கீதத்தில் சிறந்து விளங்கியவர்; இவர் காலத்திலே மாணிப்பாய் என்னுமூரே சங்கீத வித்தையிற் சிறந்து விளங்கியதென்றும், பெயர் படைத்த வாச்சியகாரரும் இவர் முன்னிலையில் வாச்சியங்களை இயம்புதற்கு அஞ்சுவரென்றும் கூறுவர். நாடகம் நடிப்பதிலும் சிறப்புற்று விளங்கினார்.

**இவர் பாடிய நாடகங்கள் :**

1. இராம நாடகம்.
2. தருமபுத்திர நாடகம்.



## சூரியநாராயண சாஸ்திரியார்

(பரிதிமாற் கலைஞன்)

**நாடு :—** பாண்டி நாடு—மதுரை.
**ஊர் :—** விளாச்சேரி.
**தந்தை :—** கோவிந்த சிவனார்.
**காலம் :—** 1871 - 1903.

இவர் சிறந்த தமிழ்ப் பற்றுடையவர்; தம் பெயருக்கேற்ப 'தமிழில்' 'பரிதிமாற்கலைஞன்'

என்னும் புனைப் பெயரைப் பூண்டவர்; பல துறைகளிலும் தமிழ் மொழிக்குப் பணியாற்றியவர்; சைவ சமயத்திலே மிகுந்த பற்றுடைய மரபினராதலால் இவரும் இம் மதத்தை அபிமானித்தார்; எப்பொருளையும் நுட்பமாக ஆராய்ந்தறியும் இயல்பினர்; பத்து வயதுவரையில் தமிழ்ப் பள்ளியிலே பயின்று, பிறகு ஆங்கிலக் கல்லூரியில் சேர்ந்து பி. ஏ., தேர்வில் வெற்றி பெற்றார்; சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராய்ப் பணியேற்றுத் தமிழ் மொழிக்கு ஆக்கந் தேடியவர். இப்பெரியார் 1903-ம் ஆண்டு, நவம்பர் திங்கள், 22-ம் நாள் சிவபதம் அடைந்தார்; அந்தணருள் நடுநிலைமையும், தமிழார்வமும் உள்ளவர்களில் இவரைப்போல் எவருமில்லை; உயரிய செந்தமிழ் நடையிற் பேசுவதிலும் எழுதுவதிலும் வல்லவர்; நாடகப் புலமையுடையவர்; பாவன்மையுடையவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. ரூபாவதி.
2. கலாவதி.
3. மான விஜயம்.
4. நாடகவியல்.
5. தனிப்பாசுரத் தொகை.
6. பாவலர் விருந்து.
7. தமிழ்மொழி வரலாறு—முதலியன.

## செகவீரராம பாண்டியர்

**பிறப்பிடம் :—** தூத்துக்குடியைச் சார்ந்த 'ஓட்ட நத்தம்' என்னும் ஊர்.

இவர் சிறந்த தமிழ்ப் பற்றுடையவர்.

**இவர் இயற்றிய நூல்கள் :**

1. திருக்குறட் குமரேச வெண்பா.
2. கம்பராமாயண விரிவுரை.

இவை பலராலும் விரும்பிக் கற்கப்படுகின்றன.

## செல்வகேசவராய முதலியார்

இவர் சென்னை—பச்சையப்பன் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றியவர்; தமிழில் மிகுந்த ஆர்வமுடையவர்; தமிழில் எம்.ஏ., தேர்வில் முதன் முதலில் வெற்றிபெற்றவர்; தம் மக்களுக்குப் பண்டைத் தமிழாசிரியர்கள் பெயரையே இவர் அமைத்திருப்பது கருதத்தக்கது. தமிழில் பிழையின்றி உரை நடை நூல்களை எழுதுவதில் மற்றவருக்கு வழிகாட்டியாக விளங்கியவர். தமிழ் மொழியைப் பற்றி இவர் எழுதியுள்ள கட்டுரை அனைவராலும் போற்றப்படுகிறது. கலிங்கத்துப்பரணி என்னும் நூலை உரைநடையில் எழுதியுள்ளார். தமிழைப் பற்றி இவர் எழுதிய வியாசம் தமிழ்ப் பெருமையையும் தமிழரது நாகரிகச் சிறப்பையும் இனிது விளக்க வல்லது.

## சேக்கிழார்

**இயற்பெயர் :—** அருண்மொழித் தேவர்.
**சிறப்புப் பெயர் :—** உத்தம சோழப் பல்லவர்; தொண்டர் சீர் பரவுவார்.
**ஊர் :—** தொண்டை நாட்டிலுள்ள குன்றத்தூர்.
**மரபு :—** வேளாளர்.
**சமயம் :—** சைவம்.
**காலம் :—** கி. பி. 11-ம் நூற்றாண்டு; 12-ம் நூற்றாண்டு என்றும் ஒரு சாரார் கூறுவர்.

இவர் சேக்கிழார் குடியிற்றோன்றி அக் குடிக்குச் சிறப்பைத் தேடித் தந்தமையின் 'சேக்கிழார்' என்றே குடிப் பெயரால் வழங்கப்பட்டனர். இவருடைய அறிவாற்றலைக் கண்டு வியந்த இரண்டாம் குலோத்துங்க சோழன், இவரைத் தன்னுடைய அவையில் அமைச்சராக்கிக் கொண்டார். அதுபோழ்து இவர்க்கு 'உத்தம சோழப் பல்லவராயன்' என்ற சிறப்புப் பெயர் கொடுக்கப்பட்டது. இவர் "திருத்தொண்டர் புராணம்" என்னும் சீரிய நூலை இயற்றி வான்புகழ் கொண்டவர். இந்நூல் பாடி முடித்தவுடன், சோழன் இவருக்குத் தொண்டர் சீர் பரவுவார் என்னும் பெயர் கொடுத்தான். சோழன் சைவ சமயத்தைச் சார்ந்தவனாயிருந்தும் சிந்தாமணி முதலிய சைனசமயக் காவியங்களைக் கற்பதிலும் கேட்பதிலும் காலங்கழித்து வந்தான். இதனையறிந்த சேக்கிழார் அந்நூல்களைக் கற்பதனால் யாதொரு பயனுமில்லை என்று கூறி, இம்மை

மறுமை இன்பங்களை அளிக்கவல்ல அரனடியார்களின் வரலாறுகளை எடுத்துரைத்தார். அதைக் கேட்டு மகிழ்ந்தான் சோழன்; அவ்வரையனுடைய வேண்டுகோளுக் கிணங்கி, இவர் இந்நூலைப் பாடியருளினர் என்ப.

❋

## சேதிராயர்

இவர் திருக்கோவலூருக்கு அண்மையிலுள்ள சேதிநாட்டு அரசர் பரம்பரையில் தோன்றியவர்; இவர் தில்லை நடராசப் பெருமான்மீது ஒரு பதிகம் பாடியுள்ளார். இஃது ஒன்பதாம் திருமுறையில் அடங்கும். [திருவிசைப்பாப் பதிகம்].

❋

## சேதுப் பிள்ளை *ரா. பி.*

இவர் நெல்லையைச் சார்ந்தவர்; திருநெல்வேலிக் கார்காத்த வேளாள மரபினர்; உரைநடை நூல்களை எழுதுவதில் தலைசிறந்தவர்; சொற்பொழிவாற்றுவதில் இவருக்கு நிகரானவர் ஒருவருமிலர். இவர் சிலகாலம் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய் இருந்தார்; அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றியவர். இதுபோழ்து இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிருர். இவர் பி.ஏ., பி.எல்., பட்டம் பெற்றவர்.

**இவர் எழுதிய நூல்களாவன:**

1. திருக்குறள் நூல் நயம்.
2. சிலப்பதிகார நூல் நயம்.
3. தமிழ் நாட்டுப் பெண்மணிகள்.
4. கம்பராமாயண வியாசம் முதலியன.



## சேரமான் பெருமாள்

இவர் சுந்தரமூர்த்தி நாயனாரின் சிறந்த நண்பர். இவர் 11-ம் நூற்றாண்டின் முற் பகுதியில் வாழ்ந்தவர்; இவர் வரலாற்றைப் பெரிய புராணத்தில் காணலாம். இவர் மகோதை யென்னும் பெயரினையுடைய கொடுங்கோளூரில் சேர அரசர் மரபில் தோன்றினார். இவருடைய பிள்ளைத் திரு நாமம்: பெருமாள் கோதையார். இவர்க்கு 'கழறிற்றறிவார்' என்னும் திருப்பெயரும் வழங்குவதாயிற்று. சிவபெருமானிடத்து இடையறா அன்பு பூண்டவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. ஞானவுலா.
2. திருவாரூர் மும்மணிக் கோவை.
3. பொன்வண்ணத்தந்தாதி முதலியன.

## சேனாவரையர்

**பெயர்** :—சேனாவரையர் — என்பதற்குப் 'படைத் தலைவர்' என்பது பொருளாம். இது சேனாதிபதிகளாய் விளங்கியவர்க்கு அரசர்கள் வழங்கிவந்த சிறப்புப் பெயர்.

**பிறப்பிடம்** :—பாண்டிநாடு.

**காலம்** :—சற்றேறக்குறைய 1250 ஆண்டுகட்கு முன்.

**குலம்** :—சிலர் பார்ப்பனர் என்பர்—சான்று:—'இவர் வடநூற் கடலை நிலை கண்டுணர்ந்தவரென்பது' பற்றிப் பார்ப்பனர் என்று கூறுவாருமுளர்.

**சமயம்** :—சைவம்-சான்று :—இவர் சொல்லதிகாரத் திற்கு உரை வகுத்துள்ளார்; அவ்வுரைக்கு முன்பு ஆனைமுகக் கடவுள், சிவபெருமான், கலைமகள், அகத்தியர் ஆகிய நால்வரையும் போற்றும் பாடல்கள் காணப்படுகின்றன.

இவர் இருமொழிப் புலமையும் பெற்றவர். தொல்காப்பியத்தின் சொல்லதிகாரப் பகுதிக்கு இவருடைய உரைதான் சிறந்ததென்று அறிஞர் பலருங் கூறுவர். இவர் இளம்பூரணர் உரையை இடையிடையே மறுத்தலால் இளம்பூரணர் இவர்க்கு முன்னிருந்தவர் என்பது தேற்றம்.



## சோமசுந்தர பாரதியார் எஸ்.

இவர் தமிழாராய்ச்சியில் கரை கண்ட புலவர்; அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பல ஆண்டுகள் தமிழ்ப் பேராசியராய்ப் பணியாற்றியவர். இவர் எம்.ஏ., பி.எல்., பட்டம்

பெற்றவர். இவர் தற்போது ஓய்வு பெற்றுள்ளார்; பல நூல்களை இயற்றியுள்ளார். பல சமஸ்தானப் புலவர்களாலும் இவர் பாராட்டப்பெற்றார்.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. தொல்காப்பிய உரை.
2. சேரவேந்தர் தாய வழக்கு.
3. திருவள்ளுவர்.
4. தயரதன் குறையும்-கைகேயியின் நிறைவும்.
5. மாரிவாயில்.



## சோமசுந்தர நாயக்கர்

இவர் வடமொழி தென்மொழி ஆகிய இரு மொழிகளிலும் புலமையுடையவர். இவர் சென்னையில் - சூளை யென்னும் இடத்தில் தோன்றியவர்; சைவ சமய ஆராய்ச்சிகளில் தலைசிறந்தவர்; சொற்போர் நிகழ்த்துவதில் வல்லவர்; இவர் பற்பல சமய நூல்களையும் இயற்றியுள்ளார்.



## ஞானப்பிரகாசர்

**நாடு :**—ஈழ நாடு.

**ஊர் :**—யாழ்பாணத்துக்கு அண்மையில் உள்ள திருநெல்வேலி.

**குலம் :**—வேளாளர்.

**காலம் :**—இற்றைக்கு 320 ஆண்டுகட்கு முன்.

இவர் சீவகாருண்ணியமும் தருமசிந்தையு முடையவர்; இவர் பறங்கியர் கட்டளைக்கு அஞ்சி, இந்தியாவிற்குச் சென்று சின்னாள் சிதம்பரத்தில் தங்கி, சிவகாம சுந்தரியைத் தொழுது, திருவருள்பெற்றுக் கௌட தேசஞ் சென்றனர். அங்கு ஓரிடத்தில் பிராமண சந்நியாசி ஒருவர் தருக்கம், வியாகரணம் முதலிய நூல்களைப் பிராமணப் பிள்ளைகளுக்குக் கற்பித்துவரக்கண்டார். இவர் நாடோறும் அங்குச் சென்று, தூரத்தில் நின்று அவைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார். சந்நியாசி அப் பிள்ளைகளைச் சோதித்தபோது, அவர்கள் தகுந்த விடையளிக்கவில்லையாம். தூரத்தே நின்றுகொண்டிருப்பவன், தகுந்த விடையளிக்கக்கூடும் என்று கருதி, இவரை அழைத்துச் சோதிக்க, இவர் அவற்றிற்கெல்லாம் தகுந்த விடையளித்தனர்; சந்நியாசி அகமகிழ்ந்து, "நீயே பிராமணன் என்று புகழ்ந்து இவருக்குத் தருக்கம், வியாகரணம் முதலியவற்றைக் கற்பித்து, நீ தமிழ் நாட்டிற்குச் சென்று அங்குள்ளார்க்குப் பயன்படுவன புரிவாயாக" என்று கட்டளையிட்டனர். இவர் அக் கட்டளையைத் தலைமேற் கொண்டு திருவண்ணாமலையாதீனத்தை அடைந்து, சந்நியாசம் பெற்று, ஆகமங்களையும், சைவ சித்தாந்த நூல்களையும் கற்றனர். இவர் வடமொழியிற் சித்தாந்த சிகாமணி, பிரமாண தீபிகை, சிவயோகசாரம் என்னும் நூல்களுக்கு வியாக்கியானம் இயற்றினர் என்ப.

## ஞானப்பிரகாச பண்டாரம் (திருவாரூர்)

இவர் கமலை ஞானப்பிரகாசர், சத்திய ஞானப் பண்டாரம் என்றும் அழைக்கப் பெறுவர்; சைவர் இவரை நன்கு அறிவர். இவர் திருவாரூரில் அபிஷிக்த ஆசாரிய பரம்பரையிற் பிறந்தவர்; சிவஞானச் செல்வம் நிரம்பப் பெற்றவர்; பல அற்புதங்களைப் புரிந்தும், சைவ நூல்களும், புராணங்களும் பலவியற்றியும் பதினாறும் நூற்றாண்டில் மிக்க புகழ் பெற்றும் விளங்கினார்.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. சிவானந்த போதம்.
2. புட்ப விதி.
3. அத்துவாக் கட்டளை.
4. மழுவாடிப் புராணம்.



## தாண்டவராய முதலியார்

**பிறப்பிடம் :**—செங்கற்பட்டு மாவட்டம்.

இவர் இளமையிலேயே தமிழில் ஆர்வம் உடையவர்; பல நூல்களைப் படித்தவர்; சென்னை அரசியலார் கல்லூரியில் சில்லாண்டுகள் தமிழ்ப் பேராசிரியராய்ப் பணியாற்றியவர். இவர் 1843-ம் ஆண்டில் நீதிபதியானார். இவர் 1850-ம் ஆண்டில் மறைந்தார்.

இவர் இயற்றிய நூல்களாவன:

1. கதாமஞ்சரி.
2. திருத்தணிகை மாலை.
3. திருப்பேரூர்ப்பதிகம்.
4. இலக்கண வினாவிடை. இவர் திவாகரம், சூடாமணி, நிகண்டு என்னும் நூல்களைத் திருத்தி அச்சிட்டார்.



## தாமற்பல் கண்ணனார்

இவர் பார்ப்பனர்; நுண்மாண் நுழை புலமிக்கவர்; கல்வியில் கடலை ஒத்தவர்; புலனடக்கமுடையவர்; பிறர் நலம் பேணும் தகைமையினர்; பாராளும் வேந்தனாயினும் குற்றங் கண்டவிடத்து, அஞ்சாது எடுத்துக் கூறும் இயல்பினர்; இவருடைய இயற்பெயர் கண்ணனார். இவரைத் தாமர்ப்பல் கண்ணனார் என்றுங் கூறுவர். அதனால் இவரது ஊர் 'தாமல்' என்று கொள்ளலாம். இவர் சோழன் மாவளத்தானைப் பாடியுள்ளார்.



## தாமோதரம் பிள்ளை

இவர் யாழ்ப்பாணத்துப் புத்தூரில் கி. பி. 1832–ல் தோன்றினார்.

**பெற்றோர்:**—வயிரவநாதப் பிள்ளை.—பெருந்தேவி அம்மையார்.

இவர் ஆங்கிலமும் தமிழும் கற்றவர். இவர் பி. ஏ., பட்டம் பெற்றவர்; 1871-ல் பி. எல்., தேறினர்; 1884-ம் ஆண்டில் குடந்தையில் வழக்கறிஞராய் அமர்ந்தார். இவர் பரிசோதித்து அச்சிட்ட இலக்கண நூல்கள்: 1. தொல்காப்பிய நச்சினார்க்கினியம்; 2. தொல்காப்பியச் சேனவரையம்; 3. வீர சோழியம்; 4. இறையனாரகப்பொருளுரை; 5. இலக்கண விளக்கவுரை என்பனவாம்; 6. கலித்தொகையையும் இவர் பதிப்பித்தார்.

**இவர் இயற்றிய நூல்கள்:**

1. கட்டளைக் கலித்துறை யென்னும் ஓர் இலக்கண நூல்.
2. வசன சூளாமணி உரை நடை நூல்.
3. சைவ மகத்துவ போதம்—சைவ சமய நூல் முதலியன.

சென்னை அரசியலார் இவர்க்கு "இராவ் பகதூர்" என்னும் பட்டத்தை 1895-ல் வழங்கினர்; ஐயப்பாடு நேர்ந்தவிடத்து பல்கலைக் கழகத்தார் அவரிடம் கேட்டுத் தெளிந்தனர்.

## தாயுமானவர்

**ஊர்:**—சோழ நாட்டிலுள்ள திருமறைக்காடு. [வேதாரண்யம்.]
**தந்தை:**—கேடிலியப்பப் பிள்ளை.
**மரபு:**—வேளாளர்.
**சமயம்:**—சைவம்.
**காலம்:**—கி. பி. 18-ம் நூற்றாண்டு.
**ஆசிரியர்:**—மௌன குரு.

**வரலாறு**

திருச்சிராப்பள்ளியில் உறையும் சிவ பெருமானின் பெயர் தாயுமானவர் என்பது; இவ் விறைவன் அருளால் பிறந்தமையின் இப் புலவர் இப்பெயர் பெற்றார் என்ப. இவர் விசயரகுநாத சொக்கலிங்க நாயக்கர் என்ற அரசரிடம் வேலை பார்த்து வந்தார்; மனம் அதில் நாடவில்லை. அப்பணியினின்றும் விலகினார்; மட்டுவார் குழலி என்னும் மங்கையை மணந்தார்; இல்லறத்தை முட்டின்றி நடாத்தினார்; பிறகு மனைவி இயற்கை எய்திய பின், இவர் துறவற வாழ்க்கையை மேற்கொண்டார்.



## திருக்குற்றாலம் இராசப்பக் கவிராயர்

**நாடு:**—பாண்டி நாடு.
**ஊர்:**—தென்காசிக்கும் திருக்குற்றாலத்துக்கும் இடையிலுள்ள மேலகரம்.
**காலம்:**—220 ஆண்டுகட்டு முன்.
**மரபு:**—வேளாளர்.
**மதம்:**—சைவம்.

இவர் மேலகரம் திரிகூட ராசப்பக் கவி ராயர் என வழங்கப் பெறுவர். இவர் தமிழ்ப் புலமையும், வாக்கினிமையும் நிரம்பப் படைத்தவர். அக்காலத்துப் பாண்டி நாடாண்ட நாய்க்க வரசராலும் அறிந்து பெரி தும் மதிக்கப் பெற்ருர். இவருடைய பெரும் புலமையையும், அருங் கவித் திறத்தையும் அறிந்து, அக் குற்ருல வளமும், மலை வாழ் நரின் ஒழுக்கங்களும் அங்கு கோயில்கொண் டுள்ள சிவபெருமானது மகிமைகளும் விளங்கக் குறவஞ்சிப் பிரபந்தமொன்று பாடும்படி இப் புலவரைக் கேட்க, அவர்கள் விரும்பிய வண் ணம், இவர் "குற்ருலக் குறவஞ்சி" என்ற நாடகநூலை இயற்றி அரங்கேற்றினுர். இதைக் கண்டு உவகை கொண்ட நாயக்கர் இவருக்கு வேண்டிய பூமிகளை அக் குற்ருலப் பக்கத்தே கி. பி. 1718-ல் அளித்தனர். அந்நிலம் "குறவஞ்சி மேடு" என்று இக் காலத்தும் அழைக்கப்படுகிறது.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. திருக்குற்ருலத் தலபுராணம்.
2. குற்ருல மாலை.
3. குற்ருலச் சிலேடை வெண்பா.
4. குற்ருல யமகவந்தாதி.
5. குற்ருல உலா — குற்ருல ஊடல்.
6. குற்ருலக் குறவஞ்சி.
7. குற்ருலக் கோவை.

## திருத்தக்கதேவர்

இவர் சீவக சிந்தாமணியை எழுதியவர்; மகா புராணக் கதையை ஆதாரமாகக் கொண்டு தமிழில் சீவக சிந்தாமணியைச் செய்தனர் என்ப. இந் நூல் செய்யப்பட்ட காலம் கி. பி. 10-ம் நூற்றாண்டின் துவக்கம் என்பர். இந் நூல் சங்க காலத்திற்குப் பின்னர் இயற்றப் பட்டது என்பர் ஒரு சாரார். 'நரி விருத்தம்' என்னும் ஒரு சிறிய பாட்டையும் பாடியிருக்கின்றனர்.



## திருத்தணிகை விசாகப் பெருமாளையர்

இவர் யாப்பணி யிலக்கண நூலின் ஆசிரியர்; இவருடன் பிறந்தவர் சரவணப் பெருமாளையர். இவருடைய தந்தையார் திருவாவடுதுறை கச்சியப்ப முனிவரின் மாணவர். விசாகப் பெருமாளையரும் சரவணப் பெருமாளையரும் தமிழ் மொழிக்குச் செய்துள்ள நன்மை அளப்பரிது. இவர்கள் திருக்குறள், நைடதம், பிரபுலிங்கலீலை முதலிய நூல்களுக்கு உரை எழுதி வெளியிட்டனர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. இலக்கணச் சுருக்க வினாவிடை
2. பால போத இலக்கணம்.

## திரு நாராயண ஐயங்கார்

இவர் வடமொழியிலும் தென்மொழியிலும் புலமைமிக்கவர்; மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் சிறந்து விளங்கிய தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். 'செந்தமிழ்' என்னும் பத்திரிகைக்கு ஆசிரியர். இவர் 'நன்னூல் குறிப்பு' என்னும் நூலை வெளியிட்டுள்ளார். இவர் தருக்க நூலிலும் இலக்கணத்திலும் ஆராய்ச்சி மிக்கவர். இவர் அரசிளங் குமரரிடம் கிள்ளாத்துப் பரிசு பெற்றவரில் ஒருவர் என்ப.



## திருமங்கையாழ்வார்

**பிறப்பிடம்:**—திருவாலி நகரம்.

**தந்தை:**—நீலி.

**தொழில்:**—படைத் தலைவன்.

**காலம்:**—9-ம் நூற்றாண்டின் பிற்பகுதி.

**இவர் இயற்றிய நூல்கள்:**

1. சிறிய திருமடல்.
2. பெரிய திருமடல்.
3. திருக்குறுந் தாண்டகம்.
4. திருநெடுந் தாண்டகம்.
5. திருவெழு கூற்றிருக்கை.
6. பெரிய திருமொழி.

## திருமாளிகைத் தேவர்

இவர் போக முனிவரின் சீடர்; திரு விசைப்பா ஆசிரியர்களிலொருவர்; தேவர் சிவ பூசையால் சிறப்புப் பெற்றவர்; இவருடைய கோயில் திருவாவடுதுறை ஆதீன மடத்துள் இருக்கிறது. இவர் பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென்ப.



## திருமூலர்

திருமந்திரம் என்னும் நூலின் ஆசிரியர். இவருடைய காலம் ஐந்தாம் நூற்றாண்டு. இவர் ஒரு சித்தர். திருமந்திரம் – பன்னிரண்டு திருமுறைகளுள் பத்தாம் திருமுறையைச் சேர்ந்தது.



## திருவள்ளுவர்

**இடம்** :—மயிலாப்பூர்.

**மரபு** :—வள்ளுவர் வகுப்பைச் சார்ந்தவர் எனக் கூறுவர்.

**தாய்** :—ஆதி.

**தந்தை** :—பகவன் என்று கூறுவர்.

**சமயம்** :—இன்னதென்று வரையறுக்க இயலவில்லை.

**காலம்** :—2000 ஆண்டுகட்டு முன்.

இவர் நெசவுத் தொழிலைச் செய்து வாழ்க்கையை நடத்தினர் என்றுங் கூறுவர்; இவருடைய பிறப்பைப் பற்றியும் வாழ்க்கையைப் பற்றியும் பலப்பல கதைகள் வழங்குகின்றன.

இவர் உலகம்போற்றும் திருக்குறளை இயற்றினார்; இந்நூல் யாவராலும் விரும்பிக் கற்கப்படுகின்றது. மணிமேகலையாசிரியர் இவரைப் "பொய்யில் புலவன்" என்று பாராட்டினார். தெய்வப்புலவர் என்னும் சிறப்புப் பெயரால் இவர் பெருமையை அறியலாம். "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ் நாடு" என்று தொடங்கும் பாரதியாருடைய பாடலால், இவருடைய பெருமையை அறியலாம். இவருக்கு எத்தனையோ பெயர்கள் வழங்குகின்றன.

1. முதற்பாவலர்.
2. செந்நாப்போதார்.
3. பெருநாவலர்.
4. தேவர்.

வள்ளுவர் என்ற பெயர், இவருக்குக் குலம்பற்றி வந்ததென்று ஒரு சாரார் கூறுவர்; மற்றொரு சாரார் தொழில்பற்றி வந்ததென்பர்;

"திருநாள் படைநாள் கடிநாள் என்றிப் பெருநாட் கல்லது
பிறநாட் கறையாச் செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்"

என்ற பெருங் கதை அடிகளால் 'வள்ளுவர்' என்பார் தமிழ் நாட்டுப் பழங்குடியுள் ஒரு பகுதியினர் என்பது தேற்றம். அதாவது அக் குடியினர் அரசரது பட்டத்து யானையின் மேல் முரசேற்றித் தாமும் உடனிருந்து முரசறைந்து திருநாள் படைநாள் முதலிய செய்திகளை மக்களுக்கு அறிவிப்பர். எனவே வள்ளுவர் அக் குடியைச் சார்ந்தவர் என்பது வெளிப்படை.

## திருவாதவூரர்

**ஊர்:**—பாண்டி மண்டலத்திலுள்ள திருவாதவூர்.
**குலம்:**—வேதியர்.
**சமயம்:**—சைவம்.
**காலம்:**—அரிமர்த்தன பாண்டியன் காலமே.
**தந்தை:**—சம்புபாதாசிரிதர்.
**தாயார்:**—சிவஞானவதியார்.

இவர் இளமையிலேயே தருக்கம், மீமாஞ்சை, தருமசாத்திரம், புராணம் முதலியவைகளைக் கற்ருர்; பௌத்தரை வாதில் வென்று சைவராய்ச் செய்தனர்; அவர் வினவிய வினக்களுக்கெல்லாம் ஊமைப் பெண்ணைப் பேச வைத்து விடைகளுஞ் சொல்லுவித்தவர். இவர் சிவபெருமான் மீது திருவாசகமும், அகப்பொருட் கோவையும் பாடியவர்.



## திரு. வி. கலியாண சுந்தரனுர்

**ஊர்:**—திருவாரூர்.
**பெற்ருேர்:**-விருத்தாசல முதலியார்-சின்னம்மையார்.

இவர் ஆங்கிலப் பயிற்சியும், தமிழ்ப் பயிற்சியும் ஒருங்கே அமையப் பெற்றவர். இனிய தமிழ் நடை எழுதுவதிலும், சொற்பொழிவு ஆற்றுவதிலும் தலை சிறந்தவர். இவர் மொழிப்பற்று, நாட்டுப்பற்று, சமயப் பற்று முதலிய பற்றுகளில் முதிர்ந்தவர்; தொழிலாளர் இயக்கத்திலும், காங்கிரசு இயக்கத்திலும் ஈடுபட்டுத் தொண்டாற்றியவர்;

ஆராய்ச்சித் துறையில் வல்லுநர்; சிறந்த மேடைப் பேச்சாளர்; தேசபக்தன், நவயுவன், நவசக்தி முதலிய பத்திரிகைகளுக்கு ஆசிரியராகவும் விளங்கியவர். சமரச நோக்கு உடையவர். இவர் அண்மையில் நம்மை விட்டுப் பிரிந்தார்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. முருகன் அல்லது அழகு.
2. தமிழ்த் தென்றல்.
3. சுயசரிதை — திரு. வி. க. வாழ்க்கை வரலாறு.
4. பெரிய புராண ஆராய்ச்சி.
5. திருக்குறள் ஆராய்ச்சி.



## தேசிக விநாயகம் பிள்ளை

**இடம்:**—தேரூர்.
**மரபு:**—வேளாளர்.
**சமயம்:**—சைவம்.
**தாய்:**—ஆதிலக்குமி.
**தந்தை:**—சிவதாணுப் பிள்ளை.
**காலம்:**—1876-1954.

இவர் அருள் உள்ளம் படைத்தவர்; பல இடங்களில் தமிழ்ப் பேராசிரியராய் விளங்கியவர்; "கொளல் தீது; ஈதலே சிறந்தது" என்னும் பொய்யா மொழிக்கு இலக்கியமாகத் திகழ்ந்தார். இவர் கல்வெட்டு ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார். ஓய்வு பெற்றுப் புத்தேரியில் வாழ்ந்து வந்தார்; பின்னர் 1954-ல் மறைந்தார்.

## தேரையர்

இவர் தமிழிலே அகத்தியரிடம் வைத்தியங் கற்ற மாணவர்களுள் ஒருவர்; முதன்மை பெற்றவரென்றே கூறலாம்; வைத்தியத்தில் தலைசிறந்தவர்; சாரீரம் முதலிய துறைகளில் வல்லவர்; பதார்த்த குணமெல்லாம் கடைபோக ஆராய்ந்தவர். 'தேரன்' என்பது அவரது இயற்பெயராய் இருத்தல் வேண்டும். தேரையர் என்கிற பேர் மாத்திரம் 'மண்டுக மஹரிஷி' என்கிற பேரிலிருந்து தமிழாக்கப் பட்டதும், தேரை எடுத்த காரணத்தால் இப் பெயர் வந்ததென்றும் கூறுவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. பதார்த்தகுண சிந்தாமணி.
2. நீர்க்குறி நெய்க்குறி தயில வருக்கச் சுருக்கம்.
3. கஷாயம் நூறு.
4. சிகிச்சை ஆயிரம் முதலியன.



## தொல்காப்பியர்

இவர் ஜமதக்கினி முனிவருடைய புதல்வர். இவர் இயற் பெயர் 'திரணதூமாக்கினி', இவர் அகத்தியரால் ஆரிய நாட்டிலிருந்து அழைத்து வரப்பட்டார் என்பது கர்ண பரம்பரைச்

செய்தியாகும். இவர் பழமையான நூல் செய்த தொரு குடியில் வந்தவர்; அக் குடிப் பட்டமாகத் தொல்காப்பியர் என்ற பெயரைப் பெற்றார் என்றுங் கூறுவர். "ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்" எனப்படுதலால், அவர் வடமொழி இலக்கணமாகிய பாணினீயம் தோன்று முன் இருந்திருக்க வேண்டும் என்று கூறுப. தொல்காப்பியர் தம் நூலினுள் நால்வகைச் சாதியினர், ஐயர் கரணம் யாத்தது பற்றியும் தெரிவித்திருப்பதாலும், காந்தர்வ மணத்தைப் பற்றிச் சில செய்திகளைக் கூறியிருப்பதாலும் ஆரிய சம்பந்த முடையவரென ஒருவாறு ஊகிக்கலாம். இவர் காலம் முதற்சங்கத் திறுதியும், இடைச் சங்கத்து முதலுமாம்; தமிழ்ப் பேரிலக்கணமாகிய தொல்காப்பியத்தை இயற்றி வான்புகழ் கொண்டார். அகத்தியர் மாணவருள் இவர் சிறந்தவர். இந் நூற்குப் பாயிரம் செய்தவர் பனம்பாரனார் என்னும் புலவர்.



## தொல்காப்பியத் தேவர்

இவர் 'திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம்' பாடியவர். திரிப்பாதிரிப்புலியூர்க் கோயில் தலைவரின் வேண்டுகோளுக்கிணங்கி, இவர் இந்நூலைப் பாடினார் என்ப. இரட்டையரும் இக் கலம்பகப் பெருமையை பின் வருமாறு எடுத்துக் காட்டியுள்ளனர்." தொல்காப்பியத் தேவர் சொன்ன தமிழ்ப் பாடலன்றி-நல்காத் திருச் செவிக்கு நாமுரைப்ப தேறுமோ?".

## தொழுவூர் வேலாயுதம் முதலியார்

இவர் சிறந்த தமிழ்ப் புலவர்; சென்னை மாகாணக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பல்லாண்டு பணியாற்றியவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. திருவெண்காட்டடிகள் வரலாறு.
2. வேளாண் மரபியல்.
3. சங்கர விசயம்.



## தோலாமொழித் தேவர்

இவர் சைனர்; சிறந்த புலவர்; பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். 'சூளாமணி' யென்னும் நூலை இயற்றியுள்ளார். இதைச் சூடாமணியென்றுங் கூறுவர். "தோலாமொழி" என்பது இவருடைய பட்டப்பெயராம். ஸ்ரீவர்த்த தேவர் என்பது அவருடைய இயற் பெயர் என்பர்.



## நக்கீரர்

இவர் மதுரை மூதூரில் வாழ்ந்தவர்; இவருடைய தந்தை மதுரைக் கணக்காயனார்; சங்க நூல்களில் 'மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர்' என்றே காணப்படுகின்றது. சிலர், மதுரை நக்கீரர் வேறு; கணக்காயனார் மகனார் நக்கீரர் வேறு என்று கருதுகின்றனர்.

மதுரை நக்கிரர் என்னும் மற்ருெரு பெயர் சங்கச் செய்யுள் செய்த புலவர் வரிசையில் உண்டு. இரு பெயரும் ஒருவருக்கமைந்தனவே என்பது நற்றிணைப் பதிப்பாளர் கூறுகின்ருர். சில தகுந்த காரணங்களால் மதுரை நக்கிரனுரும், மதுரைக் கணக்காயனுர் மகனுரும் இரு வேறு புலவரே யென்பது உ. வே. சாமிநாதய்யருடைய கொள்கை. அக்காலத்தில் இருந்த தமிழ்ச் சங்கப் புலவர்களுள் இவர் தலைமை பூண்டவர். இவருடைய இயற்பெயர் 'கீரன்' என்று கூறுவர்; இறையனுர் அகப்பொருள் நூலுக்கு நல்லுரை கண்டவர் இவரே. இதனுல் அவருடைய புலமை நன்கு புலப்படும். இவர் தமக்குண்டாகிய குட்டரோகத்தைக் "கயிலைபாதி — காளத்திபாதியந்தாதி" பாடி ஒழித்துக்கொண்டார் என்ப.

**இவர் இயற்றிய பாடல்களாவன:**

1. பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை. நெடுநல்வாடை 2.—புறம் 2.—அகம் 17.—நற்றிணையில் 7.—குறுந்தொகையில் 8.



## நச்சினுர்க்கினியர்

**இடம்:**—மதுரை.

**காலம்:**—1250 ஆண்டுகட்டு முன்.

**குலம்:**—பார்ப்பனர்.

**சமயம்:**—சைவம்.

**சமகாலத்தவர்:**—பரிமேலழகர்.

இவர் இளமையிலேயே இலக்கண இலக்கியங்களை இளம்பூரணரிடம் ஐயந்திரிபறக் கற்றுத் தேர்ந்தார்; சிவபக்தியில் ஆழ்ந்தவர்; தமிழாராய்ச்சியில் தமக்கொப்பாரும் மிக்காருமில்லாதவர்; பல நூல்களுக்கு உரையியற்றுவதையே இவர் தம் தொழிலாகக் கொண்டவர். இவர் தம் உரையில், மதுரையாசிரியரைப் பேராசிரியரென்றும், இளம்பூரணரை உரையாசிரியரென்றும் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். பத்துப் பாட்டு, கலித்தொகை, குறுந்தொகையிற் பேராசிரியர் எழுதாது விட்ட 20 பாட்டிற்கும், சீவக சிந்தாமணிக்கும் இவர் உரை எழுதியுள்ளார். இவர் தம் வாணாள் முழுதும் தமிழ் மொழிக்குப் பயன்படுத்தியவர். இவர் முத்தமிழிலும் வித்தகரென்பதற்கு, இவர் எழுதிய உரையே போதிய சான்றாம். இவர் கலித்தொகைக்குச் செய்த உரை மிகவும் அற்புதமானது. "உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க் கினியர்" என்று பாராட்டப் படுவதால் இவரது புலமை தெற்றெனவிளங்கும்.

*

## நத்தத்தனார்

இவர் கடைச்சங்க காலத்தில் வாழ்ந்தவர்; இவர் ஓய்மா நாட்டு நல்லியக் கோடன்மீது சிறுபாணாற்றுப்படை பாடியுள்ளார். தன் யாழ் வன்மை காட்டிப் பரிசுபெற விரும்பிய பாணனை, நல்லியன் கோடன் மாட்டுச் செலவிடுத்தமையின் ஆற்றுப் படையாயிற்று.

## நம்பியாண்டார் நம்பி

**இவர் பிறப்பிடம் :—** *திருநாரையூர்.*

**மதம் :—** *ஆதி சைவம்.*

**காலம் :—** *10ம் நூற்றாண்டு. 'தமிழ் வியாசர்' என்றும் அழைக்கப்படுபவர்.*

இவர் இராசராசன் வேண்டுகோளின்படி பதினொரு திருமுறைகளை வகுத்துக் கொடுத்தவர்.



## நம்மாழ்வார்

**நாடு :—** *பாண்டி நாடு.*

**ஊர் :—** *திருநெல்வேலி வட்டத்திலுள்ள பொருநை ஆற்றங்கரையிலுள்ள திருக்குருகூர்.*

**மரபு :—** *வேளாளர்.*

**பெற்றோர் :—** *காரியார்-உடைய நங்கை.*

இவர்க்குச் சடகோபன், பராங்குசன், குருகைக் காவலன், காரிமாறன் முதலிய பெயர்களுமுண்டு. இவரைப் பலர் 'அவயவி' என்பர்; வைணவ மதத்திற்குப் பேரிலக்கியமாய் விளங்கியவர்; நாதமுனிகள் காலத்துக்கு முன்னிருந்தவர் என்பதில் ஐயமில்லை; சிலர் ஐந்தாம் நூற்றுண்டு என்றுங் கூறுவர். இவர் பிறந்த பொழுது அழுதல், பாலுண்ணல், முதலியன இன்றி உலக வழக்கத்திற்கு மாறுபட்டவராகி உடல் வாடாமலிருந்தார்.

இந்த அதிசயத்தைக் கண்டு, பெற்றோர் அத் தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பெயரையே இட்டனர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. திருவிருத்தம்.
2. திருவாசிரியம்.
3. பெரிய திருவந்தாதி.
4. திருவாய் மொழி.



## நமச்சிவாயப் புலவர்

**பிறப்பிடம்:**—அச்சுவேலி.

**குலம்:**—வைசியர்.

**காலம்:**—1749.

**தந்தை:**—கணபதிப் பிள்ளைச் செட்டியார்.

இவர் இலக்கண இலக்கியங்களிற் பயிற்சி யுடையவர். இவர் பாடிய தனிப் பாடல்கள் பல.



## நமச்சிவாய முதலியார் கா.

இவர் தமிழ் மொழிக்கும், தமிழ்ப் புலவர் களுக்கும் செய்துள்ள தொண்டுகள் அளப்பில. இவரைப் 'புலவர் வள்ளல்' என்றுங் கூறுவர். இவர் 1876-ம் ஆண்டில் வட ஆற்காடு மாவட்டத்தைச் சார்ந்த காவேரிப்பாக்கத்தில் தோன்றியவர். இவர் ஆரம்பப் பள்ளியாசிரிய ராக இருந்து படிப்படியாக உயர்நிலையை

அடைந்தவர். சென்னையில் பற்பல உயர்நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராய்ப் பல்லாண்டு பணியாற்றியவர். இவர் "நல்லாசிரியன்" என்னும் பத்திரிகைக்கு ஆசிரியராக இருந்தவர். இவர் இல்லத்துக்கு 'கடலகம்' என்று பெயர். இவர் 1936-ல் மறைந்தார்.



## நல்லாதனார்

இவர் 'திரிகடுகம்' என்னும் நூலின் ஆசிரியர். இவர் வைணவர். இவர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள 'திருத்து' என்ற ஊரில் பிறந்தவர்; கடைச் சங்க காலத்தின் இறுதியில் வாழ்ந்தவர். இந்நூல் அறியாமையைப் போக்கி மக்களுக்கு நன்மையை அளிக்கிறது.



## நல்லந்துவனார்

இவர் கலித்தொகையில் நெய்தற்கலி என்னும் பகுதியின் ஆசிரியர்; கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவர்; சமயத்தாற் சைவரென்பது, கடவுள் வாழ்த்துப் பாடல் முதலியவற்றாற் புலப்படும்.



## நல்லாப் பிள்ளை

**நாடு** :—தொண்டை நாடு.
**ஊர்** :—மகாதலம்பேட்டை.
**மரபு** :—கருணீகர்.
**காலம்** :—170 ஆண்டுகட்கு முன்.

இவர் வடமொழி, தென்மொழி ஆகிய இரு மொழிகளிலும் வல்லவர். இவர் வில்லி பாரதத்தை வடமொழிப் பாரதத்தைப்போல விரிக்க வெண்ணி, **14,728** விருத்தங்களாற் பாடியவர். நல்லாப் பிள்ளை செய்த பாரதம், 'நல்லாப் பிள்ளை பாரத'மென வழங்குகிறது. தமிழிலே பாரதம் முதலிற் செய்தவர் பெருந் தேவனார்; பின்னர் செய்தவர் வில்லிபுத்தூரார்; இறுதியிற் செய்தவர் இவரே.



## நரிவெரூஉத்தலையார்

இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர். இவர் தம் உடம்பிலுள்ளதாகிய வேறுபாடு காரணமாக இப் பெயர் பெற்றார். இவர் சேரலிரும்பொறையைக் கண்ட மாத்திரத்தே, அவ்வேறுபாடு நீங்கி நல்லுடம்பு பெற்றார். இவருடைய பாடல்கள் புறநானூறு, குறுந் தொகை, திருவள்ளுவ மாலை முதலிய நூல் களில் காணப்படுகின்றன.



## நன்னாகனார்

இவர் பரிபாடலில் இரண்டாம் பாட்டுக்கு இசை வகுத்துள்ளார்; ஆறுகளில் தரும ஓடம் உண்டென்று இவர் பாடலால் நன்கு விளங்குகிறது. இவர் கரும்பனூர் கிழானைப் பாடியுள்ளார்.

## நாகூர் முத்துப் புலவர்

**பிறப்பிடம்:**—*தஞ்சை மாவட்டத்தின் ஓர் பிரிவு. பன்றி நாடென்ற நாகூர்.*

இவர் இளமையிலேயே கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினார். இவருடைய பாடல்கள் அகப் பொருட்டுறை அமைந்தன. இவர் பல தனிப் பாடல்களைப் பாடியுள்ளார். இதனால் இவர் பண்டைய அகப்பொருட் சுவை நிரம்பிய பாடல்களை நன்கு கற்றுத் தேறிய கவிராயர் என்பதில் ஐயமில்லை.



## நாராயண பாரதி

**நாடு:**—*தொண்டை மண்டலம்.*

**ஊர்:**—*வெண்மணி.*

**குலம்:**—*வைணவப் பிராமணர்.*

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. *திருவேங்கட சதகம்.*
2. *கோவிந்த சதகம்.*



## நால்வர்

சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய இந் நால்வரும் சைவ சமயாச்சாரியரெனப்படுவர். இவராற் செய்யப்பட்டவை தேவார திருவாசகங்கள். இப்பாடல் சொற்சுவை, பொருட்சுவை, பத்திரசம் முதலியவற்றுற் பொலிந்துள்ளன. தென்னாட்டிலே

சமணரால் மங்கிய சைவத்தை மீளவும் விளக்கினவர்கள் இந்நால்வரே என்பது தெள்ளிதிற் புலப்படும்.



## நாற்கவி ராசநம்பி

**நாடு :**—தொண்டை மண்டலம்.
**ஊர் :**—புளியங்குடி.
**தந்தை :**—உய்யவந்தார்.
**காலம் :**—12-ம் நூற்றாண்டின் பிற்பகுதி.
**சமயம் :**—ஆருகதம்.

"நம்பியகப் பொருள்" என்னும் நூலை இயற்றியுள்ளார். [இலக்கண நூல்]. இவர் இயற்பெயர் நம்பி. இவர் நாற்கவியும் பாடும் வன்மை பெற்றமையால், இப்பெயர் பெற்றார்; நம்பி நயினார் எனவுங் கூறுவர்.



## நிரம்ப அழகிய தேசிகர்

இவர் வேதாரணியத்தில், சைவ வேளாளர் குலத்தில் பிறந்தார்; சேதுபுராணம் என்னும் நூலை இயற்றியவர். சிவஞான சித்தியார் சுபக்கம், திருவருள் பயன் முதலிய நூல்களுக்கு உரை எழுதியுள்ளார்.



## நீலாம்பிகையம்மையார்

இவர் மறைமலையடிகளாரின் புதல்வியாராவர்; தனித் தமிழ்ப் புலமை வாய்ந்தவர்.

இவர் இயற்றிய நூல்களாவன:

1. முப்பெண்மணிகள் வரலாறு.
2. வடமொழி தமிழ் அகர வரிசை.
3. தனித் தமிழ்க் கட்டுரை.

இவருடைய உரைநடை நூல், கட்டுரை எழுது வோர்க்குச் சிறந்த வழிகாட்டியாக அமைந்துள்ளது.



## நெடும்பல்லியத்தனார்

இவர் கடைச் சங்க காலத்தில் வாழ்ந்தவர்; இது பொதுப் பெயர். புறம். 64-ம் பாடலால் அறியலாம். இவர் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியுள்ளார். இப் பாவின் முதலடியில் 'நல் யாழா குளி பதலை யொடு சுருக்கிச்' என்பதில் யாழ், ஆகுளி பதலை யெனப் பல்லியங்களைத் தொகுத்துக் கூறியுள்ளமையால் இவர் நெடும்பல்லியத்தனா ராயினரெனக் கருதுவோரும் உளர்.



## நெட்டிமையார்

இவர் நெடுந் தொலைவிலுள்ள பொருளைக் கூர்ந்து நோக்கி யறியும் கண்ணை யுடையவ ராதலால் இப் பெயர் பெற்றார் என்ப. இவர் பஃறுளியாறு கடல் கோட்படு முன்பு இருந் தவர் என்பர். இவரது கண்ணிமை நீண்ட பண்புடையது. அதனால் இவர்க்கு இப் பெயர் உண்டாயிற்று என்பர் ஒரு சாரார். இவர் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெரு வழுதியைப் பாடியுள்ளார்.

## நெற்குன்ற வாணர்

ஊர் :—தொண்டை மண்டலத்திலுள்ள நெற்குன்றம்.

குலம் :—வேளாளர்.

சமயம் :—சைவம்.

இவர் சிறந்த வள்ளலாகத் திகழ்ந்தது மன்றிச் செவ்விய பாவலராகவும் விளங்கினர். திருப்புகலூர் அந்தாதியைப் பாடியவர். இவர் தம்முடைய வீட்டில் இல்லாதபோது ஆங்குச் சென்றிருந்த காளமேகப் புலவருக்கு அவரது தாதி ஒருத்தி பரிசளித்தாளென்றும், அதனைக் கேட்டு உளமகிழ்ந்து தாமும் அப்புலவர்க்கு ஓர் அடிமை யென்று இவர் ஒரு செய்யுள் செய்ததாகவும் கூறப்படுகின்றது.



## நேமி நாதர்

இவர் ஒரு சைன முனிவர்; இவர் தொண்டை நாட்டிலுள்ள 'களந்தை' என்னும் ஊரினர். இவர் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் வாழ்ந்தவர்.

இவர் இயற்றிய நூல்களாவன :

1. நேமிநாதம் என்னும் இலக்கண நூல்.
2. வச்சணந்தி வெண்பாப் பாட்டியல்.



## நையாண்டிப் புலவர்

இவர் தொண்டை நாட்டில் நாவலர் குழாத்தில் ஒருவராகத் திகழ்ந்தவர். இவர்

இராமச்சந்திரக் கவிராயர் காலத்தில் இருந்தவர். இவர் பள்ளிகொண்டான் என்னும் வள்ளல்பாற் சென்று பாடிப் பரிசு பெற்றவர்.

❊

## பகழிக் கூத்தர்

**ஊர்:**—பாண்டி மண்டலத்திலுள்ள சந்நாசிக்கிராமம்.
**குலம்:**—வேதியர்.
**சமயம்:**—சைவம்; சிலர் இவர் ஊருங் குலமும் வேறென்றுங் கூறுவர்.

இவர் 'திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்' என்னும் நூலை இயற்றியுள்ளார்.

❊

## பட்டினத்தடிகள்

**ஊர்:**—காவிரிப்பூம் பட்டினம்.
**குலம்:**—வணிகர்.
**காலம்:**—பத்தாம் நூற்றுண்டின் பிற்பகுதி.
**இயற் பெயர்:**—திருவெண்காடர்.

இவர் துறவறத்தை மேற்கொண்டார்; சிலகாலம் திருவிடைமருதூரில் வாழ்ந்தவர்; சென்னைக்கு அண்மையிலுள்ள திருவொற்றியூரில் சமாதியானார்.

**இவர் இயற்றிய நூல்கள்:**

1. திருவிடைமருதூர் மும்மணிக் கோவை.
2. கோயில் நான்மணிமாலை.

## படிக்காசுப் புலவர்

**ஊர்:**—பொன்விளைந்த களத்தூர்;—தென் களந்தை என்றுங் கூறுவர்; சிலர் இராமநாதபுரம் சமஸ்தானத்தைச் சார்ந்த முதுகளத்தூர் என்பர்.

**மரபு:**—செங்குந்தர்.

'படிக்காசுப் புலவர்' என்னும் பெயர் இயற்பெயரன்று; களந்தையான் என்பது இவரது இயற்பெயராம். இவர்க்கு வழங்கும் படிக்காசுப் புலவர், படிக்காசுத் தம்பிரான் என்னும் பெயர்கள் இவரது சைவ நலத் தூய நெறிக்கும், மெய்ப் புலமைக்கும் மனமகிழ்ந்த தில்லைச் சிவகாமி அம்மையார், இவர் பாடலுக்குப் படிக்காசளிக்க, அதனால் வந்த காரணச் சிறப்புப் பெயராகும் என்பது நூல் துணிபு. "தம்பிரான்" என்ற பட்டப் பெயரால், இவர் சைவ சமயப் பெரியார் என்பது நன்கு விளங்கும். இவர் இளமையிலேயே கல்வி கற்றுத் திகழ்ந்தார். இவர் திருவாவடுதுறை யாதீனத்து ஈசான மடம் ஸ்ரீ சுவாமிநாத தேசிகர் முதலிய நல்லறிஞர்களால் நன்கு பாராட்டப்பட்டவர்; சீட்டுக் கவி பாடுவதில் வல்லவர்; இவர் காளத்தியைப் பாடிக் கறவைப் பசு பெற்ற செய்தியை தொண்டை மண்டல சதகத்தில் 52-ம் செய்யுளில் விரிவாகக் காணலாம்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. தொண்டைமண்டல சதகம்.
2. பாம்பலங்கார வருக்கைக் கோவை.
3. புள்ளிருக்கும் வேளூர்க் கலம்பகம்.

**சமகாலப் புலவர்கள் :—**1. அமிர்த கவிராயர். 2. பலபட்டடைச் சொக்கநாதப் புலவர். 3. திருவாரூர் வைத்தியநாத நாவலர்.



## பண்டிதமணி கதிரேசன் செட்டியார்

இவர் மகிபாலன் பட்டியில் நகரத்தார் மரபிற் பிறந்தவர். இவர் சோழவந்தான் சண்முகம் பிள்ளை அவர்களின் மாணுக்கர்; இவர் (வடமொழி, தென்மொழி) ஆகிய இரு மொழியிலும் வல்லவர்; சிறந்த தமிழ் ஆராய்ச்சியாளர்; செய்யுள் இயற்றுவதிலும் வல்லவர். இவர் வடமொழியிலுள்ள 'சுக்கிர நீதி' என்னும் நூலை செந்தமிழ் நடையில் மொழிபெயர்த்துள்ளார்; பெரிய புராணம், சிலப்பதிகாரம், திருவாசகம் முதலிய தமிழ்ப் பெரு நூல்களின் நுண்ணிய நயங்களைத் திட்பமாகவும், தெளிவாகவும் எடுத்துரைப்பதில் தலை சிறந்தவர். இவர் "மகாமகோபாத்தியாயர்" என்னும் பட்டம் பெற்றவர். இவர், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராய் இருந்து பணியாற்றியவர்.

**இவர் இயற்றிய நூல்கள் :**

1. சுலோசனை.
2. உதயணன் கதை.
3. மண்ணியல் சிறுதேர்.
4. தமிழ் உரைநடைக் கோவை.

## பரஞ்சோதி முனிவர்

இவர் சோழநாட்டில் வேதாரணியத்திலே சைவர்களாகிய அபிடேகத்தார் மரபிலே மீனாட்சி சுந்தர தேசிகர்க்குப் புதல்வராகத் தோன்றியவரென்ப; சிலர் வேளாண் மரபின ரென்றுங் கூறுவர். இவர் தென்மொழி, வடமொழி முதலிய இரு மொழிகளிலும் புலமை மிக்கவர். இவர் காலம் 300 ஆண்டுகட்கு முன் என்பர் ஒரு சாரார்; மற்றொரு சாரார், பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் கால மென்பர்.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. திருவிளையாடற் புராணம்.
2. வேதாரணிய புராணம்.



### பரணர்

'கபில பரணர்' என்று வழங்குவதால், இரு புலவரும் சிறந்த நட்புப் பூண்டு தமிழ்ப் பணியாற்றினர் என்பது தேற்றம். இவர் இன்ன குலத்தவரென்பது தெரிந்திலது. இவர் பாடும் பாக்கள் எத்துறையைப் பற்றிய தாயினும், ஏதேனும் ஒரு சிறந்த நீதியை யாவது, ஓர் அரசன் வரலாற்றையாவது இடையே புகுத்தி உலகத்தார்க்கு நல்லறிவு புகட்டுவது வழக்கம். இவர் பாணர் குடியிற் றோன்றியவர் என ஐயுறுகின்றனர். இவர்

வையாவிக் கோப்பெரும் பேகனைப் பாடி யுள்ளார். இவர் கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவர். இவர் தெய்வப் புலமை வாய்ந்தவர். இவர் கோச்செங்குட்டுவன் மேல் பதிற்றுப் பத்துள், ஐந்தாம் பத்தைப் பாடிப் பரிசிலாக உம்பற்காட்டு வருவாயையும், அவன் மகன் குட்டுவஞ்சேரல் என்பவனையும் பரிசிலாகப் பெற்றவர். கபிலருடைய உயிர்த் தோழர் என்பதை, 'கபில பரணர்' என்னும் தொகை நிலைத்தொடரே அறிவுறுத்தும்.



## பரிமேலழகர்

இப் பெயர் இடுகுறிப் பெயரா காரணப் பெயராவென்னும் ஐயப்பாட்டிற் குரியது. 'பரிமேலழகர்',—திருமாலுக் கொரு பெயரென் றும், வைணவ சமயத்தைச் சார்ந்ததனுல் இவர்க்கு இப் பெயர் இடப்பட்டதென்றும் ஒரு சாரார் கூறுவர்.—சான்று: தொண்டை மண்டல சதகம்.

**இடம்:**—தொண்டை நாட்டுத் திருக்காஞ்சி "விள்ளுவனுர்க்குந் திருக்காஞ்சி வாழ் பரிமேலழகன்" என்னும் தொடரே இதற்குச் சான்றாகும்.

**குலம்:**—வைணவம்.

இவர் வடமொழி, தென்மொழி ஆகிய இரண்டு மொழிகளிலும் தேர்ச்சி பெற்றவர். திருக்குறளுக்குப் பலர் உரை எழுதியுள்ளனர்.

அவற்றுள் பரிமேலழகர் உரையே தலை சிறந்தது. இவர் காஞ்சிமா நகரில் ஓர் அவை கூட்டி அங்குத் தாம் எழுதிய உரையை, அவண் வாழ்ந்து வந்த அரசன் முன்னிலையில் அரங்கேற்றும்போது, சிலர், 'நும் உரை சிறந்ததென்பதற்கு ஆதாரமென்னை? ஆதாரம் காட்டினாலன்றி, அரங்கேற்ற முடியாதென்று' கூறினராம். அதுபோழ்து இவர் வெண்கலத்தால் ஓர் பரி செய்வித்து, அதனை நன்கு பழுக்கக் காய வைத்துத் தமது வழிபடும் தெய்வத்தின் அருளால் அதன் மேலேறியிருந்துகொண்டு, தம் உரையை அரங்கேற்றினரென்றும் ஒரு கதை வழங்குகிறது. இவர் யோகப் பயிற்சி யுடையவர். இவர் பரிபாடலுக்கும் உரை எழுதியுள்ளார். வள்ளுவர் குறளுக்கு உரை வகுத்தவர். இவரைப் பாண்டி நாட்டிற் பிறந்தவர் என்பாருமுளர்; அது எவ்வாற்றானும் பொருந்தாது. இவர் வைதிக சமய உணர்ச்சியில் இணையற்றவர்.



## பலபட்டடைச் சொக்கநாதப் புலவர்

இவர், தொண்டை மண்டலத்தில் தோன்றிய சிறந்த புலவர்களில் ஒருவர். இவர் இளமையிலேயே கல்வி கேள்விகளில் வல்லவராய்ப் பற்பல அரசர்களிடத்தும், வள்ளல்களிடத்தும் சென்று புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்று வந்தவர்; மற்ற விவரங்களைத் தெற்றென விளக்குவதற்குப் போதிய ஆதாரங்கள் கிடையா.

## பவணந்தி

**நாடு:**—கொங்கு நாடு.

**ஊர்:**—சீனபுரம் என வழங்கும் சனகாபுரம்.

**தந்தை:**—சன்மதி முனிவர். ஒரு சமண முனிவர்.

**காலம்:**—900 ஆண்டுகட்கு முன்.

'பல்கலைக் குரிசில் பவணந்தி யென்னும் புலவர் பெருமான்' நன்னூலை இயற்றினர்; சீயகங்கனுடைய வேண்டுகோளுக் கிணங்கி இவர் இதை இயற்றினர் என்ப. இந் நூலிலுள்ள சூத்திரங்கள் மிகவும் திட்ப நுட்பங்கள் அமைந்துள்ளன.

"முன்னூலொழியப் பின்னூல் பலவினுள், நன்னூலார் தமக் கெந்நூலாரும் இணையிலை யென்னுந் துணிவே மன்னுக" என்றார் இலக்கணக் கொத்து செய்த சுவாமிநாத தேசிகர். எனவே, இத்தன்மைத்தாகிய திட்ப நுட்பங்கள் மிக்க இலக்கண நூல் வேறு எந்தப் பாடையிலுமில்லை.



## பாண்டித்துரைத் தேவர்

சேது சமஸ்தானத்தில் வாழ்ந்த பொன்னுச் சாமித் தேவரின் புதல்வர் இவர்; இவர் தற்போதிருக்கும் நான்காம் தமிழ்ச் சங்கத்தை நிறுவியவர்; தமிழ் ஆராய்ச்சியில் வல்லுநர். இவர் **1867**-ல் தோன்றியவர்; தமிழ் மொழிக் குச் சீரிய தொண்டாற்றியவர். இவர் **1911**-ல் மறைந்தார்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. பன்னூற்றிரட்டு.
2. சைவ மஞ்சரி.
3. துதி மஞ்சரி.
4. சிவஞான இரட்டைமணிமாலை முதலியன.



## பாநுகவி சுவாமிகள்

**பிறப்பிடம்:**—மலையாளம்.
**காலம்:**—கி. பி. 1866 – 1926.

இவர் வட ஆற்காடு மாவட்டத்தைச் சார்ந்த திருவத்திபுரத்திலுள்ள திருநாவுக்கரசு மடாலயத்தின் அதிபதியாகப் பல்லாண்டுகள் தொண்டு புரிந்து வந்தார். இவர் பன்மொழிப் புலவர்; முத்தமிழில் வல்லுநர்; தமிழ் மருத்துவத்திலும் தலைசிறந்தவர்; சிறந்த நூலாசிரியர் மட்டுமன்று; உரையாசிரியருமாவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. விநாயகப் புராணம்.
2. திருவாரூர்ப் புராண வசனம்.
3. இராமாயண நங்கைப் பாட்டு.
4. ஞானாமிருத பாஷிணி.
5. கந்தபுராணக் கலாபூடணவுரை முதலியன.



## பாரதம் பாடிய பெருந்தேவனார்

**நாடு:**—தொண்டை நாடு.
**குலம்:**—வேளாளர்.
**சமயம்:**—சைவம்.

இவர் பாரதக் கதையைத் தமிழிலே உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக இயற்றியவர்; கடைச் சங்கப் புலவர்களுள்ளே மிக, மிக முதியவர்; நற்றிணை, கலித்தொகை, புறநானூறு முதலிய நூல்களிலுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்களும் இவரால் பாடப்பட்டனவே; எனவே, இவர் சங்க காலத்திலே தோன்றியிருக்கலாம்; பாரதம் பாடிய பெருந்தேவனார் என்னும் அடைமொழியிலிருந்து, இவர் பாரதம் பாடினார் என்பதை அறியலாம். இப்பெரியார் எழுதிய பாரதம் இதுபோழ்து கிடைப்பதரிது; இவர் பாண்டிநாட்டில் வாழ்ந்தவரென்று ஒருசாரார் கூறுகின்றனர்; இவர் சங்கச் செய்யுட்களை யெல்லாம் ஆராய்ந்து பெரும்பாலனவற்றிற்கு முதற் செய்யுளாகிய கடவுள் வாழ்த்துச் செய்யுள் இயற்றியிருத்தலால்.



**பாரதி தாசன்** (கனக சுப்புரத்தினம்)

**பிறப்பிடம் :—** புதுவை.

**தோற்றம் :—** 1889.

**இயற் பெயர் :—** கனக சுப்புரத்தினம்.

**தந்தை :—** கனகசபை முதலியார்.

இவர் நடிப்புக் கலையில் தலைசிறந்தவர்; புதுவையிலுள்ள கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய்ப் பணியாற்றியவர்; காலஞ்சென்ற அமரகவி - சுப்பிரமணிய பாரதியாருடன் நெருங்கிப் பழகியவர்; அவர்பால்

இவர் மிக்க தொடர்பு கொண்டவர்; அதன் காரணமாகத் தம் பெயரையே 'பாரதி தாசன்' என மாற்றி அமைத்துக் கொண்டார்; சீர் திருத்தக் கருத்துக்களை உடையவர்; தமிழ் மொழியினிடத்துப் பேரன்பு பூண்டவர்; ஓர் புரட்சிக் கவிஞர்; மக்கள் இவர்பால் கொண்ட அன்பின் காரணமாகப் பாராட்டுக் கூட்டம் கூட்டி இவருக்குப் பொன்னுடை போர்த்திப் பொற்கிழி நல்கினர். இவரது பாடல்கள் எளிமையும், இனிமையும் பொருந்தியவை.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. குடும்ப விளக்கு.
2. இருண்ட வீடு.
3. பாண்டியன் பரிசு.
4. தமிழ் இயக்கம்.
5. நல்ல தீர்ப்பு.
6. கற்கண்டு.



## பாலைக் கௌதமனார்

இவர் அந்தணர்; பதிற்றுப்பத்து என்னும் தொகை நூலிலே மூன்றும்பத்தைப் பாடியவர். இவர் சேரவரசன் ஒருவனைப் பாடி, அவனிடம் பொன் பெற்று, வேள்விகள் செய்து மனைவியோடு சுவர்க்கம்பெற்றதாய் பழமொழி ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இதை "தொடுத்த பெரும் புலவன் சொற்குறை தீர" என்ற பழமொழிப் பாடலால் நன்கு அறியலாம்.

## பிங்கலர்

இவர் பிங்கலம் என்னும் நிகண்டு நூல் செய்தவர்; பவணந்தி, மண்டல புருடர், இவர்களுக்குக் காலத்தால் முற்பட்டவர். பிங்கல நிகண்டு, இராமாயணம், பாரதம் முதலியவற்றில் வரும் துமிதம், புள்ளிமலை, பெருங்காளர் முதலிய அருஞ் சொற்கள் பலவற்றின் பொருள்களையும் பிறவற்றையும் அறிவிப்பது.



## பிசிராந்தையார்

இவர் பாண்டிய நாட்டில் கடற்கரையை அடுத்த 'பிசிர்' என்ற ஊரில் வாழ்ந்தவர். அவர் பெயர் ஆந்தையார் என்பது. அதனால் அவர் பிசிராந்தையார் எனப் பெயர் பெற்றார். ஆதன் தந்தை என்ற இரு சொற்களே ஆந்தையார் என மருவி வழங்கியது; உயரிய பல நற்குணங்கள் வாய்ந்தவர்; அக்காலச் சான்றோர்களாலும், அரசர்களாலும் நன்கு மதிக்கப் பெற்றவர். அவர் சோழ நாட்டை யாண்ட கோப்பெருஞ் சோழனுடைய அருங் குணங்களைக் கேள்வியுற்று, அவனைப் பாராமலும் பழகாமலும் உணர்ச்சி ஒத்த நட்புரிமையுடன் வாழ்ந்தவர்; முதுமையிலும் இவருக்கு நரை தோன்றியிலது; நரை தோன்றுவதற்குக் காரணம் கவலையே" என்று கூறியுள்ளார்.

## பிள்ளைப் பெருமாளையங்கார்

**நாடு** :—சோழ நாடு.

**ஊர்** :—திருமங்கை.

**மதம்** :—வைணவம்.

**காலம்** :—கி. பி. 1400-க்கு பிற்பட்ட காலம்.

இவர் 'திவ்யகவி' என்று அழைக்கப் படுபவர். 'அட்டப் பிரபந்தம்' என வழங்கும் எட்டு நூல்களைச் செய்துள்ளார். இவரை 'அழகிய மணவாள தாசர்' என்பர். இவர் தென்மொழியோடு வடமொழியிலும் தேர்ச்சி பெற்று அரங்கநாதனிடம் பேரன்பு பூண்டவர். இவர் பராசர பட்டரது சீடர். 750 ஆண்டு கட்குமுன் இவர் வாழ்ந்ததாக ஒரு சாரார் கூறுகின்றனர்.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. திருவரங்கத்தந்தாதி.
2. திருவரங்கக் கலம்பகம்.
3. திருவரங்கத்து மாலை
4. அரங்கநாயகரூசல்.
5. திருவேங்கட மாலை
6. திருவேங்கடத்தந்தாதி.
7. அழகரந்தாதி.
8. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி — எட்டு நூல்களையும், பரப்பிரம்ம விவேகம், திருநறையூர் நம்பிவிடு தூது முதலிய பிரபந்தங்களையும் இயற்றியருளினர்.

## பீதாம்பரப் புலவர்

**ஊர்:**—யாழ்ப்பாணத்திலுள்ள நீர்வேலி.

**குலம்:**—வேளாளர்.

**சமயம்:**—சைவம்.

**காலம்:**—சேனாதிராயர் (முதலியார்) காலத்தினர்.

இவர் இலக்கிய இலக்கணம் கற்றுத் தேர்ந்தவர்; கவி பாடும் திறம் பெற்றவர்; இவர் சேனாதிராய முதலியார்க்கு மாணவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. மறைசைக் கலம்பகம்.
2. நீர்வை வெண்பா.
3. மறைசைத் திருப்புகழ்.



## புகழேந்திப் புலவர்

இவர் தொண்டை நாட்டிலுள்ள செங்கற் பட்டிற்கு அண்மையிலுள்ள பொன்விளைந்த களத்தூரில் துளுவ வேளாளர் குலத்தில் தோன்றியவர்; பாண்டிய வரசனால் ஆதரிக்கப் பெற்று அவன்றன் அவைப் புலவராய் அமர்ந் தார். ஒட்டக் கூத்தரால், புகழேந்தியார் இடர்ப்பாடுற்றார். சோழன் புகழேந்தியை நெடுநாளாகச் சிறையிலிட்டு வருத்தினான்; அதனால் தன் தேவிக்கு ஊடல் உண்டாயிற்று என்பதை அறிந்து புலவரைச் சிறையினின்றும் விடுவித்தான்; பிறகு சோழன் அவரை அன் புடன் ஆதரித்தான்; ஆனால், சோழநாட்டு அரசன் வேண்டுகோளுக் கிணங்கி, அங்கே

நிலையாக இருக்க உடன்படவில்லை. எனவே மள்ளுவ நாட்டின்கண் விளங்கிய, முரணை நகரை அரசாண்டுவந்த சந்திரன் சுவர்க்கி என்னும் குறுநில மன்னன்பால் சென்று அவன் அவைப் புலவராய் அமர்ந்தார். இம் மன்னனின் வேண்டுகோளுக்கிணங்கிப் புகழேந்திப் புலவர், தமிழ் மொழியில் நளவெண்பாவை இயற்றி அரங்கேற்றினர். கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்திப் புலவர் ஆகிய இம் மூவரும் ஒரே காலத்தினராவர். எனவே இப் புலவரது காலம் கி.பி. **11**-ம் நூற்றாண்டின் பிற்பகுதி யென்பது வெள்ளிடைமலை. இவர் சைவரென்றும் வைணவரென்றுங் கூறுவர். தொண்டைமண்டலச் சதகமுடையார் இவரை "மாலார் களந்தைப் புகழேந்தியும்" என்பதனுல் இவர் வைணவர் என்பது தேற்றம்.



## புத்த மித்திரர்

**பிறப்பிடம்:**—பொன்பற்றியூர் என்னும் ஊர்.

**காலம்:**—11-ம் நூற்றாண்டு.

இவர் வீர சோழியம் என்னும் இலக்கண நூலை எழுதியுள்ளார். வீரசோழன் என்ற அரசன் அவைக்களத்து அந்நூல் அரங்கேற்றப்பட்டது. இத்துணைச் சிறப்பு வாய்ந்த வீரசோழியம் தோன்றியது சோழ மண்டலமாகும். வீரசோழன் காலம் கி.பி. **1563-1576.**

## புருடோத்தும நாயுடு பி. ரா.

**பிறப்பிடம் :—** சிதம்பரத்தை அடுத்த புவனகிரி.

**பெற்றோர் :—** இராசகோபால் நாயுடு — ஆண்டாள் அம்மையார்.

இவர் சிறந்த தமிழறிஞர்; திருவையாற்று அரசர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர்; மாணவர்கள் விரும்பிக் கற்குமாறு பாடஞ் சொல்லுவதில் சிறந்தவர். இவர், இதுபோழ்து சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றி வருகின்றார். இவர், திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் என்னும் அரிய நூலை இயற்றியுள்ளார்.

❊

## புறத்திணை நன்னுகனார்

இவர் தொண்டை நாட்டவர்; புறத்திணைப் பாட்டுக்கள் பாடுவதில் சிறந்தவர்; ஆதலால் இப்பெயர் பெற்றார். இவர் ஓய்மான் நல்லியக்கோடனை 176-ம் புறப்பாடலில் சிறப்பித்துள்ளார். இவர் வில்லியாதன் காலத்து இருந்தவர். இவரது ஆழ்ந்த புலமையை இப் பாட்டால் அறியலாம்.

❊

## பூதஞ் சேந்தனார்

இவர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் ஆவார்: இவர், 'இனியவை நாற்பது' என்னும் நூலை இயற்றியவர்; இனிமை பயக்கத்தக்க

40 செய்யுட்களை யுடையது. இவர் கடைச் சங்க காலத்தில் வாழ்ந்தவர். அந்நூல் இன்னிசை வெண்பாக்களால் ஆகியது.



## பூதத்தாழ்வார்

இவர் மகாபலிபுரத்தில் தோன்றியவர்; முதல் ஆழ்வார் மூவரில் ஒருவர்; இவர் எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்துள் இரண்டாம் திருவந் தாதியைப் பாடியுள்ளார்.



## பூரணலிங்கம் பிள்ளை, பி. ஏ.,

இவர் திருநெல்வேலியைச் சார்ந்த முந் நீர்ப்பள்ளம் என்னும் ஊரினர்; ஆங்கிலம், தமிழ் முதலிய மொழிகளில் புலமை உடையவர். இவர் சிலகாலம் 'ஞான போதினி' என்னும் பத்திரிகைக்குத் தலைவராய் விளங்கியவர். தமிழ் இலக்கியச் சரித்திரத்தை முதன்முதல் தொகுத்து எழுதியவர் இவரே; ஆங்கிலத்தில் அந் நூலை எழுதியுள்ளார். இவர் பல நூல்களை எழுதியுள்ளார். ஆராய்ச்சித் திறமை மிக்கவர்.



## பெருங்குன்றூர் கிழார்

பெருங்குன்றூரென்பது, பாண்டிநாட்டி லுள்ள ஓர் திருப்பதியா யிருக்கவேண்டும் என்பது ஒரு சாரார் கூற்று. "பெருங்குன்றம்"

பிற்காலத்தில் பரங்குன்றம் என்று மருவிற்றென்பர் மற்ருெரு சாரார். இவர் இயற்பெயர் தெரிந்திலது. இவர் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கியவர். பெரும்பாலும் தமிழ்ப் புலவர்க்கு உளதாகும் வறுமை நோய் இவரையும் வாட்டியது. இவர் குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை யென்னும் சேரவரசன் மீது ஒன்பதாம் பத்தைப் பாடியவர்; (பதிற்றுப் பத்து) பாடி 32,000 பொற்காசு முதலிய பலவகைப் பரிசில்கள் பெற்றவர்; வேளாள மரபினர்; கடைச் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தோருள் இவரும் ஒருவர்; வையாவிக் கோப்பெரும் பேகனைப் பாடியவர்; இவர் இயற்றியனவாக எட்டுத் தொகையில் 21 செய்யுட்கள் கிடைத்துள்ளன.



## பெருஞ்சித்திரனர்

இவர் பிறந்த ஊர், நாடு இன்னவையெனத் தெரியவில்லை. பெருஞ் சித்திரனரென்னும் பெயர், காரணப் பெயரோ இடுகுறிப் பெயரோ தெரியவில்லை. இவர் சித்திர கவி பாடுவதில் சிறந்தவரென்றும், சித்திரமெழுதினாற் போலக் கேட்பவரின் மனத்துட் பதியுமாறு பாடலைப் பாடுபவரென்றும் ஒரு சாரார் கூறுகின்றனர். இவர் சித்திரை நட்சத்திரத்தில் (ஓரையில்) தோன்றியவரென்றும், அதனால் இப்பெயர் பெற்ருரென்றும் மற்ருெரு சாரார் கூறுவர். இவர் பெருமித முள்ளவர்;

இவர் குமணனுடைய கொடை மடத்தைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் முகமாறித் தரும் பரிசிலை விரும்பார். இளவெளிமான் இவர்க்கு, வரிசை நோக்காது பரிசளித்தான். அப் பொருளையேற்க மறுத்து அவனை நாணுமாறு செய்தார். அதன் பொருட்டு இவர் இளவெளிமானை இகழ்ந்து பாடியுள்ளார்.



## பெருந்தலைச் சாத்தனார்

**நாடு :**—சோணாடு.

**ஊர் :**—ஆவூர்.

**மரபு :**—வேளாண் மரபு.

**தந்தை :**—மூலங் கிழார்.

**வரலாறு**

இவர்க்குத் தலை பெருத்திருந்ததனால் பலரும், 'பெருந்தலைச் சாத்தன்' என்றழைத்தனர்; மேலும், இவர் மேதாவியாய் இருப்பர் என்றும் கூறினர். இவர் இளம் பருவத்தில் கணக்காயரிடம் கல்வி பயின்று, பின்னர் தன் தந்தையாரிடம் தமிழ் இலக்கண இலக்கியம் முதலியவற்றையும் கற்றுப் பெரும் புலவனாகி, இனிய பாடல்களை விரைவில் இயற்றும் வன்மையும் பெற்றிருந்தார்; உரிய பருவத்தே திருமணமும் நடந்தேறியது. இவர் இல்வாழ்க்கையென்னும் சகடத்தை முட்டின்றி நடாத்தினார்; பின்னர் சில மக்கள் தோன்றினர்; மிடியென்னும் இடியால் அடியுண்டு வருந்தினர். இவர்

பரிசில் ஈயும் வள்ளலை நாடிக் குமணன்பால் சென்றார். தம் வறுமை நிலையைச் சித்தரித்துக் காட்டினார்; அவன் நிலைமையைக் கண்டதும் தம், நிலைமையை மறந்து, இளங்குமணன், குமணன் இவர்களை ஒற்றுமைப் படுத்தினார். குமணன் 'புலவர் போதும் போதும்' என்று கூறுமளவு பொன்னும் மணியும் கைம்மாவும் பரிமாவும் அவருக்கு வழங்கினான்.



## பெருந்தேவனார்

சங்க காலத்தில் பாரதம் பாடிய பெருந்தேவனார் வேறு; இவர் வேறு. இவர் பல்லவ அரசனாகிய இரண்டாம் நந்திவர்மன் காலத்தவரென்றும் மூன்றாம் நந்திவர்மன் காலத்தவரென்றும் கூறுகின்றனர். இரண்டாம் நந்திவர்மன் ஆட்சி புரிந்த காலம் கி. பி. 8-ம் நூற்றாண்டு; மூன்றாம் நந்திவர்மன் காலம், அதற்குப் பிற்பட்டது. அதாவது கி. பி. 9-ம் நூற்றாண்டு. பாரத வெண்பாப் பாடிய பெருந்தேவனார், 'பல்லவர் தோன்றல் பைந்தார் நந்தி' என்று கூறியிருப்பதனால், இவர் நந்திவர்மன் காலத்தவர் என்பது வெளிப்படை. இவர் நந்திக் கலம்பகம் என்னும் அரிய நூலை இயற்றியுள்ளார்.

## பெருவாயின் முள்ளியார்

இவர் ஆசாரக் கோவையைப் பாடியவர்; 101 பாடல்களை உடையது. ஒழுக்கத்தின் விதியைக் கூறுவது.

**காலம்** :—சங்க காலத்திற்குப் பிற்பட்ட காலம்.

**சமயம்** :—சைவம்.

**ஊர்** :—வண்கயத்தூர் என்னும் ஊரினர். இதற்குச் சான்று, அந்நூலின் தற்சிறப்புப் பாயிரச் செய்யுளான் அறியலாம்.



## பேயாழ்வார்

இவர் திருமயிலாப்பூரில் தோன்றியவர். எட்டாம் நூற்றாண்டுப் புலவர்; நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்திலுள்ள மூன்றாம் திருவந்தாதியைப் பாடியவர். இவர் முதல் ஆழ்வார் மூவரில் ஒருவர்.



## பேராசிரியர்

இவரை 'மதுரையாசிரியர்' என்றுங் கூறுவர். இவர், இளம்பூரணருக்கு ஆசிரியராவர். இவருடைய இயற்பெயர் தெரிந்திலது.

**ஊர்** :—மதுரையென்று அவருடைய பெயரிலிருந்து தெரிகிறது.

**காலம்** :—சற்றேறக்குறைய 1250 ஆண்டுகட்கு முன்.

**சமயம்** :—சைவம்.

இப்பேராசிரியரே திருக்கோவையாருக்குத் தக்க உரை செய்தாரென்பர் சிலர். இவர் குறுந் தொகையிலுள்ள 402 செய்யுட்களில் 382 செய்யுட்களுக்கு உரை செய்தவர்; எஞ்சிய 20 செய்யுட்களுக்கு உரை செய்வதன் முன் இவர் தென்புலஞ் சென்றனர் என்ப. இவர் இளம்பூரணர் முதலியவர்கட்கு ஆசிரியராக இருந்ததனால் அக்காலத்தில் இவருக்கு நிகரான பேரறிஞர் வேறெவரும் இருந்திலர் என்பது தேற்றம்.

**சமகாலப் புலவர்கள் :**-இளம்பூரணர், பரிமேலழகர், நச்சினார்க்கினியர்.

**இயற்றிய உரைகள் :**—அகத்திணையியல், புறத்திணையியல், (தொல்காப்பியம்.) திருக்கோவையார்-உரை, குறுந்தொகை.



## பொய்கையார்

**நாடு :**—மலைநாடு.

**ஊர் :**—தொண்டி யென்னும் ஊரில் தோன்றியவர்.

**குலம் :**—அந்தணர்.

முதலாழ்வார் மூவர் என்று கூறப்படும் பொய்கையார், பூதத்தார் பேயார் என்பவருள் முதல்வராகிய பெரியாரே இவர். களவழி நாற்பது பாடிய பொய்கையாரும், பொய்கை யாழ்வாரென்ற பெரியாரும் ஒருவராய் இருக்க வேண்டுமென்பது அறிவுடையார் சிலர் கூறுகின்றனர். சோழன் செங்கணானைப் பாடிய பொய்கையார் வேறு; சங்கச் செய்யுட்களிற்

பாடிய பொய்கையார், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகிய "களவழி நாற்பது" என்பதைப் பாடியுள்ளார். சிறந்த புலமையும் தத்துவ ஞானமும் நிரம்பப் பெற்றவர். இவர் களவழி நாற்பது பாடிச் சேரமான் கணைக் காலிரும்பொறை யென்ற அரசனைச் சோழன் செங்கணான் இட்ட சிறையினின்றும் மீட்டார் என்ற செய்தியைக் கலிங்கத்துப் பரணியால் அறியலாம். கழுமலப் போரிலே தோல்வியுற்றுச் சிறைப்பட்ட தன் மாணவனாகிய கணைக் காலிரும்பொறையை விடுதலை செய்வித்து மகிழ்ந்தார் இவர் என்று சயங்கொண்டார்க்கும், மூவருலா பாடிய தலைவர்க்கும் கருத்தாம்.



## பொய்கையாழ்வார்

இவர் காஞ்சியில் தோன்றியவர்; 8–ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்; முதல் ஆழ்வார் மூவரில் ஒருவர்; இவர் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தி லுள்ள முதல் திருவந்தாதியைப் பாடியவர்.



## பொய்யாமொழிப் புலவர்

இவர் துறையூரிலே செங்குந்தர் குலத்தில் தோன்றியவர்; தமிழ்ப் புலமை வாய்ந்த ஒரு தெய்வப் புலவர். இவர், அழிந்துபோன தமிழ்ச் சங்கத்தை மீட்டும் வளர்க்க வேண்டிப் பாண்டியனிடம் சென்று புத்துயிர் அளித்தவர். இப்புலவர் பெருமானே 'தஞ்சை வாணன்

கோவை'யைப் பாடியவர்; இவர் வணங்கா முடி மன்னன் காலத்தவர். இவர் காலம் ஏறக் குறைய 1000 ஆண்டுகட்கு முற்பட்டதென்பர்.



## பொன்முடியார்

இவர் பெண்பாற் புலவர்; தகடூர் யாத் திரையில் இவரால் பாடப்பட்ட பாடல்கள் உள; இவர் சேரமான் தகடூரெறிந்த பெருஞ் சேரல் இரும்பொறையின் காலத்தவர்; இவர் உடனிருந்த புலவர் அரிசில் கிழார். இவர் அதிகமான் நெடுமான் அஞ்சியைப் பாடியுள் ளார். "ஈன்று புறந் தருதல்" என்று தொடங் கும் புறப் பாடலைப் பாடியவர் இவரே. இவர் பாடியுள்ள பாடல்கள் 3. [புறம்.]



## பொன்னம்பலப் பிள்ளை

இவர் யாழ்ப்பாணத்தில் பிறந்தவர். இவர் மிக்க ஆராய்ச்சித் திறம் பெற்றவர். இவர் சிறந்த தமிழ்ப் புலமை உடையவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. வஞ்சிமாநகர் ஆராய்ச்சி.
2. தமிழர் பெருமை.



## போக முனிவர்

இவர் திருமூலர் மாணவர் எழுவரில் ஒருவர்; இவர் சித்தர்களுக்குத் தலைமை

பூண்டவர்; சிவபெருமான் இயற்றியதாகக் கூறப்படும் 700000 செய்யுட்களைத் தம் மாணவர்கட்குப் போதித்தார் என்ப.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. வைத்தியம் ஏழாயிரம்.
2. யோகம் எழுநூறு.
3. போகர் திருமந்திரம்.



## போப் ஜி. யூ.

தமிழ் மொழியை உலகறியச் செய்தவர்களுள் இவரும் ஒருவர்; இவர் ஆங்கிலேயர்; இவர் கானடாவிலுள்ள நோவாஸ் கோஷியாவில் 1820-ம் ஆண்டு தோன்றியவர்; மதப் பற்றுடையவர். திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த சாயர்புரம் என்னும் சிற்றூருக்குச் சென்று, அங்கு ஓர் பள்ளியை நிறுவி, கல்வியைப் பரப்பினார். இவர் தமிழ் மொழியின்பால் பற்றுக் கொண்டு ஆரியங்காவுப் பிள்ளை என்ற தமிழ்ப் பாவலரிடத்துத் தமிழினை கசடறக் கற்றுத் தமிழறிஞர் ஆனார்; இவர் வள்ளுவர் குறளையும், மாணிக்கவாசகர் திருவாசகத்தையும், நாலடியாரையும் படித்து இன்புற்றார்; இவ்வரிய நூல்களை இவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். இவர் தஞ்சை, பெங்களூர் முதலிய பல இடங்களிலும் கல்வியைப் பரப்பி, சீரிய தொண்டாற்றினார். இவர் திறமையைக் கண்ட கேம்பிரிட்ஜ் பல்கலைக்

கழகத்தார் இவருக்கு எம். ஏ., பட்டமும், காண்டர்பரியிலுள்ள கிறித்தவ சமய தலைவர், இவருக்கு டி. டி., பட்டமும் அளித்தனர்; விக்டோரியா மகாராணியார் இவருக்குத் தமது வைர விழாவில் பொற்பதக்கம் அளித்துச் சிறப்பித்தனர். இவர் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்து பல ஆண்டுகள், ஆங்கிலேயர்களுக்குத் தமிழ் மொழியைக் கற்பித்து வந்தார். இப் பெரியார் தமது 88-ம் ஆண்டில் இயற்கை எய்தினார்.



## மண்டல புருடன்

இவர், நிகண்டு முதல் வட மொழிக் காவியங்கள் வரை, பலவற்றையும் கற்றுத் தேர்ந்து பெற்ற அறிவின் பயனாகத் தமிழில் சூளாமணி நிகண்டு என்னும் நூலை இயற்றியுள்ளார். இவர் வாழ்ந்து வந்த நாடு, தொண்டை நாடாகும். இந்நூல், எல்லா நிகண்டு நூல்களிலும் சிறந்தது.



## மதுரகவி

**நாடு :—** தொண்டை நாடு.

**ஊர் :—** அகரம்பேடு.

**காலம் :—** சுமார் 150 ஆண்டுகட்கு முன்; ஒரு சாரார் 17-ம் நூற்றாண்டு என்பர்.

**சம காலத்தவர் :—** ஆனந்தரங்கம் பிள்ளை.

இவர் பல தனிப் பாடல்களைப் பாடியுள்ளார். இவர் திருக்கச்சூர் நொண்டி நாடகம் என்னும் ஒரு நூலை இயற்றியுள்ளார்.



## மதுரகவியாழ்வார்

இவர் பாண்டி நாட்டிலுள்ள திருக்கோளூரிலே வைணவ அந்தணர் குலத்தில் தோன்றினர். இவர் அயோத்திமா நகருக்குச் சென்று மீண்டு வந்து நம்மாழ்வாரையடைந்து தத்துவ ஞான தீட்சை பெற்றார். இவர் கி. பி. 8-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவரெனக் கூறுவர்.



## மயிலை நாதர்

**இடம் :**—தொண்டை நாடு.
**சமயம் :**—சைன சமயம்.

மயிலையில் எழுந்தருளியிருந்த நேமிநாதருடைய திருப்பெயரே இவருக்குப் பிள்ளைப் பெயராக இடப் பெற்றதென்பர்.

இவர்தான் நன்னூலுக்கு முதன் முதலாக உரை இயற்றியவர் என்று ஒரு சாரார் கூறுவர். இவருடைய உரையிலே 'உரைப் பாருமுளர், கூறுவாருமுளர்' என்று எழுதியுள்ளமை கொண்டு, இவரது உரை நூலுக்கு முன் சில உரை நூல்கள் இருந்திருக்க வேண்டுமென்று சிலர் எண்ணுகின்றனர். நன்னூலுக்கு இவர் எழுதியுள்ள உரை, 'மயிலை நாதருரை' என்று வழங்குகின்றது.

## மயிலை சிவமுத்து

**பெற்றோர் :**—மயிலை – சிவானந்த முதலியார்.
விசாலாட்சி அம்மையார்.

இவர் 'மாணவர் மன்றத்தின்' தலைவர்; சிறந்த தமிழ்ப் புலவர்; சென்னையிலுள்ள மயிலாப்பூரில் 1892-ல் தோன்றியவர்.

இவர் இளமையிலேயே கல்வி கேள்விகளிற்சிறந்து நுண்ணறிவு நிரம்பப் பெற்றவர்; பின்னர், சென்னை முத்தியாலுப்பேட்டை உயர் நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராய்ப் பல்லாண்டு பணியாற்றியவர்; எளிய வாழ்வு நடாத்துபவர்; தன்னலமற்ற இயல்பினர்; தமிழுக்கும் தமிழாசிரியர்கட்கும் இவர் செய்துவரும் தொண்டுகள் அளப்பில.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. நித்திலக் கதைகள்.
2. நல்ல எறும்பு.
3. நல்ல குழந்தை.
4. என் இளமைப் பருவம்.—முதலியன.



## மயிலேறும் பெருமாள் பிள்ளை

**நாடு :**—பாண்டி நாடு.
**ஊர் :**—திருநெல்வேலி என்ற நகரம்.
**தந்தை :**—தாண்டவமூர்த்திப் பிள்ளை.
**குலம் :**—வேளாளர்.
**சமயம் :**—சைவம்.
**மரபு :**—சித்தாந்த சைவர்.
**காலம் :**—1700-1800. [18-ம் நூற்றாண்டின் தொடக்கமேயாம்.]

மயிலேறும்பெருமாள் என்பது, ஆறுமுகக் கடவுளின் திருப் பெயர்களுள் ஒன்று. அப் பெயரினையே இவர்க்கு இட்டப்பட்டது என்று சிலர் கூறுவர். சைவ சித்தாந்தத்திலே பற்று மிகுதியு முடையவர். இவர் கல்லாடத்திற்கு முதன் முப்பத்தேழு அகவல்களுக்கு அரிய உரையொன்று எழுதியுள்ளார்.

**சம காலத்தவர்:**—1. திருக்குருகூர் சுப்பிரமணிய தீட்சிதர். 2. சாமிநாத தேசிகர்.



## மயில்வாகனப் புலவர்

**ஊர்:**—யாழ்ப்பாணத்து மாதகல்.
**குலம்:**—வேளாளர்.
**காலம்:**—ஏறக்குறைய 160 ஆண்டுகட்குமுன்.
**மரபு:**—'வையா' என்னும் புலவரது மரபில் வந்தவர்.

இவர் கூழங்கைத் தம்பிரானிடம் கல்வி கற்றவர்; சிறந்த ஞாபக சக்தி உடையவர்; இவர் சிவன் கோயிலைக் கட்டிய வைத்திய லிங்கச்செட்டியாரோடு கல்வி கற்றவர். தமது ஆசிரியர் சொல்லிக் கொடுத்த பாடத்தை நன்கு கிரகித்து தன்னுடன் பயின்ற வைத்திய லிங்கச்செட்டியார் அவர்கட்கு மீளச்சொல்லிக் கொடுப்பது வழக்கம் என்று சிலர் கூறுவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. புலியூர் யமகவந்தாதி.
2. யாழ்ப்பாண வைபவம்.
3. ஞானலங்கார தீபம்.
4. காசி யாத்திரை விளக்கம்.

## மறைமலையடிகள்

**நாடு:**—சோழ நாடு.

**ஊர்:**—நாகப்பட்டினம் என்னும் ஊருக்கு அண்மையில் உள்ள 'காடம்பாடி'.

**குலம்:**—சைவ வேளாளர்.

**பெற்றோர்:**—சொக்கநாதப் பிள்ளை—சின்னம்மை.

**தோற்றம்:**—15–7–1876.

**இயற் பெயர்:**—வேதாசலம்.—தமிழ் மொழிக்கேற்ப 'மறைமலை யடிகள்' என்று மாற்றி யமைத்துக் கொண்டார்.

இவர் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் பல்லாண்டுகளாகத் தமிழ் மொழி ஆசிரியராய்ப் பணியாற்றியவர். இவர் தமிழ் மொழியின் மறு மலர்ச்சிக்கு அடிப்படையாய் விளங்கியவர்; இனிமையான குரலுடையவர்; ஈடும் எடுப்புமற்ற புலவர். இவர் 15–9–1950-ல் மறைந்தார்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. தமிழர் மதம்.
2. சாகுந்தல நாடக ஆராய்ச்சி.
3. மக்கள் நூற்றாண்டு உயிர் வாழ்க்கை.
4. அறிவுரைக் கொத்து.
5. பட்டினப்பாலை ஆராய்ச்சி.
6. கோகிலாம்பாள் கடிதங்கள்.
7. தொலைவில் உணர்தல்.
8. முல்லைப் பாட்டு ஆராய்ச்சி.

## மாங்குடி மருதனார்

**நாடு:**—சோழ நாடு.

**ஊர்:**—மாங்குடி. (தஞ்சை மாவட்டத்திலுள்ள திருத்தருப்பூண்டி தாலுக்காவிலுள்ளது.)

இவர் மதுரைக்காஞ்சி என்னும் அகவலைப் பாடிய புலவர்; மாங்குடி கிழார் என்னும் ஒரு பெயர் தொகை நூல்களில் காணப்படுகிறது. அதை நோக்குழி, மாங்குடி மருதனாரும், இவரும் ஒருவரோ, வேறோவென்பது உறுதியாகவில்லை. கலை ஆராய்ச்சியாளர்கள் தகுந்த சில காரணங்களைக் காட்டி இவ்விரு பெயருடையாரும் ஒருவரே யென்று தீர்மானித்திருக்கின்றனர். இப் புலவர் பெருமான் நெடுஞ்செழியனிடம் அவைக்களப் புலவராய் இருந்தார். இப்பாண்டியன், புலவர்குழாத்துடன் பழகி, உம்பர் வாழ்வின் இன்பத்தினும் சிறந்த இன்பத்தை இம்பர் உலகில் அனுபவித்திருந்தான் என்றுங் கூறுவர்.



## மாணிக்க நாயக்கர், பா. வே.

இவர் தமிழ்ப்புலமையும், ஆங்கில அறிவும் ஒருங்கே அமையப் பெற்றவர். தமிழ் எழுத்தாராய்ச்சியில் தலைசிறந்தவர்; அகில உலக மொழிகள் எல்லாவற்றையும் தமிழ் எழுத்துக்களைக் கொண்டே எழுத முடியும் என்பதை நிலை நாட்டியவர். சென்னை அரசாங்க நில அளவைப் பகுதியில் மேற்பார்வையாளராகப்

பணியாற்றியவர். நாமக்கல் கவிஞரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு எல்லைப் புறத்திற்குச் சென்று மீண்டவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. *தமிழ் மறை விளக்கம்.*
2. *தமிழ் அலைகைத் தொடர்.*
3. *அஞ்ஞானம்.—இவர் 'ஒலி நூல்' ஆராய்ச்சியில் வல்லுநர்.*



## மாணிக்கவாசகர்

**நாடு :**—பாண்டி நாடு.

**ஊர் :**—திருவாதவூர்.

**சமயம் :**—சைவ சமயம்.

**காலம் :**—கி. பி. 3-ம் நூற்றாண்டு.

இவருக்கு மணிவாசகர், வாதவூரடிகள் என்ற வேறு பெயர்களும் உண்டு. இவர் தேவாரம் பாடிய மூவர்க்கும் முந்தியவர் என்பர் ஒரு சாரார்; மூவர்க்கும் பிந்தியவர் எனக் கூறுகின்றனர் மற்றொரு சாரார். பரம்பரை வழக்கில் சொல்லும முறையே சரியென்று கூறுவாருமுளர். திருப்பெருந்துறையில் சிவபெருமான் இவர்க்குப் பேரருள் புரிந்தார் என்று கூறுவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. **திருவாசகம்.**
2. **திருக்கோவையார்.**

## மாதைத் திருவேங்கட நாதர்

**ஊர்:**—மாதை.—நடுநாட்டிலுள்ள திருவாமாத்தூர்.

**தந்தை:**—பெருமாளையர்.

இவர் பார்ப்பனத் தமிழ்ச் செல்வர்; இவர் தென்பாண்டி நாடாண்டவர்; காணியாளர் வகுப்பைச் சார்ந்தவர்; "குட்டித் தொல்காப்பியம்" என வழங்கப்படும் இலக்கண விளக்கம் என்ற பஞ்ச லக்ஷண நூலை, இவர் வைத்தியநாத தேசிகரைக் கொண்டு தமிழுலகிற்கு வழங்கிய வள்ளலாவர். அவர் வடமொழியில் இயற்றிய 'பிரபோத சந்திரோதயம்' என்ற நாடகத்தை இவர் தமிழில் விருத்தப் பாக்களில் 'மெய்ஞ்ஞான விளக்கம்' என்னும் பெயருடன் இயற்றியருளினர்.



## மாமூலர்

இவர் கடைச்சங்க காலப் புலவர்; பண்டு இலக்கண உரையாசிரியர்கள் இவரைக்கல்லாட மாமூலர் என்று கூறுவர். இவர் பாடிய பாடல்கள் அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை முதலிய நூல்களில் காணப்படுகின்றன.



## மாறோக்கத்து நப்பசலையார்

**நாடு:**—கொற்கை நகரைச் சூழ்ந்த நாடு. மாறோக்கம் என்பர்; 'மாறோகம்' என்றுங் கூறுவர்.

நப்பசலையார் ஓர் பெண்பாற் புலவர்; 'பசலை' என்பது கணவனைப் பிரிந்த மகளிர்க்கு உடலில் தோன்றும் வேறுபாட்டு நிறம். அவ்வாறான நிறத்தைப் பற்றிப் பலபடியாகச் சிறப்பித்துப் பாடியதாலோ, பசலை என்ற ஓர் ஊரிலிருந்து தோன்றியதாலோ இவர் 'பசலையார்' எனப்பட்டார். ஒழுக்கம், புலமை முதலியவற்றாற் சிறப்புற்று விளங்கியதால், நப்பசலையார் எனப்பெற்றார். இவர் சான்றோர் குழுவில் பெருமதிப்பு பெற்றவர். இவரது இயற் பெயர் தெரிந்திலது. இவர் பாண்டி நாட்டுப் புலவர்.

**இவர் பாடிய செய்யுட்கள்:**

1. *நற்றிணையில்* 1.
2. *புறத்தில்* 7.



## மீனாட்சிசுந்தரம் பிள்ளை *[திரிசிரபுரம்]*

இவர் திருவாவடுதுறை யாதீனத்தைச் சார்ந்தவர்; உ. வே. சாமிநாதய்யரின் ஆசிரியர்; வல்லூர் தேவராசப் பிள்ளை அவர்களால் இயற்றப்பட்ட குசேலோபாக்கியானம், இவரால்தான் முதன் முதல் இயற்றப்பட்டதென்பர். தனிப் பாடல்களைப் பாடியவர்; சேக்கிழாரைப் புகழ்ந்து பாடியவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. *சேக்கிழார் பிள்ளைத் தமிழ்.*
2. *திருநாகைக் காரோணப் புராணம்.*

## மீனாட்சிசுந்தரம் பிள்ளை, தெ. பொ.

இவர் இதுபோழ்து சென்னை மாநிலக் கல்லூரியில் சொற்பொழிவாளராகப் பணியாற்றி வருகிறார். இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராய்ப் பணியாற்றியவர்; பண்டை இலக்கியங்களில் ஆழ்ந்த ஆராய்ச்சிப் புலமை உடையவர்; இவர் பல பட்டங்களைப் பெற்றவர்; பன்மொழிப் புலவர்; ஒரு புலவர் கல்லூரியை நிறுவி யுள்ளார். சிறந்த தமிழ் இலக்கிய ஆராய்ச்சியாளர்; பல தமிழ் அறிஞர்களுக்கு உண்டாகும் ஐயங்களை நீக்கும் அறிவுக் களஞ்சியமாக விளங்குகின்றார் இவர்.



## முடத்தாமக் கண்ணியார்

இவர் ஒரு பெண்பாற் புலவர்; கரிகால் வளவனைப் பாடியுள்ளார்; அதனால் கரிகாலனுடைய நாடு, வளம், வீரம், கொடை முதலியவற்றை அறியலாம்.



## முரஞ்சியூர் முடிநாகராயர்

இவர் சேரவரசனாகிய பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் என்ற சிறந்த கொடையாளியைப் பாடி யுள்ளார். முடிநாகராயர் என்பதற்கு முடியையுடைய நாகர் குலத்தின் தலைவர் என்று பொருள்கொண்டு, நாகர் என்ற

பழங்குடிகளின் தலைவருள் ஒருவராவர் என்று கூறுவாருமுளர். இதற்கு ஆதாரம் சங்க நூல்களில் இல்லை.



## முனைப்பாடியார்

இவர் தென்னாற்காடு மாவட்டத்தைச் சார்ந்த முனைப்பாடி என்னும் ஊரினர்; அறநெறிச் சாரத்தின் ஆசிரியர். இவர் சைன சமயப் புலவர். இவர் காலம் கி. பி. 12-ம் நூற்றாண்டென்பர் ஒரு சாரார்; மற்றொரு சாரார் பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவர் என்று கூறுகின்றனர்.



## முன்றுறையரையனார்

இவர் முன்றுறை என்னும் ஊரையாண்ட சிற்றரசர் என்று கூறுவர். இவர் சமணப் புலவர். இவரது காலம் 1800 ஆண்டுகட்கு முன்; பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகிய பழமொழி என்னும் நூலின் ஆசிரியர். அந்நூல் 400 வெண்பாக்களை உடையது. ஒவ்வொரு வெண்பாவின் ஈற்றிலும் ஓர் பழமொழியைக் காணலாம்.



## மூவாதியார்

இவர் 'ஐந்திணை எழுபது' என்னும் நூலை இயற்றியவர்.

## மோசி கீரனார்

மோசி கீரனார் என்ற புலவர் பாண்டிய நாட்டவரென்று கூறுகின்றனர். இப்புலவரது குடியும், குலமும் இன்னவென விளங்கவில்லை. "மோசி" என்பது ஒருவரது பெயராக இருக்கலாம். கீரனார் பலர் உளராதலால், அவர் தொகுதியிலிருந்து பிரித்தறிய, இக் கீரனார்க்குத் தந்தையார் பெயர் சார்த்தி, மோசியார் மகனார் கீரனார் என்று பொருள் பட மோசிகீரனார் என்று அழைத்திருக்கலாம். இப்புலவர் பாடிய செய்யுட்கள் 10. இவர் சேரன் இரும்பொறையிடம் நிறைந்த மதிப் புடையவர். இவர் அவனைக் காண வந்தார். அவன் முரசத்திற்கு வழிபாடு செய்யும் பொருட்டு வெளியே சென்றிருப்பதை அறிந் தார்; நடைமிகுதியால் சோர்வு உண்டாயிற்று. அருகில் இருந்த முரசு கட்டிலின்மீது ஏறிப் படுத்துறங்கிவிட்டார். சேரன் இதைக் கண்டு வெகுண்டு, வாளேந்தி அதனருகே சென்றான்; படுத்திருந்தவர், புலவர் மோசி என்பதை அறிந்து கவரி கொண்டு வீசினான். புலவர் திடீரென்று விழித்துக்கொண்டு தன் தவற்றை உணர்ந்தார்; சேரனை வாயார வாழ்த்தினார். இவர் கொண்கான நாட்டில் வாழ்ந்த வேளாளர் தலைவனைப் பாடிப் பரிசில்பெற்றார்.

❋

## வடிவேலுச் செட்டியார், கோ.

**பெற்றோர்:**—சுப்பராயச் செட்டியார், தனகோடி அம்மை யார்.
**குலம்:**—வைசியர்.

இவர் சென்னைக் கோமளீஸ்வரன் பேட்டையில் 1863ம் ஆண்டில் தோன்றியவர்.

இவர் சென்னையிலுள்ள தியலாஜிகல் உயர் நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றியவர். இவர் 1919-ல் சென்னையில் வேதாந்த சங்கத்தை நிறுவினார்.



## (டாக்டர் மு.) வரதராசனார், M.A., M.O.L., Ph. D.

இவர் சிறந்த தமிழறிஞர்; தமிழ், ஆங்கிலம் முதலிய மொழிகளில் தேர்ச்சி பெற்றவர்; பன்மொழிப் புலவர். இவர் இதுபோழ்து சென்னைப் பச்சையப்பன் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராக விளங்குகின்றார். சிறந்த எழுத்தாளர். இவருடைய நூல்கள் எளிமையும் இனிமையும் பொருந்தியவை.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. கவிஞர் தாகூர்.
2. கள்ளோ? காவியமோ?
3. அன்னைக்கு.
4. தம்பிக்கு.
5. திருக்குறள் தெளிவுரை.
6. பாவை.
7. மலர் விழி.
8. மணல் வீடு.
9. காந்தி அண்ணல்.
10. எழுத்தின் கதை.
11. மொழி நூல்.

12. கண்ணகி.
13. அரசியல் அலைகள்.
14. நற்றிணை விருந்து.
15. அந்த நாள்.—இன்னும் பல நூல்கள்.



## வரத பண்டிதர்

**நாடு** :—ஈழ நாடு. (யாழ்ப்பாணம்.)
**ஊர்** :—சுண்ணாகம்.
**தந்தை** :—அரங்கநாதையர்.
**குலம்** :—வேதியர்.
**காலம்** :—200—ஆண்டுகட்கு முன்.

இவர் இலக்கண இலக்கியங்களும் சோதிடமும்—வைத்தியமும் கசடறக் கற்றவர்; பாடுவதில் வல்லுநர்; வாழவும் கெடவும் பாட வல்லவர்; அதனால் இவரை 'வரகவி' என்பர்.

**இவர் இயற்றிய நூல்கள்** :

1. சிவராத்திரி புராணம்.
2. ஏகாதசிப் புராணம்.
3. கிள்ளை விடு தூது.
4. அமுதாகரம்.
5. பிள்ளையார் கதை.



## வரதுங்கராம பாண்டியர்

இவர், கரி வலம் வந்த நல்லூரில் செங்கோல் செலுத்தியவர்; பல தமிழ் நூல்களைப் பாடியவர்; அதிவீரராம பாண்டியனுடைய

பெரிய தந்தையாய் ஆட்சி புரிந்த பராக்கிரம பாண்டியனுடைய புதல்வர்; கி. பி. 1588-ல் பட்டமெய்தியவர்; நல்லிசைப் புலமை வாய்ந்த கவியாக விளங்கியவர்; 'பிரமோத்தர காண்டம்' என்ற சீரிய நூலை இயற்றியவர்; இம் மன்னனுடைய தேவியும், சிறந்த தமிழ்ப் புலமை உடையவள் என்று தமிழ் நாவலர் சரிதையால் அறியலாம்.



## வல்லூர் தேவராசப் பிள்ளை

**தந்தை :**—வீராசாமிப் பிள்ளை.

**ஊர் :**—தொண்டை நாட்டிலுள்ள "வல்லூர்".

**மரபு :**—கருணீகர்.

**காலம் :**—19-ம் நூற்றாண்டின் இடைப்பகுதி.

இவர் பாகவதததில் உள்ள குசேலர் சரித்திரத்தையும் தெலுங்கு மொழியில் வரகவி என்பவர் இயற்றிய குசேலோபாக்கியானத்தையும் ஆதாரமாகக் கொண்டு, தமிழில் இந்நூலை 773 பாடல்களால் பாடியுள்ளார். இந்நூல் மூன்று பிரிவுகளையுடையது.



## வன்பரணர்

இவர் பரணருக்குப் பிற்பட்டவர்; சிறந்த புலவர்; இவர் ஓரியையும், கண்டீரக் கோப் பெரு நள்ளியையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடிய பாக்களைப் புறநானூற்றிலும், நற்றிணையிலும் காணலாம்.

## வில்லிபுத்தூராழ்வார்

**நாடு :**—நடுநாடு என்று சொல்லப்படுகின்ற திருமுனைப்பாடி.

**ஊர் :**—சனியூர்.

**தந்தை :**—வீரராகவாச்சாரியார்.

**குலம் :**—அந்தணர்.

**மதம் :**—வைணவம்.

**காலம் :**—14-ம் நூற்றாண்டின் இடைப்பகுதி.

**சமகாலத்தவர் :**—அருணகிரிநாதர்.

இவர் இளமையிலேயே நல்லாசிரியரை யடுத்துக் கல்வி கற்று, முத்தமிழிலும் மிக வல்லவராய் விளங்கினார். இவர் வடமொழியிலும் புலமை வாய்ந்தவர். இவர் வக்கபாகை வரபதியாட்கொண்டான் என்பவரால் ஆதரிக்கப்பட்டார். இவருடைய வேண்டுகோளுக்கிசைந்து, இவர் மகாபாரத சரித்திரத்தைச் செந்தமிழில் விருத்தப் பாடல்களினாற் பாடினார். இவர் தம் காலத்தில் கல்விச் செருக்கு அடைந்திருந்த புலவர்கள் பலரையும், தம் கல்வித் திறத்தால் வென்று, அவ்வெற்றிக்கு அடையாளமாகத் தோற்றுப்போன புலவர்களின் காதுகளைத் தமது கையிலுள்ள துறட்டுக்கோலால் மாட்டியிழுத்து அறுத்து வந்தனரென்ப. "குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியன்" என்னும் பாடலே இதற்குப் போதிய சான்றாம்.

## விளம்பிநாகனார்

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகிய 'நான்மணிக்கடிகை' என்னும் நூலின் ஆசிரியர்; இந்நூல் கடவுள் வாழ்த்துள்பட 101 வெண்பாக்களை உடையது; சிறந்த நீதி நூல்; செய்யுள்தோறும் நான்கு நீதிகளைக் காணலாம்.



## வீரமாமுனிவர்

**பிறப்பிடம் :—** *இத்தாலி.*

**காலம் :—**1680.

**இயற் பெயர் :—** *கான்ஸ்டான்டைன் ஜோசப் பெஸ்கி என்பது.*

இவர் உரோமாபுரியிலே கல்வி கற்று ஏசுவின் சபையிலே சேர்ந்து துறவு பூண்டார்; 1700–ம் ஆண்டில் இந்தியாவுக்கு வந்து, மதுரையில் தங்கினார். மதுரைமா நகரைத் தமது இருப்பிடமாகக் கொண்டு சுப்ரதீபக் கவிராயரிடம் தமிழ் மொழியை நன்கு கற்றார்; தமிழ்ப் புலவரானார்; இவர் தமிழ் நாட்டிற்கேற்ப உடைகளை அணிந்தார். இவர் கம்பரின் கவிகளையும், சிந்தாமணியையும் விரும்பிக் கற்றார். அகராதி எழுதும் முறையைத் தமிழருக்குக் காட்டியவர் இவரே. அது பற்றியே இவரைத் 'தமிழகராதியின் தந்தை' என்று அழைக்கின்றனர். இவர் எழுதிய 'சதுரகராதி' தமிழில் முதல் அகராதியாகும்.

இவர் இயற்றிய நூல்களாவன:

1. சதுரகராதி.
2. தேம்பாவணி.
3. திருக்காவலூர்க் கலம்பகம்.
4. அடைக்கல நாயகி கலம்பகம்.
5. பரமார்த்த குரு கதை.
6. தொன்னூல் விளக்கம்.



## வீரமார்த்தாண்ட தேவர்

இவர் சிறந்த தமிழ்ப் புலவர்; செங்குந்த மரபினர்; இவர் பஞ்சதந்திரக் கதைகளை விருத்தப்பாவினால் பாடியவர்.



## வெண்ணிக் குயத்தியார்

இவர் பெண்பாற் புலவர்; சோழன் கரிகால் பெருவளத்தானைப் பாடியுள்ளார். [புறம். 66.] 'வெண்ணி' என்னும் ஊர் தஞ்சையிலுள்ளது; இது வெண்ணில் என்றும் வழங்கும். 'குயத்தியார்' என்பது இவரது இயற்பெயர். வேட்கோவருள் சிறந்தோர்க்குப் பண்டை நாளில் வேந்தர் குயம் என்னும் பட்டம் தந்து சிறப்பித்தனர். இவர் வேட்கோவருள் சிறந்தவரெனத் தெரிகிறது. (இம்மரபு 10-ம் நூற்றாண்டு வரையில் இருந்திருக்கிறது.)

## வெள்ளி வீதியார்

இவர் பாண்டி நாட்டினர்; மதுரையம் பதியினர்; கடைச்சங்கப் புலவர்களில் ஒருவர் நல்லிசைப் புலமை வாய்ந்த மெல்லியலார். இவர் திருவள்ளுவ மாலையிலும், நற்றிணை குறுந்தொகைகளிலுஞ் சில கவிகள் செய்தவர்.

*

## வெள்ளைக்குடி நாகனார்

சோழ நாட்டிலுள்ள வெள்ளைக்குடி என்னும் ஊரில் நாகனார் தோன்றினார். இவர் அவ்வூரினராதலின், இப் பெயர் பெற்றார்; பொது மக்கட்குக் கேடு உண்டாகும் செயலைச் செய்ய முற்படுங்கால், எவரேயாயினும் அவர்பால் அஞ்சாது சென்று, அன்னவர்க்கு அறவுரைகளை எடுத்துக் கூறித் திருத்துவர். இவர், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்பாற் சென்று பாடிக் குடிகள் செலுத்தக்கடவ, கடனை வீடு பெற்றுச் சென்றார்.

*

## வெற்றிவேலர்

**பிறப்பிடம்:**—சாவகச் சேரியைச் சார்ந்த மீசாலை வடக்குப் பகுதியிலிருந்தவர்.

**தந்தை:**—மாப்பாண முதலியார்.

**சம காலத்தவர்:**—செல்லைநாத முதலியார்.

இவர் இலக்கண இலக்கியங்களில் மிக வல்லுநர்; பாடுந் திறமை மிக்கவர். இவர் இரு குறவஞ்சிகளைப் பாடியுள்ளார்; பாடிப் பரிசும் பெற்றார்.

## வேங்கடசாமி நாட்டார்

இவர் மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர்; ஆழ்ந்த இலக்கிய இலக்கண அறிவு நிரம்பப் பெற்றவர்; அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் விரிவுரை யாளராகப் பணி யாற்றியவர்.

**இவர் இயற்றிய உரை நூல்கள்:**

1. அகநானூறு.
2. திருவிளையாடற் புராணம்.
3. சிலப்பதிகாரம்.



## வேங்கடாசலம் பிள்ளை, அ.

இவர், 'கரந்தைக் கவியரசு' என்று போற்றப் படுகின்றார். இவர் கரந்தையைச் சார்ந்தவர்; மதுரமான பாக்களை இயற்றும் இயல்பினர்; இவர் திருவையாற்று அரசர் கல்லூரியிலும் கரந்தைப் புலவர் கல்லூரியிலும் தமிழ்ப் பேராசிரியராய் விளங்கியவர். இவர் பல நூல்களுக்கு விளக்கவுரை எழுதியுள்ளார்; பல நாடக நூல்களையும் இயற்றியுள்ளார். இவர் 'தமிழ்ப் பொழில்' என்னும் தமிழ்ப் பத்திரிகையின் ஆசிரியர்.



## வேங்கட்ராஜுலு ரெட்டியார், வே.

இவர் திருநெல்வேலியைச் சார்ந்தவர்; பன்மொழிப் புலவர்; சென்னைப் பல்கலைக்

கழகத்தில் தமிழ் விரிவுரையாளராக இருந்து பணியாற்றியவர். இதுபோழ்து, சென்னைக் கடுத்த மயிலாப்பூரில் வாழ்ந்து வருகின்றார்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. திராவிட மொழியின் மூவிடப் பெயர்.
2. கபிலர்.
3. இலக்கணக் கட்டுரைகள்.



## வேதநாயக சாஸ்திரி

இவர் திருநெல்வேலி நகரில் 1774-ம் ஆண்டில் தேவசகாயத்தின் புதல்வராய்த் தோன்றினார்; இளமையிலேயே அன்னையை இழந்தார்; இளமைப் பருவத்தில், இவர் கல்வியைக் கற்க விரும்பாமல் அல்லும் பகலும் விளையாட்டிலேயே காலம் கழித்து வரலானார்; பள்ளியில் சேர்த்தும் பயனில; படிப்பின்மீது நாட்டமில்லை; பிறகு கிறித்துவ சீலராகிய சுவார்த்தர் அருளைப் பெற்றார். சுவார்த்தரின் விருப்பப்படி, வேதநாயகம் தரங்கம்பாடிக் கல்லூரியில் மாணவராய்ச் சேர்ந்து படிக்கலானார். அங்கு வான நூல், வேத நூல் முதலிய அறிவு நூல்களைக் கசடறக் கற்றார். இவரது ஒழுக்கத்தையும், கல்விப் பயிற்சியையும் கண்ட சுவார்த்தர், தஞ்சையில் ஓர் வேதக் கல்லூரியை நிறுவி அதற்கு இவரைத் தலைமை ஆசிரியராக நியமித்தார். அக்காலை தஞ்சையை யாண்ட சரபோஜி மன்னனுக்கு உயிர்த்

தோழராய் இருந்தார்; ஞானதீபக் கவிராயர் என்னும் பட்டத்தையும் பெற்றார்; ஆயிரக் கணக்கான பாடல்களை இயற்றினார். வேத நாயகம், கிறித்துவ வேதாகமங்களின் சாரத் தைப் பாடியமையால் "சாஸ்திரியார்" என்று பாராட்டப்பெற்றார்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. பராபரன் மாலை.
2. ஞான உலா.
3. ஞானக் கும்மி.
4. பேரின்பக் காதல்.
5. பெத்தலேம் குறவஞ்சி.
6. ஞானத்தச்சன் நாடகம்.
7. வண்ண சமுத்திரம்.
8. தியானப் புலம்பல்.
9. அறிவானந்தம்.
10. ஆதியானந்தம்.
11. ஆரணாதிந்தம்.



## வேதநாயகம் பிள்ளை

**ஊர்:**—திருச்சிராப்பள்ளிக்கு அண்மையிலுள்ள குளத்தூர்.

**தாய்:**—ஆரோக்கியமரியம்மாள்.

**தந்தை:**—சவரிமுத்துப் பிள்ளை.

**காலம்:**—1826—1889.

இவர் பன்மொழிப் புலவர். "ஒன்றே குலமும்—ஒருவனே தேவனும்" என்னும் திருமுறைக்கிணங்கப் பொது நோக்கு மிக்குடையவர்; இவர் பதினென்றும் அக்கவைக்குள் தமிழ் நூல்கள் பலவற்றையும் கற்றுத் தேர்ந்தார். இவர் திருச்சிராப்பள்ளி வழக்கு மன்ற மொன்றில் பதிவுப் பொறுப்பாளராக அமர்ந்தார்; பின்னர், மொழி பெயர்ப்பாளர் அலுவலுக்கு உயர்த்தப் பட்டார்; 1857-ம் ஆண்டு தரங்கம்பாடியில் முறை மன்றத் தலைவராய்ப் பணியாற்றினர். இவர் முறையறிந்து ஒழுகும் இயல்பினர்.

**இவர் இயற்றிய நூல்களாவன:**

1. நீதி நூல்.
2. பெண்மதி மாலை.
3. பிரதாப முதலியார் சரித்திரம்.
4. சுகுண சுந்தரி.
5. தேவமாதா அந்தாதி.
6. திருவருள் அந்தாதி.
7. திருவருள் மாலை.
8. சத்தியவேதக் கீர்த்தனை.
9. சருவ சமய சமரசக் கீர்த்தனை.
10. வேத தோத்திர மாலை.
11. சித்தாந்த சங்கிரகம்.
12. பெரியநாயகி அம்மன் பதிகம்.
13. பொம்மைக் கலியாணம்.—முதலியன.

## வைத்தியநாத நாவலர்

**தந்தை :**—வன்மீகநாத தேசிகர்.

**காலம் :**—17-ம் நூற்றாண்டின் இறுதியிலும், 18-ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவர்.

**சமயம் :**—சைவர்.

இப் புலவர் தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த நாகப்பட்டினத்திற்கடுத்த கமலாலய மென்ற திருவாரூரைப் பிறப்பிடமாகக்கொண்டவர். கவி வீரராகவ முதலியார் அவர்களால் புகழப் பெற்றவர்; இவர் இளமையிலேயே பெற்றோர்களை இழந்தனர். அகோர முனிவருடைய ஆதரவிலே கல்வி கற்றார். இவருடைய இலக்கண விளக்கத்தைச் சான்றோர், 'குட்டித் தொல்காப்பியம்' என்று கூறுவர்.

**இவர் இயற்றிய நூல்களாவன :**

1. இலக்கண விளக்கம்.
2. பிரபோத சந்திரோதயம்.
3. மெய்ஞ்ஞான விளக்கம்.



## வைத்தியநாதத் தம்பிரான்

**பிறப்பிடம் :**—அளவெட்டி.

**காலம் :**—நெல்லை—ஞானப்பிரகாச சுவாமி காலத்தவர்.

இவர் வடமொழி, தென்மொழி ஆகிய இரு மொழிகளிலும் புலமை உடையவர்; உடன்பிறந்தார்மீது வெறுப்புற்று, அவ்வூரை விட்டுக் கண்டிக்குச் சென்றார். அங்கு அரசு செய்து கொண்டிருந்த, முத்துச்சாமி மகாராசாவின்மீது ஓர் பிரபந்தம் பாடினார்; பரிசும் விருதும் பெற்றார்; வடமொழியைக் கற்று, அம் மொழியிலுள்ள வியாக்கிரபாத முனிவர் சரிதத்தைப் பெயர்த்துப் புராணமாகப் பாடினர் என்ப.

முற்றிற்று.

# பிற்சேர்க்கை (அநுபந்தம்)

—:*:—

## இலக்கியச் சுருக்கம்

### பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள்

"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி—மாமூலம்
இன்னிலைசொல் காஞ்சியுட னேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு."

**1.** நாலடியார்.

இது, பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று; கடைச்சங்க காலத்தில் தோன்றியது. இதை, "வேளாண் வேதம்" என்றுங் கூறுவர்; நாலடி வெண்பாவினால் ஆகிய நானூறு செய்யுட்களை உடையது; நீதி நூல்களுள் திருக்குறளுக்கு அடுத்தபடியாக வைத்து எண்ணப்படுவது; இந்நூல் திருக்குறளைப் போலவே, அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் முப்பெரும் பிரிவுகளை உடையது; நாற்பது அதிகாரங்களும் அதிகாரத்திற்குப் பத்துப் பாடல்களாக நானூறு பாடல்களும் இதன்கண் காணலாம். ஒவ்வோர் வெண்பாவும், ஒவ்வொரு சைன முனிவரால் பாடப்பெற்றதென்ப. எனவே, இது தொகை நூல். 'ஆர்' விகுதி சேர்த்து நாலடியார் என்று கூறுவதால் இந்நூல் மிக்க பெருமையுடையது. டாக்டர் ஜி. யு. போப் என்னும் ஆங்கிலப் பாதிரியார் இந் நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தியுள்ளார். இந்நூல் பிற்காலத்தில் பதுமனார் என்னும் சைன முனிவரால் தொகுக்கப்பட்டதென்பர்.

**2.** நான்மணிக்கடிகை.

இது பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று; கடைச் சங்க காலத்தில் தோன்றியது; இந் நூலை

இயற்றியவர் விளம்பி நாகனார். இந்நூல் 101 வெண்பாக்களை உடையது; செய்யுள் தோறும் நான்கு அரிய நீதிகளைக் காணலாம். எனவே, இது சிறந்த நீதி நூலாகும். இதை "நான்கு+மணி+கடிகை" = நான்மணிக்கடிகை.—நான்கு வகையான மணிகளை வரிசையாக அமைத்த ஒருவகை ஆபரணம், கண்ணுக்கு இன்பமூட்டுவது போல, இந்நூலின்கண் உள்ள ஒவ்வொரு பாவிலும் கூறப்பட்ட நான்கு கருத்துக்கள், கருத்துக்கு இன்ப மளிப்பனவாம். இந்நூலாசிரியர் ஆரியக் கொள்கை யுடையவர்; உயிர்க் கொலையைக் கடிந்தவர். இதற்கு இந்நூலே போதிய சான்றாகும்.

## 3. கார் நாற்பது.

இது பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. இந் நூலை இயற்றியவர் மதுரைக் கண்ணங் கூத்தனார். கார்காலத்தைப் பற்றிச் சிறப்பித்துக் கூறும் நாற்பது செய்யுட்களை உடையது. இந்நூலில், கார்காலமும், முல்லை நிலமும், அக்காலத்திற்குரிய கருப்பொருள்களையும் விரிவாகக் காணலாம்; வினைமேற் சென்ற தலைவன் விரைவில் வாராமையின், தலைவி பிரிவாற்றாமல் வருந்திக் கூறுவதாக அமைந்துள்ளது—கார்காலத்தில் அவன் வருகையை எதிர் நோக்கியிருத்தல்.

## 4. களவழி நாற்பது.

இது பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. இதை இயற்றியவர் பொய்கையார். இந்நூல் 41 வெண்பாக்களை உடையது; சோழ மன்னனது போர்க்கள வெற்றியை விளக்குகிறது. கணைக்கா லிரும்பொறை என்னும் சேரவரசனை, கோச் செங்கட் சோழன் "கழுமலம்" என்னுமிடத்தில், போரில் வென்றான்; சிறைப்படுத்தினான்; அதுபோழ்து சேரனுடைய உயிர்த் தோழராகிய பொய்கையார், இதைப் பாடி அவனை விடுவித்தனர் என்ப. இதன் கண் நயம் பொருந்திய உவமைகளைக் காணலாம்.

## 5. இன்னா நாற்பது.

இது, பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று; இதைக் கபிலர் இயற்றினர்; நாற்பது செய்யுட்களை உடையது. இன்னாதனவற்றை விளைவிப்பன இன்னதென்று இந்நூல் எடுத்துக் காட்டுகின்றது.

## 6. இனியவை நாற்பது.

இந் நூலை இயற்றியவர் பூதஞ்சேந்தனார்; நாற்பது செய்யுட்களை உடையது; இனிமை பயக்கத்தக்கன இவை எனச் செப்புவது இந்நூல். கபிலரைப் போன்று இவ் வாசிரியரும் மூவரைப் பாடினர். இது பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று.

## 7. ஐந்திணை ஐம்பது.

இதை இயற்றியவர் மாறன் பொறையனார். இந் நூல் ஐம்பது செய்யுட்களை உடையது. இந் நூலின் முதற் பாவில், திருமால், சிவபெருமான், முருகன் ஆகிய மூவர்க் கும் வணக்கம் கூறப்பட்டுள்ளது. களிறு பிடியைக் குளிப் பாட்டுதல், தலைவன் பிரிவாற்றாமையால் தலைவியின் கை வளை கழலுதல், யானை புலிக்கு அஞ்சுதல் முதலியவற்றை இந் நூலில் விரிவாகக் காணலாம்.

## 8. திணை மாலை நூற்றைம்பது.

இந்நூல், மாக்காயனார் மாணாக்கர், கணிமேதாவியரால் இயற்றப்பட்டது; பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று; திணைக்கு முப்பது முப்பது வெண்பாக்களாக நூற்றைம்பது வெண்பாக்களை உடையது.

## 9. திணை மொழி ஐம்பது.

இந் நூலை இயற்றியவர் சாத்தந்தையார் மகனார் கண்ணன் சேந்தனார். திணைக்குப் பத்துப் பாக்களாக ஐம்பது வெண்பாக்களை உடையது இந்நூல்.

குறிஞ்சித்திணை :—அருவியின் அழகு புனைந்துரைக்கப்பட்டுள்ளது.

பாலைத்திணை :—பொருள் வயிற் பிரிவும், உடன் போக்கும், பாலையின் இயற்கையும் கூறப்பட்டுள்ளது.

முல்லைத்திணை :—கருப் பொருள் கூறப்பட்டுள்ளது.

மருதத்திணை :—உரிப் பொருள் கூறப்பட்டுள்ளது.

நெய்தற்றிணை :—தலைவன் வரவைத் தலைவி தோழிக்குக் கூறுவது.

இந்நூல் பதினெண்கீழ்க் கணககு நூல்களுள் ஒன்று.

## 10. ஐந்திணை எழுபது.

இதை இயற்றியவர் மூவாதியார். திணைக்குப் பதினன்கு வெண்பாக்களாக எழுபது வெண்பாக்களை உடையது; பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. இந் நூலுக்குப் பழைய உரையொன்று இருக்கிறது.

## 11. திருக்குறள்.

திரு + குறள் = திருக்குறள்.—அழகிய ஈரடி வெண்பாவினால் ஆகிய நூல். இது பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. அறத்துப் பால், பொருட் பால், காமத்துப் பால் என மூன்று பெரும் பிரிவுகளை உடையது; 133 அதிகாரங்களை உடையது. 1330 குறட் பாக்களை உடையது. இதை, 'முப்பால்' என்றுங் கூறுவர்; உலகிலுள்ள மொழி நூல்களில் ஒப்புயர்வற்றது; பல மொழிகளில் இந்நூலை மொழி பெயர்த்துள்ளனர். திருக்குறளுக்கு, முப்பானூல், உத்தரவேதம், தெய்வநூல், வள்ளுவர், பொய்யாமொழி, வாயுறை வாழ்த்து, பொது மறை, தமிழ் மறை எனப் பல பெயர்களுண்டு. எல்லாப் புலவர்களாலும் எடுத்தாளும் பெருமை பெற்றது. இடைக்காடர், அவ்வையார், பாரதியார் முதலியோர் இந்நூலின் சிறப்பைப் பாராட்டியுள்ளனர்.

"கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்" —இடைக்காடர்.

"அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்" —ஔவையார்.

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு" —பாரதியார்.

## 12. திரிகடுகம்.

இந் நூலை இயற்றியவர் நல்லாதனார். திரிகடுகம்—சுக்கு, மிளகு, திப்பிலி—மூன்று காரமான பொருள்கள். இம்மூன்றும் கலந்த மருந்து உடலுக்குற்ற நோயைப் போக்கி நன்மையைப் பயப்பது போல, இந் நூலிலுள்ள ஒவ்வொரு வெண்பாவிலும் சொல்லப்பட்ட மும்மூன்று கருத்துக்கள், உயிருக்குற்ற நோயாகிய அறியாமையைப் போக்கும் மருந்தாய் உதவுதலின், இந் நூலுக்கு இப்பெயர் வழங்குகின்றது.

இந் நூல் பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று; கடைச் சங்க காலத்தைச் சார்ந்தது. இவ்வாசிரியர் திருமால் வழிபாட்டினர். இதற்கு இந் நூலே போதிய சான்றும். ஒழுக்கத்தைப்பற்றிக் கூறும் பல பாக்களை இந் நூலில் காணலாம்.

## 13. ஆசாரக் கோவை.

இந் நூலை இயற்றியவர் பெருவாயின் முள்ளியார். இது பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. 101 பாடல்களை உடையது; ஒழுக்கத்தின் விதியை உணர்த்துகின்றது; இந் நூல் மணிவாசகர் காலத்திற்குப் பிற்பட்ட தென்பர். இந் நூலின்கண், ஆரியக் கருத்துக்களைக் காணலாம். நீராடல், உண்டல், வழிபடுதல், மறையோதுதல் முதலிய விதிகளைத் தெளிவாக விளக்குகின்றது.

## 14. பழமொழி.

இதை இயற்றியவர் முன்றுறையரையனார். இவர் சைன சமயத்தினர். இந்நூல் நானூறு வெண்பாக்களை உடையது; பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வொரு பழமொழியைக் காணலாம். பழமொழிகளை அமைத்துப் பாடப்பட்ட நூல்களில், இதுவே முதன்மையானது. இவர், இந்நூலில் எடுத்தாண்டுள்ள பழமொழிகளால் அக்காலப் பழக்க வழக்கங்கள், கல்வி, ஒழுக்கம், நாகரிகம், நட்பு, அரசியல், இல் வாழ்க்கை முதலியனவற்றை நன்கு அறியலாம்.

## 15. சிறு பஞ்ச மூலம்.

இது, பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. இதை இயற்றியவர் காரியாசான். இவர் சமண சமயத்தினர். இந்நூல் 104 வெண்பாக்களை உடையது. சிறு பஞ்ச மூலமாவன:—1. கண்டங்கத்திரி வேர். 2. சிறு வழுதுணை வேர். 3. சிறுமல்லி வேர். 4. நெருஞ்சில் வேர். 5. பெருமல்லி வேர். ஒவ்வொரு வெண்பாவிலும் ஐந்து நீதிகளைக் காணலாம்.

## 16. இன்னிலை.

இந்நூலைப் பாடியவர் பொய்கையார்; மதுரையாசிரியர் பூதனார் தொகுத்தார். இந்நூலிலுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல், பாரதம் பாடிய பெருந்தேவனாரால் பாடப்பட்டது. இந்நூல் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கினையும் விளக்குகின்றது. (அறம்-10, பொருள்-9, இன்பம் 12, வீடு-14. ஆக 45 பாடல்களை உடையது.)

## 17. முதுமொழிக் காஞ்சி.

கூடலூர் கிழார் இதை இயற்றினார். பத்து முதுமொழிகள் அடங்கிய பத்துப் பகுதிகளை உடையது

இந்நூல்; காஞ்சித் திணைப் பொருளை விளக்குகின்றது. மக்கட்கு, கல்வியைக் காட்டிலும் ஒழுக்கம் சிறந்ததென்று கூறியுள்ளார் இந் நூலாசிரியர்; அரிய கருத்துக்களை எடுத்துக் காட்டுகின்றது; குறட் டாழிசையால் பாடப்பட்டுள்ளது; நூறு செய்யுட்களை உடையது; பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று.

## 18. ஏலாதி.

இந் நூல், பதினெண்கீழ்க் கணக்கைச் சார்ந்தது; 81 பாடல்களையுடையது; இதை, 'கணி மேதாவியார்' இயற்றினர். இவர் சைனர். ஏலம், இலவங்கம், சிறு நாவற்பூ, மிளகு, திப்பிலி, சுக்கு இவ்வாறும் கலந்த தூள், உடலுக்கு நன்மை விளைத்தல் போன்று, இந் நூல் ஆறு நீதிகளைப் புகட்டி நன்மை பயப்பதனால் இதற்கு 'ஏலாதி' என்று பெயரிட்டனர். வடமொழிப் பெயர்களை இந்நூலில் காணலாம். இவரைச் சமணர் என்று ஒரு சாரார் கூறுவர். இவரும், வள்ளுவரைப் போல், "கொல்லாமையை" மக்களுக்கு எடுத்துக் கூறியுள்ளார்.



கைந்நிலை.

இது, பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று என்பர். இதற்கு உரை நூல் இல்லை.

## எட்டுத் தொகை நூல்கள்

'நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் சொல்லுங் கலியோ டகம் புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை."

ஆறும் பத்து:

ஆடுகோட்பாடு சேரலாதனைக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடினர்.

ஏழாம் பத்து:

செல்வக் கடுங்கோவாழியாதனைக் கபிலர் பாடினர்; பாடி நூறாயிரம் காணமும், அவன் மலைமீது ஏறிக்கொண்டு அவன் அளித்த நாட்டினையும் பரிசிலாகப் பெற்றார்.

எட்டாம் பத்து:

தகடூரெறிந்த பெருஞ்சேர லிரும்பொறையை அரிசில் கிழார் பாடினர்; பாடி ஒன்பது நூறாயிரம் காணம் பரிசில் பெற்றார்.

ஒன்பதாம் பத்து:

குடக்கோ இளஞ்சேர லிரும்பொறையைப் பெருங் குன்றூர் கிழார் பாடினர்; பாடி முப்பத்தீராயிரம் காணம் பரிசிலாகப் பெற்றார்.

இந்நூற்கு ஓர் பழைய உரை நூல் உள்ளது; எழுதியவர் இன்னாரெனத் தெரியவில்லை. டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் இவ்வுரையை அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

5. பரிபாடல்:

எட்டுத் தொகையுள் ஐந்தாவது; எழுபது பாடல்களை உடையது. இது அகத்திணை புறத்திணை இலக்கியம்; பல புலவர்களால் பாடப்பட்டது. இந்நூற்குப் பழைய உரையொன்று இருக்கிறது; அதைப் பரிமேலழகர் இயற்றினர் என்ப.

பரிபாடலென்பது இசைப்பா வெனவும், பரிந்த பாட்டெனவும் ஒரு வெண்பாவாகி வருதலின்றித்தரவு கொச்சகம், அராகம், ஆசிரியம், பேரெண், சுரிதகம், தனிச்

சொல் என்னும் பல உறுப்புக்களோடு தொடர்ந்து ஒரு பாட்டாகி முற்றுப் பெறுவது எனவும் கூறுவர்.

## 6. கலித் தொகை:

எட்டுத் தொகை நூல்களுள் ஒன்று; அகப் பொருளைப் பற்றிக் கூறுவது; நூற்றைம்பது கலிப்பாக்களை உடையது. இத் தொகை நூலுக்கு நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார்; மிகச் சிறந்த உரை நூல்; இதனை நல்லந்துவனார் இயற்றினார் என்ப. இத் தொகை நூலின் இறுதியில் "பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என இம் முறையே கோத்தார் நல்லந்துவனார்" என்று இருப்பதே இதற்குப் போதிய சான்றாம். கலித்தொகை ஆசிரியர்கள் இன்னாரென்பதைக் கீழ்க்கண்ட பாடலால் அறியலாம்.

"பெருங் கடுங்கோன் பாலை குறிஞ்சி கபிலன்
மருதனிள நாகன் மருதம்—அருஞ்சோழ
னல்லுருத் திரன் முல்லை நல்லந்துவ னெய்தல்
கல்வி வலார் கண்ட கலி."

## 7. அகநானூறு:

இது எட்டுத் தொகை நூல்களுள் ஒன்று; இதற்கு 'நெடுந் தொகை' என்னும் பெயர். இத்தொகை நூல், மதுரை உப்பூரிகுடி கிழார் மகனார் உருத்திரசன்மரால் தொகுக்கப்பட்டது. இத் தொகை நூல் மூன்று பகுதிகளை உடையது.

அவையாவன:

1. களிற்றியானை நிரை.
2. மணி மிடை பவளம்.
3. நித்திலக் கோவை.

அகத்தைப்பற்றிக் கூறும் நானூறு பாக்களின் தொகுதியாகும்; முதல் தொண்ணூறு பாக்களுக்குப்

பழைய உரை இருக்கிறது. இந்நூலின்கண் பண்டைக்கால வழக்கங்களும், வரலாற்றுக் குறிப்புக்களும் இயற்கை வருணனைகளும், புள் நிமித்தமும், முருக வழிபாடும் காணலாம். 145 சங்கப் புலவர்களால் பாடப்பட்டது இந்நூல்.

## 8. புறநானூறு :

இது எட்டுத் தொகை நூல்களுள் ஒன்று; புறப்பொருளைப் பற்றிக் கூறும் புறப்பொருள் இலக்கியம். புறம்+நானூறு=புறநானூறு. புறத்தைப் பற்றிக் கூறும் நானூறு செய்யுட்களை உடையது. இது தொகை நூல். இந்நூலின்கண்ணுள்ள செய்யுட்கள் பல்வேறு காலங்களில் வாழ்ந்திருந்த பல்வேறு புலவர்களால் பாடப்பட்டது. தொகுத்தவர் இன்னாரென அறுதியிட்டுக் கூறுவதற்குப் போதிய ஆதாரமில்லை. இந்நூல் கி. பி. 2-ம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்டதென்பர். இத்தொகை நூலைப் புறமென்றும், புறப்பாட்டென்றும் கூறுவர்.

இந் நூல் தமிழருக்குச் சிறந்த கருவூலமாக அமைந்துள்ளது. பண்டைக் காலத் தமிழருடைய நாகரிகம், அரசியல், போர்த்திறம், பண்பாடு, கல்வி, கொடை, வாணிபம், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைத் தெளிவாக விளக்கவல்லது; கடையெழு வள்ளல்களின் வரலாற்றைப் பற்றி அறிந்து கொள்வதற்கு இந்நூல் பெரிதும் பயன்படுகின்றது.

"முருகு பொருநாறு, பாணிரண்டு, முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோல நெடுநல்வாடை, கோல்குறிஞ்சி, பட்டினப்
பாலை, கடாத் தொடும் பத்து."

இதில் அடங்கிய நூல்களாவன :

1. திருமுருகாற்றுப்படை.
2. பொருநராற்றுப்படை.
3. சிறுபாணாற்றுப்படை.
4. பெரும்பாணாற்றுப்படை.

5. முல்லைப் பாட்டு.
6. மதுரைக்காஞ்சி.
7. நெடுநல்வாடை.
8. குறிஞ்சிப் பாட்டு.
9. பட்டினப்பாலை.
10. மலைபடுகடாம்.

திருமுருகாற்றுப்படை:

பத்துப்பாட்டினுள் ஒன்று; இதை இயற்றியவர் நக்கீரர். இதைப் 'புலவராற்றுப்படை' என்பர். முருகக் கடவுளது அருளைப் பெற விரும்புகின்றவர்கள் இதை மனப்பாடஞ் செய்து வழிபடுவர். வீடுபேறு அடைவதற்குரிய வழியைக் கூறுவது இந்நூல்.

பொருநராற்றுப்படை:

இது பத்துப் பாட்டினுள் ஒன்று; பொருநர்+ஆற்றுப் படை=பொருநராற்றுப்படை. பொருநர், ஏர்க் களம் பாடுநர், போர்க்களம் பாடுநர், பரணி பாடுநர் எனப் பலராவர். இது "பொருநா" றெனவும் வழங்கப்படும். சோழன் கரிகாற் பெருவளத்தானை முடத்தாமக் கண்ணியார் பாடியது. பொருநர்–குறிஞ்சித் தலைவன்; களம் பாடுவோன்; ஈண்டு போர்க்களம் பாடுவோரைக் குறிக்கும்.

சிறுபாணாற்றுப் படை:

பத்துப் பாட்டினுள் ஒன்று; 'பாணர்' என்பதற்குப் பாடுவோர் எனப் பொருள். அவர் சிறுபாணர், பெரும் பாணர் என இரு வகையினராவர். இப்பகுதி கடையெழு வள்ளல்களின் கொடைத் தன்மையைத் தெளிவாக எடுத்துரைக்கின்றது. எறுமா நாட்டு நல்லியக் கோடனை இடைகழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது இப்பகுதியே.

பெரும்பாணாற்றுப் படை:

பத்துப் பாட்டினுள் ஒன்று; கடியலூர் உருத்திரங் கண்ணனார், தொண்டைமான் இளந்திரையனைப் பாடி

யுள்ளார் ; காஞ்சிமாநகரில் ஆட்சி செய்த இளந்திரையனைப் பற்றிக் கூறுகிறது. கிள்ளி வளவன் என்னும் சோழ அரச னுக்கும் சாவகத் தீவு அரசன் மகளாகிய பீலிவளை என்பவ ளுக்கும் தோன்றியவனே இவன். பீலிவளை தான் பெற்ற மகவை கம்பளச் செட்டி வசம் வளவனுக்கு அனுப்பி வைத்தாள். அக் குழவி ஏறி வந்த மரக்கலம் கடலில் மூழ்கியது. கிள்ளி வளவன் அதை அறிந்தான்; மிகவும் வருந்தினன்.

அவ்வமயம் ஒரு மகவை கடற்றிரை கொண்டு வந்து ஒதுக்கியதாகச் சிலர் கூறி, அவனிடம் ஒப்படைத்தனர். அவன் அக் குழந்தையை அன்புடன் ஏற்று, பின்னர், அவனைக் காஞ்சியம்பதிக்கு அரசனாக்கினன் என்ப. இதற் குப் போதிய ஆதாரங்கள் உள்ளன. இளமைப் பருவத்தில் இவனைத் திரை கொண்டுவந்து சேர்த்தமையால் 'இளந் திரையன்' என்றும், பீலிவளை இவனைத் தொண்டைக்கொடி யில் வைத்து அனுப்பியதால் 'தொண்டைமான்' என்றும் அழைப்பர்.

## முல்லைப் பாட்டு :

இது, பத்துப் பாட்டினுள் ஒன்று. இதை நப்பூதனர் பாடினர். தலைவனைப் பிரிந்து தனித்திருக்கும் தலைவியின் நிலைமையைத் தெளிவாக எடுத்துரைக்கின்றது இந்நூல். இதற்கு நச்சினர்க்கினியர் ஓர் உரை வகுத்துள்ளார்.

## மதுரைக் காஞ்சி :

பத்துப் பாட்டினுள் ஆருவது ; 782 அடிகளை உடையது; அகவற் பாவால் பாடப்பட்டுள்ளது. தலையாலங் கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பற்றி மாங்குடி மருதனர் சிறப்பித்துப் பாடியது. "மதுரை யிடத்து அரசர்க்குக் கூறிய காஞ்சி" யென்று நச்சினர்க் கினியர் கொண்ட பொருள் ; பன்னிரு படலத்தில் கூறும் பொருள் வேறு.

## நெடுநல்வாடை:

பத்துப் பாட்டினுள் ஒன்று; இதைப் பாடியவர், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர்; அகவற் பாக்களால் பாடப்பட்டுள்ளது. தலைவனுக்கு வாகைத் திணையையும் தலைவிக்குப் பாலைத் திணையையும் உணர்த்துவது இப்பகுதி.

## குறிஞ்சிப் பாட்டு:

பத்துப் பாட்டினுள் ஒன்று; இதைப் பாடியவர் கபிலர். இதைப் 'பெருங்குறிஞ்சி' என்றும் அழைப்பர். குறிஞ்சி, புணர்ச்சி-இவை ஒரு பொருளையே உணர்த்தும். ஆரிய அரசன் பிரகத்தனைத் தமிழ் அறிவுறுத்தற்குக் கபிலர் இதைப் பாடினார். இப்பாட்டு மலைவளங்களையும் இல்லறத்தையும் உணர்த்துகின்றது.

## பட்டினப்பாலை:

இது பத்துப் பாட்டினுள் ஒன்று; கடியலூர் உருத்திரங் கண்ணனார், சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பாடிய பகுதியாகும்; இது பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத் திணையாகும். இப்பாட்டைக் கேட்டு மகிழ்வெய்திய சோழன் கரிகாற் பெருவளத்தான், உருத்திரங் கண்ணனாருக்குப் பதினாறு நூறாயிரம் பொன்னைப் பரிசாக வழங்கினான்.

## மலைபடுகடாம்:

பத்துப் பாட்டினுள் ஒன்று; இரணிய முட்டத்துப் பெருங் குன்றூர்ப் பெருங் கௌசிகனார் பாடியது. இதைக் '**கூத்தராற்றுப் படை**' என்றும் அழைப்பர். இதற்கு நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார். மலைக்கு யானையை உவமித்துள்ளார். அதன்கண் தோன்றிய ஓசையைக் கடாமெனச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. எனவே இது, "மலைபடுகடாம்" ஆயிற்று என்பர்.—(கூத்தரை நன்னன் பால் ஆற்றுப்படுத்தியது—கூத்தராற்றுப்படை).

# ஐம்பெருங் காப்பியம்

---

சிலப்பதிகாரம்:

இது ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்று. இதனைத் தொடர்நிலைச் செய்யுள் என்றுங் கூறுவர். சிலம்பு+அதிகாரம்=சிலப்பதிகாரம்.—சிலம்பால் விளைந்த வரலாற்றைக் கூறுவது என்பது இதன் பொருள். முத்தமிழ்க் காப்பியம், உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்றும் இதனை வழங்குவர். இது சங்க காலத்துத் தோன்றிய நூல். இந்நூல் மிக்க பழமையுடையது; இந்நூல் மூன்று காண்டங்களை உடையது. அவையாவன:—

1. புகார்க் காண்டம்.
2. மதுரைக் காண்டம்.
3. வஞ்சிக் காண்டம்.

இந்நூற்கு அரும்பதவுரை யொன்றுளது. அதை எழுதியவர் இன்னாரென அறுதியிட்டுக் கூறுவதற்கில்லை. இவ்வுரையை ஆதாரமாகக் கொண்டுதான் 'அடியார்க்கு நல்லார்' ஓர் அரும்பதவுரை எழுதியிருப்பதாகத் தெரிகிறது.

இந்நூல் மூன்று அரிய நீதிகளை உணர்த்துகின்றது. அவையாவன:—

1. நீதி தவறிய மன்னனை அறக்கடவுள் கொல்லும்.
2. கற்பிற் சிறந்த மகளிரை உயர்ந்தோர் போற்றுவர்.
3. ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும்.

வரலாற்று ஆராய்ச்சிக்கு இக் காப்பியம் உறுதுணை செய்யும். "நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்" என்னும் தொடரே, இந்நூலின் பெருமையை விளக்கவல்லது.

சீவக சிந்தாமணி:

ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்று. இதை இயற்றியவர் திருத்தக்கதேவர். இந்நூல், சீவகனது திருமணப் பெருங் கதையை விளக்குகின்றது; விருத்தப் பாக்களால் ஆனது; ஒன்பதாம் நூற்றாண்டின் முற் பகுதியில் இந் நூல் தோன்றிய தென்பர்; அந் நூற்றாண்டின் இறுதியில் எழுந்ததென்றும் கூறுவர். மற்றொரு சாரார், பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியே என்பர். இந்நூலில் 3000 மேற்பட்ட பாடல்களைக் காணலாம்; பதின்மூன்று இலம்பகங்களை உடையது. இந் நூலாசிரியர் 2700 பாடல்களை மட்டும் இயற்றியனவாக நச்சினார்க்கினியர் கூறியுள்ளார். இதற்கு நச்சினார்க்கினியர் ஓர் உரை வகுத்துள்ளார். இதில் அடங்கியுள்ள இலம்பகங்களாவன:—

1. நாமகளிலம்பகம்.
2. கோவிந்தையாரிலம்பகம்.
3. காந்தருவ தத்தையாரிலம்பகம்.
4. குணமாலையாரிலம்பகம்.
5. பதுமையாரிலம்பகம்.
6. கேமசரியிலம்பகம்.
7. கனகமாலையாரிலம்பகம்.
8. விமலையாரிலம்பகம்.
9. சுரமஞ்சரியாரிலம்பகம்.
10. மண்மகளிலம்பகம்.
11. பூமகளிலம்பகம்.
12. இலக்கணையிலம்பகம்.
13. முத்தியிலம்பகம்.

மணிமேகலை:

இது ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று; இந்நூல் 'மணிமேகலை துறவு' என்றும் வழங்கப் பெறும். ஐம் பெருங் காப்பிய வரிசையில் இதுவே முதலில் இயற்றப் பட்டது. உரையாசிரியர்களால் பலவிடங்களில் இந்நூலின்

அடிகளை எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இந்நூல் சொற்சுவை பொருட்சுவை உடையது; பௌத்த சமயச் சார்புடையது. மணிமேகலையின் வரலாற்றைக் கூறுவதால் இந்நூல் இப்பெயர் பெற்றதென்பர். [கோவலனுக்கு மாதவியினிடத்துத் தோன்றிய மகளே, மணிமேகலை.]

### குண்டலகேசி:

இஃது, ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று; குண்டலகேசி என்னும் பெயரையுடைய ஒரு வணிக கன்னிகையின் கதையே யாகும். இஃதோர் பௌத்த காவியம். பல சமயங்களை வென்று புத்த சமயத்தை நிலை நிறுத்தினதைத் தெரிவிக்கின்றது. இந்நூல், தமிழ் நாட்டில் பௌத்த மதம் ஓங்கியிருந்த காலத்து இயற்றப்பட்டதென்று கூறலாம்.

### வளையாபதி:

இது, ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று. இஃதோர் சைன காவியம். இந்நூல் சிந்தாமணிக்கு முற்பட்டதென்பர்.

### அரிச்சந்திர புராணம்:

இது விருத்தப்பாவால் இயற்றப்பட்டது. நல்லூர் வீர கவிராயர் இந்நூலை தமிழில் இயற்றினர். இது 1215 பாடல்களை உடையது.

### இலிங்க புராணம்:

இது பதினெண் மகாபுராணங்களுள் ஒன்று. இதை இயற்றியவர் அதிவீர ராம பாண்டியர். சிவர்களுடைய சீலம் முதலியவற்றை விரிவாக எடுத்துரைக்கும் நூல்.

### காஞ்சி புராணம்:

இது இரண்டு காண்டங்களை உடையது; 4851 செய்யுட்களை உடையது. முதற் காண்டம் சிவஞான முனிவரால் இயற்றப்பட்டது; இரண்டாங் காண்டம்

கச்சியப்பரால் இயற்றப்பட்டது. காஞ்சிமா நகரின் மகிமையை (சிறப்பினை) விரிவாக எடுத்துரைக்கின்றது.

## காந்த புராணம் :

இது, பதினெண் மகாபுராணங்களுள் ஒன்று; கந்த மூர்த்தி தோற்றம், தத்புருஷ கற்பத்தில் நிகழ்ந்தவை, சூரர்களின் ஒடுக்கம் ஆகியவற்றை விரிவாக எடுத்துரைக்கின்றது. இப் புராணத்திலுள்ள சங்கர சங்கிதையைத் தமிழில் மொழி பெயர்த்தியவர், கச்சியப்ப சிவாசாரியார்.

## கோயிற் புராணம் :

இது சிதம்பர மகிமையைக் கூறும் நூல்; உமாபதி சிவாச்சாரியரால் இயற்றப்பட்டது.

## திருக்காளத்தி புராணம் :

இதை இயற்றியவர் கருணைப் பிரகாச தேசிகர். திருக் காளத்தியின் மகிமையை விளக்குவது இந்நூல்.

## திருவிளையாடற் புராணம் :

இதைப் பரஞ்சோதி முனிவர் இயற்றினார். மதுரையம் பதியில் சொக்கநாதர் செய்த 64 திருவிளையாடல்களைக் கூறுகின்றது. 3363 செய்யுட்களை உடையது; மூன்று காண்டங்களை உடையது; அவையாவன :—

1. மதுரைக் காண்டம்.
2. கூடற் காண்டம்.
3. திருவாலவாய்க் காண்டம்.

## பெரிய புராணம் :

இது சிவனடியார்களின் சிறப்பை விளக்குவது; இதை இயற்றியவர் சேக்கிழார்; பாடல்கள் விருத்தப் பாக்களால்

ஆனவை. சுந்தர மூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த திருத் தொண்டத் தொகையையும், நம்பியாண்டார் நம்பி அருளிச் செய்த திருவந்தாதியையும் ஆதாரமாகக் கொண்டு சேக்கிழார் இந்நூலை இயற்றியருளினார்; இந் நூற்குத் திருத்தொண்டர் புராணம் என்னும் வேறு பெயரு முண்டு. செயற்கரிய செயல்களைச் செய்த பெரியார்களின் வரலாற்றை விரித்துக் கூறுவதால் பெரியபுராண மெனப் பட்டது.

கலிங்கத்துப் பரணி:

கலிங்க நாட்டில் நிகழ்ந்த போரையும், வெற்றியையும் கூறும் பரணியாதலின் இது இப்பெயர் பெற்றது.

போர்க்களத்தில் ஆயிரம் ஆண் யானைகளைக் கொன்ற தலைவனைப் புகழ்ந்து பாடுவது; இது தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. இந் நூல் பதின்மூன்று பகுதிகளை உடையது. அவையாவன:—

1. கடவுள் வாழ்த்து.
2. கடை திறப்பு.
3. காடு பாடியது.
4. பேய்களைப் பாடியது.
5. கோயில் பாடியது.
6. தேவியைப் பாடியது.
7. இந்திர சாலம்.
8. இராச பாரம்பரியம்.
9. பேய் முறைப்பாடு.
10. அவதாரம்.
11. காளிக்குக் கூளி கூறியது.
12. போர் பாடியது.
13. களம் பாடியது.

இதை இயற்றியவர் சயங்கொண்டார். பாடல்கள் கலித்தாழிசையால் ஆகியவை.

பரணி நாளில் பேய்கள் நிணக்கூழ் சமைத்துக் காளியை வழிபட்டு உண்டு மகிழ்வதால் பரணி எனப் பெயர் பெற்றதென்பர். பரணி பாடுவோர், அரசன் வேல், வாள் முதலியவற்றால் அமைத்த பரண்மேலிருந்து பாடுதல் மரபாதலின் இப் பெயர் பெற்றதென்றும் சிலர் கூறுவர்.

## முத்தொள்ளாயிரம்:

முடியுடை வேந்தராகிய சேர சோழ பாண்டிய மன்னர்களைப் பற்றித் தொள்ளாயிரம் பாடல்களால் பாடப் பட்ட நூலாதலின் இஃது இப்பெயர் பெற்றது. அவர்கள் ஒவ்வொருவரைப் பற்றியும் தனித்தனியே தொள்ளாயிரம் பாடல்களால் பாடப் பட்டமையின் இப் பெயர் பெற்ற தெனவும் கூறுவர். மூன்று+தொள்ளாயிரம்=முத்தொள் ளாயிரம். இதுபோழ்து கிடைத்துள்ள பாடல்கள் நூற் றெட்டே.

முடியுடை வேந்தர்களின் செய்திகளைப் பற்றி இதில் விரிவாகக் காணலாம். அவ்வரசர்களுடைய நாடு, அரண் படைச் சிறப்பு, போர்த்திறம், வெற்றி, ஈகைச் சிறப்பு போன்ற அரிய பண்புகளை இந்நூல் தெளிவாக விளக்கு கிறது. பழந்தமிழர் பண்பாடு, பழக்க வழக்கங்கள் முதலிய வற்றை நாம் இந் நூலின் வாயிலாக அறியலாம்.

## மனோன்மணீயம்:

இயற்றியவர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை. பாண்டிய நாட்டு அரசனாகிய சீவக வழுதியின் மகள் மனோன்மணி. அவள் வரலாற்றைக் கூறும் நூலாதலின் இஃது இப் பெயர் பெற்றது. மனோன்மணியைப் பற்றிக் கூறும் நூல் மனோன்மணீய மாதலின், இதை 'தத்திதாந்த நாமம்' என்று வட நூலார் கூறுவர்.

## குசேலோபாக்கியானம்:

குசேலருடைய வரலாற்றைக் கூறும் நூல். குசேல+ உபாக்கியானம் = குசேலோபாக்கியானம். குசேலன் — பொலிவில்லாத ஆடையை அணிந்தவன் என்பது பொருள்.

உபாக்கியானம் — கிளைக்கதை. இந்நூல் சொற்சுவை பொருட் சுவை மிக்கது; எளிய நடையில் உள்ளது; இந்நூல் மூன்று பெரும் பிரிவுகளை உடையது. அவையாவன:

1. குசேலர் மேல்கட லடைந்த அத்தியாயம்.
2. குசேலர் தன் நகர்ப்புறமடைந்த அத்தியாயம்.
3. குசேலர் வைகுந்தமடைந்த அத்தியாயம்.

773 பாடல்களை உடையது இந்நூல். இது வல்லூர் தேவராசப் பிள்ளையவர்களால் இயற்றப்பட்டது.

## பெருங்கதை:

இது உதயணன் சரித்திரத்தைக் கூறுகின்றது; அகவற்பாக்களால் ஆகியது. பல காண்டங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. அவையாவன:

1. உஞ்சைக் காண்டம்.
2. இலாவாண காண்டம்.
3. மகத காண்டம்.
4. வத்தவ காண்டம்.
5. நரவாண காண்டம் முதலியன.

## அறநெறிச் சாரம்:

இந்நூலை இயற்றியவர் முனைப்பாடியார். தமிழ் நீதி நூல்களுள் ஒன்று; இது 226 பாடல்களை உடையது. அறம்+நெறி+சாரம் அற வழிகளில், சாரமானவற்றைக் கூறும் நூல் என்பது பொருள். இந்நூற் பாடல்கள் பல, புறத்திரட்டு என்ற நூலில் காணப்படுகின்றன. இந் நூல்,

இல்லறம், துறவறம், ஒழுக்கம் முதலியவற்றின் உண்மைகளை எளிய முறையில் எடுத்துரைக்கின்றது.

### வீர சோழியம்:

இந்நூலை இயற்றியவர் புத்தமித்திரர். இது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி முதலியவற்றைத் தெளிவாக எடுத்துரைக்கின்ற நூல். இது ஓர் இலக்கண நூல்; வீரராசேந்திரன் காலத்தில் தோன்றியது. அதனால் இப் பெயர் பெற்றது.

### இறையனாரகப் பொருள்:

இது ஒரு அகப் பொருள் இலக்கணம். மதுரையிலெழுந்திருக்கும் சோமசுந்தரக் கடவுளால் அருளிச் செய்யப்பட்டது. மூங்கைப் பிள்ளையின் முன்னிலையில் இதற்கு உரை அரங்கேற்றப்பட்டது. இதற்குப் பலர் உரை கூறினர். அவ்வுரைகளில் நக்கீரனார் உரையே தலைசிறந்ததெனத் தீர்மானிக்கப்பட்டது.

### புறப்பொருள் வெண்பா மாலை:

இதை எழுதியவர் ஐயனாரிதனார். தமிழ் இலக்கணம் ஐந்தனுள், பொருளின் பகுதியாகிய புறப் பொருளைத் தெளிவாக விளக்குவது; பன்னிரு படலத்தின் வழி நூல்; பன்னிரு படலங்களை உடையது; ஆசிரியர் சேர மரபினர். இதற்கு மாகலூர் கிழார் ஓர் உரை வகுத்துள்ளார்.

### கல்லாடம்:

இது அகப்பொருள் இலக்கணம்; அகவற் பாக்களாலாகிய நூறு பாடல்களைக் கொண்டது; இந் நூல் ஆறும் நூற்றாண்டில் தோன்றியதென்பர்; மதுரை மூதூரில் நடந்த திருவிளையாடல்கள் அனைத்தையும் விளக்குவது. இதை இயற்றியவர் கல்லாடர். "கல்லாடம் கற்றவருடன் மல்லாடாதே" என்னும் பழமொழியினால் இதன் அருமை பெருமைகளை அறியலாம்.

திருமந்திரம் :

இதை திருமூலர் இயற்றினர் ; செய்யுளடிகள் பெரும் பாலும் வெண்டளை இந்நூல் திருஞான சம்பந்தர் காலத் திற்கு முற்பட்டதென்பர்; இது சிவாகமங்களின் சாரத்தைக் கூறுவது ; திருமூலர் அருளிய சாத்திரம் 'திருமூலர் திரு மந்திரம்' என்று அழைக்கப்படுகின்றது. இவர் ஒரு சித்தர்.

ஞானமிர்தம் :

இது வாகீசரால் இயற்றப்பட்டது; சைவ சித்தாந்த நூல்; ஆறும் நூற்றாண்டிலே தோன்றியது; இந்நூல் எழுபத்தைந்து பாக்களை உடையது; அகவற்பாவால் ஆகியது; கடின உரை நடையில் அமைந்துள்ளது; இதில் பதிபசுபாசம் முதலியவற்றின் தெளிவான விளக்கங்களைக் காணலாம்.

திருக் கோவையார் :

மாணிக்க வாசகரால் இயற்றப்பட்டது; பாடல்கள் கட்டளைக் கலித்துறையால் ஆனவை. இதற்கு உரை வகுத் தவர் நச்சினார்க்கினியர் என்பர் ஒரு சாரார்; மற்றொரு சாரார், பேராசிரியர் என்பர். திருச்சிற்றம்பலக் கோவை யார் என்னும் வேறு பெயராலும் இதை அழைப்பர்.

கச்சிக் கலம்பகம் :

கலம்பகம், என்பது தமிழிலுள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று; புயவகுப்பு, அம்மானை, மதம், சித்து முதலிய பதினெண் உறுப்புக்களை உடையது. நால்வகைப் பாக்களும் பாவினங்களும் விரவி வர, அந்தாதித் தொடையால் அமையப் பாடுவது இந்நூலின் இலக்கணமாகும்.

கலப்பு + அகம் = கலம்பகம்.

இது காஞ்சியம்பதியிலுள்ள ஏகாம்பர நாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பட்ட ஒரு நூல்.

இந்நூலை இயற்றியவர் பூண்டி—அரங்கநாத முதலியார். இந்நூல் 19–ம் நூற்றுண்டின் பிற்பகுதியில் தோன்றியது.

## ஆசிய ஜோதி:

உலகத்திற்கு வழி காட்டியாய் விளங்கிய புத்த பெருமானுடைய வரலாற்றை, எட்வின் அர்னல்டு என்னும் ஆங்கில ஆசிரியர், 'ஆசிய ஜோதி' என்னும் பெயரில் ஒரு நூலை ஆங்கிலத்தில் இயற்றியுள்ளார். அந்நூலின் சில பகுதிகளை, கவி மணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் தமிழில் பாவடிவில் வரைந்துள்ளார்.

["Light of Asia" என்னும் ஆங்கில நூலின் மொழி பெயர்ப்பேயாகும் இந்நூல்.]

## நேமி நாதம்:

இது ஓர் இலக்கண நூல்; பத்து வகை அழகோடு கூடிய வெண்பாவாலாகிய நூல்; குணவீர பண்டிதரால் இயற்றப்பட்டது.

## தேம்பாவணி:

இஃதோர் கிறித்துவ மதக் காப்பியம்; இயேசுநாதரின் வரலாற்றைக் கூறுவது; இந்நூல் காவியச் சுவை பொருந்தியது. தேம்+பா+அணி என்றும், தேம்பா+அணி என்றும் பிரித்து முறையே இனிய பாடல்களின் வரிசையைக்கொண்ட நூல் என்றும், வாடாத மலர் மாலையைப் போன்றதோர் நூலென்றும் பொருள் கொள்ளலாம்.

## பெருமாள் திருமொழி:

இது, திருமாலின் பெருமைகளைக் கூறும் பாடல்களைக்கொண்டது; 105 பாடல்களை உடையது; நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் என்னும் நூலில் உள்ள முதலாயிரம் என்னும் பகுதியில் இது அமைந்துள்ளது.

# இலக்கிய அகராதி

## (நூலும்—நூலாசிரியரும்)

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| அகத்தியம் | அகத்தியர் |
| அகநானூறு | உருத்திரசன்மன் (தொகுத்தோன்) |
| ,, தொகுப்பித்தோன் | பாண்டியன் உக்கிரப் பெருவழுதி |
| அகப்பொருள் (களவியல்) | இறையனார் |
| அகப்பொருளிலக்கணம் | நாற்கவி ராசநம்பி |
| அசதிக் கோவை | ஔவையார் |
| அசோமுகி நாடகம் | அருணாசலக் கவிராயர் |
| அணியியல் விளக்கம் | சரவணப்பெருமாளையர் |
| அண்டத்துப் பரணி | ஓட்டக்கூத்தர் |
| அதிசய மாலை | அம்பலவாண தேசிகர் |
| அபிடேக மாலை | துறைமங்கலம் - சிவப்பிரகாசர் |
| அபிராமியந்தாதி | அபிராமிப் பட்டர் |
| அமலனாதிப் பிரான் | திருப்பாணாழ்வார் |
| அமிர்தசார வெண்பா | தத்துவ ராயர் |
| அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் | சிவஞான முனிவர் |
| அம்பிகாபதிக் கோவை | அம்பிகாபதி |
| அம்பிகை மாலை | குலசேகர பாண்டியன் |
| அரிசமய தீபம் | கீழை சடகோப தாசர் |
| அரிச்சந்திர புராணம் | வீரக் கவிராயர் |
| ,, ,, உரை | திரிசிரபுரம் கோவிந்தபிள்ளை |
| அருணகிரியந்தாதி | குகை நமச்சிவாயர் |
| அருணாசல புராணம் | எல்லப்ப நாவலர் |
| அருந்தமிழ் மாலை | ஔவையார் |
| அல்லி மகாராசன்-ஆரவல்லி | புகழேந்திப் புலவர் |
| அவிரோத உந்தியார் | சாந்தலிங்க தேசிகர் |
| ,, ,, உரை | சிதம்பர சுவாமிகள் |
| அழகரந்தாதி | பிள்ளைப்பெருமாளையங்கார் |

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| அழகர் கலம்பகம் | அரிபத்த நாவலர் |
| அழகர் பிள்ளைத் தமிழ் | வேப்பத்தூர் சங்கத்தார் |
| அறநெறிச் சாரம் | முனைப் பாடியார் |
| அறப்பளீசுர சதகம் | அம்பலவாணக் கவிராயர் |
| அற்புதத் திருவந்தாதி | காரைக்காலம்மையார் |
| ஆசாரக் கோவை | பெருவாயின் முள்ளியார் |
| ஆத்திசூடி | ஔவையார் |
| ,, வெண்பா | இராம பாரதி |
| ஆரூருலா | அந்தகக் கவி வீரராகவர் |
| ஆற்றூர்ப் புராணம் | திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| ஆனந்தக் களிப்பு | தாயுமானவர் |
| இசை நுணுக்கம் | சிகண்டி |
| இட்டலிங்கவகவல் | கருணைப்பிரகாச தேசிகர் |
| இரட்டைமணி மாலை | தத்துவ ராயர் |
| இரணிய வாசகப் பா | இராமசந்திரக் கவிராயர் |
| இரண்டாந் திருவந்தாதி | பூதத்தாழ்வார் |
| இரத்தினச் சுருக்கம் (வைத்தியம்) | அகத்தியர் |
| இரத்தினச் சுருக்கம் | புகழேந்திப் புலவர் |
| இராசராச சோழனுலா | ,, |
| இராம நாடகம் | அருணாசலக் கவிராயர் |
| இராமாநுஜ நூற்றந்தாதி | திருவரங்கத்தமுதனார் |
| இராமாயணம் | கம்ப நாடர் |
| ,, (உத்தர காண்டம்) | ஒட்டக்கூத்தர் |
| இருசமய விளக்கம் | அரிதாசர் |
| இருபா விருபஃது | திருணந்தி சிவாசாரியர் |
| இலக்கணக் கொத்து | சுவாமிநாத தேசிகர் (ஈசான தேசிகர்) |
| இலக்கண விளக்கச் சூறாவளி | சிவஞான முனிவர்<br>வைத்தியநாத நாவலர் |
| இலிங்க புராணம் | அதிவீர ராம பாண்டியர் |
| இளம்பூரணம் (தொல்-உரை) | இளம்பூரணர் |

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| இளைசைப் பதிற்றுப்பத்தந்தாதி | சிவஞான முனிவர் |
| இறையனாரகப் பொருளுரை | நக்கீரர் |
| இனியது நாற்பது | மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார் |
| இன்னா நாற்பது | கபிலர் |
| ஈட்டியெழுபது | ஒட்டக்கூத்தர் |
| உதயணன் கதை | உ. வே. சாமிநாதய்யர் |
| உத்தர காண்டம் (இராமாயணம்) | ஒட்டக்கூத்தர் |
| உபதேச காண்டம் | கோனேரியப்ப முதலியார் |
| உபதேச உண்மை; உபதேச உண்மைக் கட்டளை | சிதம்பர சுவாமிகள் |
| உபாய நிட்டை வெண்பா | அம்பலவாண தேசிகர் |
| உரிச்சொல் நிகண்டு | காங்கேயன் |
| உலக நீதி | உலகநாதன்; ஔவை |
| உலகம்மையந்தாதி | நமச்சிவாயப் புலவர் |
| உவமான சங்கிரகம் | திருவேங்கடையர் |
| ஊசி முறி | இடைக்காடர் |
| ஏகாம்பர நாதர் தெய்வீக உலா | இரட்டையர் |
| ஏணியேற்றம் | புகழேந்திப் புலவர் |
| ஏரெழுபது | கம்ப நாடர் |
| ஏலாதி | கணிமேதாவியார் |
| ஐங்குறுநூறு i.—குறிஞ்சி | கபிலர் |
| ,, ii.—நெய்தல் | அம்மூவனார் |
| ,, iii.—பாலை | ஓதலாந்தையார் |
| ,, iv.—மருதம் | ஓரம்போகியார் |
| ,, v.—முல்லை | பேயனார் |
| ,, தொகுத்தவர் | புலத்துறைமுற்றிய கூடலூர் கிழார் |
| ,, தொகுப்பித்தோன் | யானைகட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை |

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| கழுக்குன்றப் புராணம் | அந்தகக் கவி வீரராகவர் |
| கழுக்குன்ற மாலை | ,, |
| களவழி நாற்பது | பொய்கையார் |
| காசி காண்டம் | அதிவீரராம பாண்டியர் |
| காசி ரகசியம் | திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை |
| காஞ்சி புராணம் (1) | சிவஞான முனிவர் |
| ,, (2) | கச்சியப்ப முனிவர் |
| கார் நாற்பது | கண்ணன் கூத்தனார் |
| காளத்திப் புராணம் | கருணைப்பிரகாச தேசிகர் |
| ,, | சிவப்பிரகாச சுவாமிகள் |
| குசேலோபாக்கியானம் | வல்லூர் தேவராசப் பிள்ளை |
| குண்டலகேசி | ஆசிரியர் பெயர் தெரியவில்லை |
| குமரேச சதகம் | குருபாத தாசர் |
| குலோத்துங்க சோழனுலா | ஒட்டக்கூத்தர் |
| ,, கோவை | ,, |
| குறிஞ்சிப் பாட்டு | கபிலர் |
| குறுந்தொகை (முடித்தோன்) | பூரிக்கோ |
| குற்றாலக் குறவஞ்சி | இராசப்ப கவிராயர் |
| கூர்ம புராணம் | அதிவீரராமர் |
| கைத்தல மாலை | துறைமங்கலம் சிவப்பிரகாசர் |
| கைலாச உலா | சேரமான் பெருமாள் நாயனார் |
| கைலைபாதி காளத்திபாதி | நக்கீரர் |
| கொலை மறுத்தல் | சாந்தலிங்க தேசிகர் |
| கொன்றை வேந்தன் | ஔவையார் |
| கோயிற் புராணம் | உமாபதி சிவாசாரியர் |
| கோவிந்த சதகம் | நாராயண பாரதி |
| சகலகலாவல்லி மாலை | குமரகுருபரர் |
| சங்கர விஜயம் | தொழுவூர் வேலாயுதம் முதலியார் |

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| சடகோபரந்தாதி | கம்பர் |
| சதமணிமாலை | சிவப்பிரகாச சுவாமிகள் |
| சமுத்திர விலாசம் | கடிகைமுத்துப் புலவர் |
| சரசுவதி மாலை | காளமேகப் புலவர் |
| சரசுவதியந்தாதி | கம்பர் |
| சர்வசமய சமரச கீர்த்தனை | வேதநாயகம் பிள்ளை |
| சன்மார்க்க சித்தியார் | அம்பலவாண தேசிகர் |
| சாதிபேத விளக்கம் | உலகநாதன் |
| சிகாமணி வெண்பா | தேரையர் |
| சிங்கார ரசமஞ்சரி | மாம்பழக் கவிச்சிங்க நாவலர் |
| சிதம்பர செய்யுட்கோவை | குமரகுருபரர் |
| சிதம்பர மான்மிய வசனம் | ஆறுமுக நாவலர் |
| ,, மும்மணிக் கோவை | குமரகுருபரர் |
| சிதம்பரேசுரர் விறலிவிடுதூது | மாரிமுத்துப் பிள்ளை |
| சித்தாந்த சிகாமணி | அம்பலவாண தேசிகர் |
| ,, ,, | சிவப்பிரகாச சுவாமிகள் |
| சித்தாந்த பஃறொடை | அம்பலவாண தேசிகர் |
| ,, பிரகாசிகை | சிவஞான முனிவர் |
| சித்திரகூடப் புராணம் | இராமாநுச நாவலர் |
| சிந்தாமணி | திருத்தக்க தேவர் |
| ,, உரை | நச்சினார்க் கினியர் |
| சிலப்பதிகாரம் | இளங்கோவடிகள் |
| ,, உரை | அடியார்க்கு நல்லார் |
| சிலை எழுபது | கம்பர் |
| சிவகாமியம்மை இரட்டை மணி மாலை | குமரகுருபரர் |
| சிவஞானசித்தியார் | அருணந்தி சிவாசாரியர் |
| சிவஞான முனிவர் | சிவஞானத் தம்பிரான் |
| ஞானப்பிரகாசர் | நிரம்பவழகிய தேசிகர் |
| சிவஞான போதம் | மெய்கண்ட தேவர் |
| சிவ தத்துவ விவேகம் | சிவஞான முனிவர் |
| சிவபெருமான் திருவிரட்டை மணி மாலை | கபிலதேவ நாயனார் |

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| சிவப்பிரகாசம் | உமாபதி சிவாசாரியர் |
| சிறிய திருமடல் | திருமங்கையாழ்வார் |
| சிறுகாக்கைப் பாடினியம் | காக்கை பாடினியார் |
| சிறுபஞ்ச மூலம் | காரியாசான் |
| சிறுபாணாற்றுப் படை | இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் |
| சிற்றகத்தியம் | அகத்தியர் |
| சின்னூல் நேமி நாதம் | குணவீர பண்டிதர் |
| சீகாழிப் புராணம் | அருணாசலக் கவிராயர் |
| சீவக சிந்தாமணி | திருத்தக்க தேவர் |
| சீறாப் புராணம் | உமறுப் புலவர் |
| சுகுண சுந்தரி | வேதநாயகம் பிள்ளை |
| சுபத்திரை மாலை | புகழேந்தி |
| சூடாமணி நிகண்டு | மண்டல புலவர் |
| சூளாமணி | தோலா மொழித் தேவர் |
| செவ்வந்திப் புராணம் | எல்லப்ப நாவலர் |
| சேக்கிழார் புராணம் | உமாபதி சிவாசாரியர் |
| சேது புராணம் | நிரம்பவழகிய தேசிகர் |
| (சேந்தன்) திவாகரம் | திவாகரர் |
| சேனாவரையம் தொ. சொல். உரை | சேனாவரையர் |
| சைவ வினா விடை | ஆறுமுக நாவலர் |
| சோணசைல மாலை | சிவப்பிரகாச சுவாமிகள் |
| சோமேசர் முதுமொழி வெண்பா | சிவஞான முனிவர் |
| ஞான நூறு வேதாந்தம் | சட்டை முனி |
| ஞான மதியுள்ளான் | முத்தானந்த சுவாமிகள் |
| ஞான வாசிட்டம் | ஆளவந்தார் |
| ஞான வாசிட்ட உரை | அருணாசல சுவாமிகள் |
| ஞானவினோதன்கலம்பகம் | தத்துவராயர் |
| ஞானாமிருதம் | வாகீசர் |

† இவை தற்காலத்தில் கிடைத்தில.

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| தக்க யாகப் பரணி | கூத்தன் கவிச் சக்கரவர்த்தி |
| தச காரியம் | சுவாமிநாத தேசிகர் |
| தஞ்சைவாணன் கோவை | பொய்யாமொழிப் புலவர் |
| ,, (உரை) | சொக்கப்ப நாவலர் |
| தணிகைப் புராணம் | கச்சியப்ப முனிவர் |
| தணிகையாற்றுப் படை | ,, |
| தண்டியலங்காரம் | தண்டியாசிரியர் |
| தருக்க சங்கிரக தீபிகை | சிவஞான முனிவர் |
| தாயுமானவர் பாடல் | தாயுமானவர் |
| திக்கு விஜயம் | கடிகை முத்துப் புலவர் |
| திணைமாலை நூற்றைம்பது | கணிமேதாவியர் |
| திணைமொழியைம்பது | சாத்தந்தையார் மகனார் கண்ணன் சேந்தனார் |
| திரிகடுகம் | நல்லாதனார் |
| திருக்கருவைக் கலித்துறையந்தாதி | அதிவீரராம பாண்டியர் |
| திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி | ,, ,, |
| திருக்கருவை வெண்பாவந்தாதி | ,, ,, |
| திருக்கழுமல மும்மணிக்கோவை | பட்டினத்துப் பிள்ளையார் |
| திருக்குறள் | திருவள்ளுவர் |
| ,, (உரை) | பலர் |
| திருக்குறுந்தாண்டகம் | திருமங்கையாழ்வார் |
| திருக்குற்றாலப் புராணம் | திரிகூட ராசப்பக் கவிராயர் |
| திருக்கூவப் புராணம் | சிவப்பிரகாச சுவாமிகள் |
| திருச்சந்த விருத்தம் | திருமழிசையாழ்வார் |
| திருச்சிற்றம்பலக் கோவை | மாணிக்கவாசகர் |
| திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி | கச்சியப்பமுனிவர் |
| திருத்தில்லை யமகவந்தாதி | மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| திருத்தொண்டத் தொகை | சுந்தரமூர்த்தி நாயனார் |

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| திருத்தொண்டர் திருவந்தாதி | நம்பியாண்டார் நம்பி |
| திருத்தொண்டர் புராணம் | சேக்கிழார் |
| திருநெடுந்தாண்டகம் | திருமங்கையாழ்வார் |
| திருப்பல்லாண்டு | பெரியாழ்வார் |
| திருப்பள்ளியெழுச்சி | தொண்டரடிப்பொடியாழ்வார் |
| திருப்பாதிரியூர்ப் புராணம் | சிதம்பர சுவாமிகள் |
| திருப்பாவை | ஆண்டாள் |
| திருப்புகழ் | அருணகிரிநாதர் |
| திருப்பெருந்துறைப் புராணம் | மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| திருமயிலைப் புராணம் | |
| திருமாலை | தொண்டரடிப்பொடியாழ்வார் |
| திருமுருகாற்றுப் படை | நக்கீரர் |
| திருமூலர்-திருமந்திரம் | திருமூல நாயனார் |
| திருவந்தாதி | சேரமான்பெருமாள்நாயனார் |
| திருவருட்பா | இராமலிங்கவடிகள் |
| திருவருணைக் கலம்பகம் | எல்லப்ப நாவலர் |
| திருவள்ளுவ மாலை | கடைச்சங்கத்துப் புலவர்கள் |
| திருவாசகம் | மாணிக்கவாசகர் |
| திருவாசிரியம் | நம்மாழ்வார் |
| திருவாய்மொழி | ,, |
| திருவாரூர் நான்மணிமாலை | குமரகுருபர சுவாமிகள் |
| திருவாரூர் மும்மணிக் கோவை | சேரமான்பெருமாள்நாயனார் |
| திருவானைக்காப் புராணம் | கச்சியப்ப முனிவர் |
| திருவிடைமருதூர் அந்தாதி | கடிகைமுத்துப் புலவர் |
| ,, மும்மணிக் கோவை | பட்டினத்துப் பிள்ளையார் |
| திருவிரட்டை மணிமாலை | காரைக்காலம்மையார் |
| திருவிருத்தம் | நம்மாழ்வார் |

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| திருவிளையாடற்புராணம் | பரஞ்சோதிமுனிவர் |
| ,, (உரைநடை) | ஆறுமுக நாவலர் |
| திருவெண்காட்டுப் புராணம் | எல்லப்ப நாவலர் |
| திருவேகம்ப மாலை | பட்டினத்துப் பிள்ளையார் |
| திருவேங்கட சதகம் | நாராயண பாரதியார் |
| திருவேங்கடத்தந்தாதி | பிள்ளைப்பெருமாளையங்கார் |
| திருவேங்கட மாலை | ,, ,, |
| திருவேங்கடவனுபூதி | இராமானுச கவிராயர் |
| தில்லைக் கலம்பகம் | இரட்டையர் |
| துறைசைக் கோவை | சுப்பிரமணிய முனிவர் |
| ,, வெண்பா | சிவப்பிரகாச சுவாமிகள் |
| தேம்பாவணி | வீரமாமுனிவர் |
| தேவாரம் | சுந்தரர்<br>திருஞான சம்பந்தர்<br>திருநாவுக்கரசு நாயனார் |
| தொண்டைமண்டல சதகம் | படிக்காசுப் புலவர் |
| தொல்காப்பியம் | தொல்காப்பியர் |
| ,, (உரை நூல்கள்) | இளம்பூரணர்<br>கல்லாடர்<br>சேனாவரையர்<br>நச்சினார்க்கினியர்<br>பேராசிரியர் |
| நந்தனார் சரித்திர கீர்த்தனம் | கோபாலகிருட்டிணையர் |
| நந்திக் கலம்பகம் | நந்திவர்மன் சகோதரன் |
| நல்வழி | ஔவையார் |
| நளவெண்பா | புகழேந்திப் புலவர் |
| நறுந்தொகை | அதிவீரராமர் |
| நற்றிணை | பன்னாடுதந்த பாண்டியன் மாறன் வழுதி |
| நன்னூல் | பவணந்தி முனிவர் |
| நன்னெறி | சிவப்பிரகாச சுவாமிகள் |
| நாககுமார காவியம் | ஆசிரியர் பெயர் தெரியவில்லை |

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| நாராயண சதகம் | நாராயண தாசர் |
| நாலடியார் | பதுமனார் (தொகுத்தது) |
| நால்வர் நான்மணிமாலை | சிவப்பிரகாச சுவாமிகள் |
| நான்மணிக்கடிகை | விளம்பிநாகனார் |
| நிரஞ்சனமாலை | சிவப்பிரகாச சுவாமிகள் |
| நீதிநெறி விளக்கம் | குமரகுருபரர் |
| நீலகேசி | ஆசிரியர் பெயர் தெரியவில்லை |
| நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி | பிள்ளைப்பெருமாளையங்கார் |
| நெடுநல்வாடை | நக்கீரர் |
| நேமிநாதம் | குணவீரபண்டிதர் |
| நைடதம் | அதிவீரராம பாண்டியர் |
| பஞ்சதந்திரப் பாடல் | வீரமார்த்தாண்ட தேவர் |
| பட்டினப் பாலை | கடியலூர் உருத்திரங்கண்ணனார் |
| பதிற்றுப்பத்து : | |
| ,, இரண்டாம் பத்து | குமட்டூர் கண்ணனார் |
| ,, மூன்றாம் பத்து | பாலைக் கௌதமனார் |
| ,, நான்காம் பத்து | காப்பியாற்றுக்காப்பியனார் |
| ,, ஐந்தாம் பத்து | பரணர் |
| ,, ஆறாம் பத்து | காக்கைபாடினியார் |
| ,, ஏழாம் பத்து | கபிலர் |
| ,, எட்டாம் பத்து | அரிசில்கிழார் |
| ,, ஒன்பதாம் பத்து | பெருங்குன்றூர்கிழார் |
| பத்துப் பாட்டு (உரை) | நச்சினார்க்கினியர் |
| பரிபாடல் | எட்டுத்தொகையிலொன்று |
| பழமலையந்தாதி | சிவப்பிரகாச சுவாமிகள் |
| பழமொழி நானூறு | முன்றுறையரையனார் |
| பன்னிரு படலம் | அகத்தியர் மாணவர் பன்னிருவர் |
| பாரதம் | நல்லாப் பிள்ளை |
| பாரத வெண்பா | பெருந்தேவனார் |

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| பாரி காதை | ரா. ராகவையங்கார் |
| பால பாடம் | ஆறுமுக நாவலர் |
| பிங்கலம் (நிகண்டு) | பிங்கலர் |
| பிரதாப முதலியார் சரித்திரம் | வேதநாயகம் பிள்ளை |
| பிரபுலிங்க லீலை | சிவப்பிரகாச சுவாமிகள் |
| பிரபோத சந்திரோதயம் | திருவேங்கட சுவாமிகள் |
| பிரமோத்தர காண்டம் | வரதுங்கராம பாண்டியன் |
| பிரயோக விவேகம் | சுப்பிரமணிய தீக்ஷிதர் |
| புலவராற்றுப்படை | திருக்குருகூர் சிறிய இரத்தினக் கவிராயர் |
| புலவர் புராணம் | முருகதாச சுவாமி |
| புறநானூறு | எட்டுத்தொகையிலொன்று |
| புறப்பொருள் வெண்பாமாலை | ஐயனாரிதனார் |
| பெண்மதி மாலை | வேதநாயகம் பிள்ளை |
| பெரிய திருமடல் | திருமங்கையாழ்வார் |
| பெரிய திருமொழி | ,, |
| பெரிய திருவந்தாதி | நம்மாழ்வார் |
| பெரிய புராணம் | சேக்கிழார் |
| ,, வசனம் | ஆறுமுக நாவலர் |
| பெருமாள் திருமொழி | குலசேகராழ்வார் |
| பெரும்பாணாற்றுப்படை | கடியலூர் உருத்திரங் கண்ணனார் |
| பொருநராற்றுப் படை | முடத்தாமக் கண்ணியார் |
| மணிமேகலை | மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் |
| மதிவாணன் (நாடக நூல்) | வி. கோ. சூ. |
| மதுரைக் கலம்பகம் | குமரகுருபர சுவாமிகள் |
| மதுரைக் காஞ்சி | மாங்குடி மருதனார் |
| மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி | பரஞ்சோதி முனிவர் |

| நூல் | ஆசிரியர் |
|---|---|
| மலைபடுகடாம் | இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் |
| மனுமுறை கண்ட வாசகம் | வள்ளலார் |
| மாறனலங்காரம் | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் |
| மாரிவாயில் | சோமசுந்தர பாரதியார் |
| மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை | குமரகுருபரர் |
| மீனாட்சியம்மை குறம் | குமரகுருபரர் |
| மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் | குமரகுருபரர் |
| முதுமொழிக் காஞ்சி | மதுரை கூடலூர்கிழார் |
| முத்துக்குமாரசாமிபிள்ளைத் தமிழ் | குமரகுருபரர் |
| முத்தொள்ளாயிரம் | கடைச்சங்கப் புலவர் |
| மும்மணிக் கோவை | சேரமான் பெருமாள் நாயனார் |
| முல்லைப் பாட்டு | நப்பூதனார் |
| மூதுரை | அவ்வையார் |
| யசோதர காவியம் | ஐஞ்சிறுங் காப்பியங்களிலொன்று |
| யாப்பருங்கலக் காரிகை | அமிர்தசாகர முனிவர் |
| வளையாபதி | ஐம்பெருங் காப்பியங்களிலொன்று |
| விநாயக புராணம் | கச்சியப்ப முனிவர் |
| விவேக சிந்தாமணி | நிசகுண யோகியார் |
| வீர சோழியம் | புத்தமித்திரர் |
| வெண்பாப் பாட்டியல் | குணவீர பண்டிதர் |
| வெற்றிவேற்கை | அதிவீரராம பாண்டியர் |

புலவர் அகராதியில் வந்துள்ள நூல்களின்
பெயர்கள்மட்டும் - முற்றிற்று.

# பொதுப் பிழைக் களைவு

பிழை—திருத்தம்

அகண்ட-அகன்ற
அண்ணாக்கயிறு - அரைஞாண்கயிறு
அதிஷ்டம்-அதிருஷ்டம்
அதுகள்-அவை
அம்மாள்-அம்மை
அமக்களம்-அமர்க்களம்
அழும்பு-அழிம்பு
அப்பார்-அப்பனார்
அபருதம்-அபராதம்
அணியாயம்-அநியாயம்
அய்யர்-ஐயர்
ஆச்சு-ஆயிற்று
ஆத்துக்கு-அகத்துக்கு
ஆக்ஷி-ஆட்சி
ஆமா-ஆம்
ஆம்படையான்-அகமுடையான்
இத்தினி-இத்தனை
இரும்பல்-இருமல்
இருக்குது-இருக்கிறது
இண்ணைக்கி-இன்று
இடதுகை-இடக்கை
உசிர்-உயிர்
உத்திரவு-உத்தரவு
உடமை-உடைமை
உறுமால்-உருமால்
ஊரணி-ஊருணி
எடக்கு-இடக்கு
எண்ணை-எண்ணெய்
ஒலக்கை-உலக்கை

பிழை—திருத்தம்

ஒருவள்-ஒருத்தி
ஒண்டியாய்-ஒன்றியாய்
ஒருக்கால்-ஒருகால்
கடகால்-கடைக்கால்
கடுவு-கடுகு
காக்ஷி-காட்சி
கயறு-கயிறு
கண்ணாலம்-கலியாணம்
கத்திரிக்காய்-கத்தரிக்காய்
கட்டிடம்-கட்டடம்
கற்க்கண்டு-கற்கண்டு
கன்ரு-கன்று
கிருமம்-கிராமம்
கினவு-கனா
கேழ்வி-கேள்வி
கொடக்கூலி-குடிக்கூலி
கெடியாரம்-கடிகாரம்
கடப்பாறை-கடப்பாரை
கோர்த்து-கோத்து
கறுமை-கருமை
கோடாலி-கோடரி
கோமணம்-கோவணம்
கொன்ரான்-கொன்றான்
சமயல்-சமையல்
சக்களத்தி-சகக்களத்தி
சாக்கடை-சாய்கடை
சந்தணம்-சந்தனம்
சிலவு-செலவு
சிலது-சில
சிகப்பு-சிவப்பு
சிக்காய்-சிகைக்காய்

பிழை—திருத்தம்

சீதபேதி-சிலபேதி
சுதந்திரம்-சுதந்தரம்
சுவற்றில்-சுவரில்
சேதி-செய்தி
சொற்பனம்-சொப்பனம்
தவக்களை - தவளை
தலகாணி - தலையணை
தாப்பாள்-தாழ்ப்பாள்
தாவாரம் - தாழ்வாரம்
திரேகம்- தேகம்
துளிர்-தளிர்
துடங்கு-தொடங்கு
தொக்கி-தொக்கு
தொந்திரவு-தொந்தரவு
நஞ்சை-நன்செய்
நாத்தம்-நாற்றம்
நாசுவன் -நாவிதன்
நிகளம்-நீளம்
நேத்து-நேற்று
நொங்கு-நுங்கு
புடவை-புடைவை
பிருமணன் -பிராமணன்
பயிறு-பயறு
பாகக்காய் - பாவற்காய்
பலது-பல
பழவம்-பவழம்
பலம்-பழம்

பிழை—திருத்தம்

பயிற்ச்சி-பயிற்சி
புஞ்சை-புன்செய்
மாவிலை -மாயிலை
மாங்காமரம் -மாமரம்
முழுங்கு-விழுங்கு
முந்தாணி-முன்றானை
முயற்சித்தான்–முயன்றான்
முயற்ச்சி -முயற்சி
மெரித்தான்-மிதித்தான்
ரண்டகம்-இரண்டகம்
லக்கம் -இலக்கம்
ரொம்ப-நிரம்ப
வயறு -வயிறு
வாய்வு -வாயு
வலதுகை-வலக்கை
விற்க்கும்-விற்கும்
வெங்கலம்–வெண்கலம்
விற்ப்பான்-விற்பான்
வெக்கம்-வெட்கம்
வெண்ணை -வெண்ணெய்
வேண்டா-வேண்டாம்
வென்னீர்-வெந்நீர்
வுண்டு-உண்டு
வேணும்-வேண்டும்
விநயகன்-விநாயகன்
வூசி-ஊசி

## ரகர றகர வேறுபாடு

அரம்-ஆயுதம்
அறம்-தருமம்
அரா-பாம்பு
அறா-நீங்காத
அரி-திருமால்; சிங்கம்
அறி-தெரிந்துகொள்
அரவு-பாம்பு
அறவு-முடிவு
அருகு-பக்கம்; அண்மை
அறுகு-ஒருவித புல்
அரை-பாதி
அறை-அறைதல்
அலரி-ஒருவித மலர்
அலறி-பதைபதைத்து
அறுந்து-விடுபட்டு
அருந்து-சாப்பிடு
ஆரை-சக்கரவுறுப்பு
ஆறை-ஆற்றார்
ஆர-பொருந்த
ஆற-தணிய
இர-யாசி
இற-சா
இரங்கு-மனமிரங்குதல்
இறங்கு-கீழே இறங்கு
இரை-விலங்குணவு
இறை-அரசன்; கடவுள்
இரும்பு-ஓர் உலோகம்
இறும்பு-சிறிய காடு
உரல்-கருவி
உறல்-பொருந்துதல்
உரவு-வலிமை [சொந்தம்
உறவு-கலந்து வாழ்தல்;

உரி-தோல் உரித்தல்
உறி-கருவி
உரிய-சொந்தமான
உறிய-உறிஞ்சு
உரு-வடிவம்
உறு-மிகுந்த
உருமி-புழுங்கு
உறுமி-பறை
உரை-சொல்
உறை-மேலுறை
ஊர-நகர
ஊற-நனைய
எறி-வீசு
எரி-நெருப்பு
ஏரி-நீர் நிலை
ஏறி-ஏறுதல்
ஒரு-ஒன்று
ஒறு-தண்டி
கர-மறை
கற-கறத்தல்; பால் பீச்சு.
கரம்-கை
கறம்-வர்மம்
கரி-யானை
கறி-பதார்த்தம்
கருத்து-எண்ணம்
கறுத்து-கோபித்து [சம்
கருப்பு-நிறம்; வற்கடம்; பஞ்
கறுப்பு-கோபம்; கருமை
கரை-ஓரம்; அழு [நிறம்
கறை-களங்கம்
கிரி-மலை
கிறி-இடும்பு

குரம்-குளம்பு
குறம்-குறி சொல்லல்
கிரி-ஓர் பிராணி
கிறி-அறுத்து
குரங்கு-வானரம்
குறங்கு-தொடை
குரவன்-பெரியோன் [தினர்
குறவன்-ஒரு வகைக் குலத்
குரவை-கூத்து
குறவை-ஒருவகை மீன்
குரல்-ஓசை
குறள்-திருக்குறள்
குரு-ஆசிரியர் ; நிறம்
குறு-குட்டையான
குருகு-நாரை
குறுகு-கிட்டு
குருக்கு-ஒருவிதச் செடி
குறுக்கு-சுருக்கு
குரும்பை-தென்னை ; பனையின் பிஞ்சு
குறும்பை-ஆடு
குரை-குலைத்தல்
குறை-நிரம்பாமை
கூரிய-கூர்மையான
கூறிய-சொல்லிய
கூரை-முகடு
கூறை-ஆடை
கோரல்-விரும்பல்
கோறல்-கொல்லல்
சாருதல்-அடைதல்
சாறுதல்-தானியங்களைப் பெருக்குதல்
சீரிய-சிறந்த
சீறிய-கோபித்த
சுரா-கள்
சுறா-மீன்
சூரை-செடி
சூறை-கொள்ளை
செரித்தல்-சீரணித்தல்
செறித்தல்-நெருங்குதல்
செரு-போர்
செறு-கோபி
சொரி-பொழி
சொறி-ஒருவித நோய்
சேரல்-அடைதல்
சேறல்-செல்லுதல்
சுவர்-மதில்
சுவறு-ஊறு
தரி-அணி
தறி-கருவி
தரு-மரம்
தறு-கட்டு
திரம்-உறுதி
திறம்-வலிமை
திரை-அலை ; சுருங்குதல்
திறை-கப்பம்
துர-செலுத்து
துற-நீக்கு
துரு-அழுக்கு
துறு-நெருங்கு
துரை-பிரபு [துறை
துறை-பிரிவு ; வகை ; நீர்த்
தெரி-அறிந்துகொள்
தெறி-சிதறு
தெரு-வீதி
தெறு-அழி
தேரல்-ஆராய்தல்
தேறல்-தெளிதல்

நரை-வெண்மயிர்
நறை-தேன்
நிரை-வரிசை; அசை
நிறை-கற்பு; நிறுத்தல்
நாரி-பெண்
நாறி-நறுமணம் வீசி
நிறுத்தம்-தடை
நிருத்தம்-காட்டியம்
நெரி-நசுக்கு
நெறி-வழி
பரந்த-பரவிய
பறந்த-வானத்தில் பறந்த
பரவை-கடல்
பறவை-பட்சி
பரம்பு-பரம்படித்தல்
பறம்பு-பாரியின் மலை
பரி-வருந்து
பறி-பொன்; பிடுங்கு
பரை-பார்வதி
பறை-மேளம்
பாரை-கடப்பாரை
பாறை-கற்பாறை
பிரை-புளித்த மோர்
பிறை-சந்திரன்
புரம்-ஊர்; நகர்
புறம்-பக்கம்
புரவு-காத்தல்
புறவு-புறம்போக்கு
பெரு-பெரிய
பெறு-அடை
பொரி-தானியப் பொரி
பொறி-இயந்திரம்; புலன்
பொரு-பொருந்து
பொறு-காத்திரு
பொருக்கு-பருக்கை
பொறுக்கு-தெரிந்தெடு
பொருப்பு-மலை
பொறுப்பு-உத்தரவாதம்
மர-உணர்ச்சியறு
மற-மறத்தல்
மரம்-தாவரம்
மறம்-வீரம்; பாவம்
மரல்-பூண்டு
மறல்-வீரம்; பாவம்
மரி-இற
மறி-ஆட்டிக் குட்டி
மாரி-மழை
மாறி-வேறுபட்டு
மறு-களங்கம்; குற்றம்
மரு-பூண்டு
மருகு-மருக்கொழுந்து
மறுகு-மயக்கு
மரை-தாமரை
மறை-வேதம்
மாரன்-மன்மதன்
மாறன்-பாண்டியன்
முருகு-வாசனை
முறுகு-திருகு
வரை-மலை
வறை-பொறித்த காய்கறி
விரகு-தந்திரம்
விறகு-எரிக்குங்கட்டை
விரல்-கை, கால் விரல்
விறல்-வெற்றி
விரை-விதை
விறை-குளிரால் நடுங்கு
வெரு-அச்சம்
வெறு-பகை

வரம்-அருள்
வறம்-வறட்சி
வீரி-காளி
வீறி-உயர்ந்தோங்கி
முரி-ஒடி
முறி-ஓலை; தளிர்

மருகி-மருமகள்
மறுகி-தயங்கி
மெய்யுரை-உண்மையுரை
மெய்யுறை-சட்டை
வருத்தல்-துன்புறுத்தல்
வறுத்தல்-துவட்டுதல்

---

## லகர ளகர வேறுபாடு

அலி-ஆண் பேடி; ஆண் - பெண் பொது
அளி-கொடு
இலை-தழை
இளை-மெலி
எல்-கதிரவன்
எள்-தானியம்
ஒலி-சத்தம்
ஒளி-பிரகாசம்
கலம்-பாத்திரம்
களம்-போர்க் களம், நெற்களம்

குலம்-சாதி
குளம்-நீர் நிலை
தலை-முதல்; உறுப்பு
தளை-கட்டு; விலங்கிடல்
துலை-துலாக்கோல்
துளை-துவாரம்
நால்-நான்கு
நாள்-தினம்
நீலம்-நிறம்; மலர்
நீளம்-அளவு

---

## ளகர ழகர வேறுபாடு

அளகு-கோழி
அழகு-அலங்காரம்
அளம்-உப்பு
அழம்-பிணம்
அளி-கொடு; வண்டு
அழி-கெடு
அளை-கல
அழை-கூப்பிடு

ஆளி-மன்னன்; சிங்கம்
ஆழி-கடல்; மோதிரம்; சக்கரம்
ஆள்-அரசு செய்
ஆழ்-மூழ்கு
இளை-மெலி
இழை-நூல்; நுட்பம்
இளி-தாழ்வு
இழி-பழி

உளவு-வேவு
உழவு-உழுதல்
உளி-கருவி
உழி-இடம்; ஏழனுருபு
உளை-சேறு
உழை-வருந்தி வேலை செய்
ஒளி-மறை
ஒழி-அழி
களை-அழகு
கழை-தடி; மூங்கில்
காளி-துர்க்கை
காழி-சீகாழி
களி-மகிழ்
கழி-நீக்கு
சீகாளி-திருக்காளி
சீகாழி-ஓரூர்
காள்-நாயொலி
காழ்-வைரம்
கிளவி-சொல்
கிழவி-வயதடைந்தவள்
கிளி-பறவை
கிழி-பணமுடிப்பு
கீள்-தோண்டு
கீழ்-கீழே
குளவி-வண்டு
குழவி-குழந்தை
குளம்பு-விலங்கின்பாதம்
குழம்பு-காய்கறிக்குழம்பு
குளி-நீராடுதல்
குழி-பள்ளம்
கூளம்-தூசி
கூழம்-எள்
கூளி-பேய்
கூழி-குள்ளப்பசு
கேள்-வினவு
கேழ்-பொருந்து; நிறம்
கோளி-கொள்பவன்
கோழி-பறவை
சுளி-சினங்கொள்
சுழி-வட்டமிடு
சூள்-ஆணை
சூழ்-சூழ்ந்துகொள்
கொளுந்து-எரி
கொழுந்து-இள இலை
சளி-குளிர்
சழி-சப்பையாகு
சோளம்-தானியம்
சோழம்-நாடு
தளை-கட்டு
தழை-இலை; குழை
தாளம்-கைத்தாளம்
தாழம்-கீழ்மை; தாழ்வு
தாளி-கள்ளி
தாழி-பெரும்பானை
தாள்-முயற்சி; பாதம்
தாழ்-இறங்கு
தெளி-சிதறு
தெழி-அதட்டு
தோளன்-தோளையுடையவன்
தோழன்-நண்பன்
நாளி-நாய்
நாழி-படி; நாழிகை
பளு-பாரம்
பழு-கனி
நுளை-செம்படவர் குலம்
நுழை-புகு
பாளி-பாழை
பாழி-குளம்

பாளை-மடல்
பாழை-பாடை
பாள்-கம்பி
பாழ்-வீண்
பீளை-கண் அழுக்கு
பீழை-துன்பம்
புளுகு-பொய்
புழுகு-புனுகு
பொளி-கொத்து
பொழி-ஊற்று
முளவு-முள்ளம்பன்றி
முழவு-மத்தளம்
முளை-தோன்று
முழை-குகை
மூளை-அறிவின் இடம்
மூழை-துடுப்பு
மூள்-மிகு
மூழ்-மூடு
வளி-காற்று
வழி-செல்லும் பாதை
வளை-முற்றுகையிடு
வழை-சுரபுன்னை
வாளா-சும்மா
வாழா-வாழ்ந்து
வாளி-அம்பு
வாழி-வாழ்க
வாளை-மீன்
வாழை-மரம்
வாள்-கத்தி
வாழ்-வாழ்ந்திரு
விளா-மரம்
விழா-திருவிழா
விளி-அழை
விழி-பார்; கண்
விளை-தோற்றுவித்தல்; விளைவித்தல்; வளர்தல்
விழை-விரும்பு
வேளம்-பகையரசமகளிர் சிறைக்களம்
வேழம்-யானை

எஸ். எஸ். அருணகிரிநாதர் எழுதிய

# மும்மணிகள்

அறிவு—அனுபவம் நிறைந்தவைகள்.



## "மனைவியின் கடமை"

மனைவி, தங்கை, தமக்கை, அண்ணி, அத்தை, தாயார் அனைவரும் படிக்க வேண்டிய புத்தகம். இதைப் படிக்கும் பெண்கள் குடும்ப விளக்குபோல் விளங்குவார்கள் என்பது உண்மை. விலை ரூ. 2—8—0.

---

## "வாழ்வதற்கு வழி"

இதைப் படிப்பவர்களிடம் செல்வம் வளரும்; இன்பம் பெருகும்; வாழ்க்கை வளமடையும். இதை எல்லோரும் படித்து வாழ்வதற்கு ஏற்ற வழியை அறிந்துகொள்ள வேண்டியது அவசியம். விலை ரூ. 2—8—0.

---

## "பேரும் புகழும்"

"பேரும் புகழும்" எல்லா நன்மைகளுக்கும் அடிப்படையாய் இருக்கின்றன. ஆகவே "பேரும் புகழும்" வேண்டுமென்று பணக்காரரும் ஆசைப்படுகிறார்; ஏழையும் ஆசைப்படுகிறார். ஆசைப்பட்டால் போதுமா? "பேரும் புகழும்" பெறுவது எப்படி? "பேரும் புகழும்" பெறுவதற்குச் சுலபமான, எல்லோரும் அனுசரிக்கக்கூடிய, வழிகள் பல இருக்கின்றன. அந்த வழிகள் "பேரும் புகழும்" என்னும் இந்தப் புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கின்றன. ஆகவே இந்தப் புத்தகத்தைப் படிப்பவர்கள் எங்கெங்கும் "பேரும் புகழும்" பெற்று விளங்குவார்கள் என்பது திண்ணம். விலை ரூ. 2-8-0.

---

எம். துரைசாமி முதலியார் அண்டு கோ.,
1-1, மலையபெருமாள் தெரு, சென்னை-1.